மனிதசாதி இரட்சிக்கப்படுவதற்காகச்

சருவலோக

தயாபரரான யெகோவா அருளிச்செய்த

# சத்தியவேதம் என்கிற

புதிய

# ஏற்பாடு.

மத்தேயு என்பவர் எழுதின

# சுவிசேஷம்.

---

THE

# GOSPEL ACCORDING TO ST. MATTHEW.

PUBLISHED BY THE JAFFNA AUXILIARY BIBLE SOCIETY.

---

American Mission Press, Jaffna.
1841.

# வேதாகமங்களின் பெயர்.

## பழைய ஏற்பாடு.

மோசேயின் ௫. ஆகமம்.
யோசுவாவின் புத்தகம்
நியாயாதிபதிகளின் புத்தகம்
உரூத்தின் சரித்திரம்
௧. ௨. சாமுவேல்
௧. ௨. இராசாக்கள்
௧. ௨. நாளாகமம்
எஸ்றாவின் புஸ்தகம்
நெகேமியாவின் "
எஸ்தரின் "
யோபுடைய சரித்திரம்
வேத சங்கீதம்
நீதிமொழி
பிரசங்கியின் புத்தகம்
சாலோமோனின் உன்னத பாட்டுக்கள்
ஏசாயாவின் தீர்க்கதரிசனம்
யெரேமியாவின் தீர்க்க.
யெரேமியாவின் புலம்பல்
எசேக்கியேலின் தீர்க்கதரிசனம்
தானியேலின் "
ஓசேயாவின் "
யோவேலின் "
ஆமோசின் "
ஒபதியாவின் "
யோனாவின் "
மீகாவின் "
நாகூமின் "
ஆபகூக்கின் "
செப்பனியாவின் "
ஆகாயின் "
சகரியாவின் "
மல்கியாவின் "

---

## புதிய ஏற்பாடு.

மத்தேயுவின் சுவிசேஷம்
மாற்கு "
லூக்கா "
யோவான் "
அப்போஸ்தலர் நடபடி
உரோமர்
௧. ௨. கொரிந்தர்
கலாத்தியர்
எபேசர்
பிலிப்பியர்
கொலோசர்
௧. ௨. தெசலோனிக்கேயர்
௧. ௨. தீமோத்தேயு
தீத்து
பிலேமோன்
எபிரேயர்
யாக்கோபு
௧. ௨. பேதுரு
௧. ௨. ௩. யோவான்
யூதா
வெளிப்படுத்தின விசேஷம்

# மத்தேயு என்பவர் எழுதின சுவிசேஷம்.

---

## ௧. அதிகாரம்.

[(கிறிஸ்துவினுடை வமிசவரிசையின் அட்டவணை. (௰௮) அவருடைய உற்பத்தியின் விபரம். (உக-உங.) அவருடைய நாமங்கள்.

1 ஆபிரகாமின் சந்ததியாகிய தாவீதின் சந்ததியாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவினுடைய வமிசவரிசையின் அட்டவணையாவ
2 து.—ஆபிரகாம் ஈசாக்கைப்பெற்றான், ஈசாக்கு யாக்கோபைப்பெற்றான். யாக்கோபு யூதாமுதலான குமாரர்களைப்
3 பெற்றான்.—யூதா தாமாரென்பவளைச் சேர்ந்து பாரேசையுஞ்சாராவையும்பெற்றான். பாரேசு எசுரோமைப் பெற்றா
4 ன்.—எசுரோம் ஆராமைப்பெற்றான். ஆராம் அமின்தாபைப்பெற்றான். அமின்
5 தாபு நகசோனைப்பெற்றான்.—நகசோன் சல்மோனைப்பெற்றான். சல்மோன்

இராகாப்பென்பவளைச் சேர்ந்து போ
வோசைப்பெற்றான். போவோசு உருத்
தென்பவளைச்சேர்ந்து ஓபேத்தைப்பெ
ற்றான். ஓபேத்து எசேயைப்பெற்றான்.
—எசே இராசனாகிய தாவீதைப்பெற்றா 6
ன். இராசனாகிய தாவீது ஊரியாவுக்கும
னைவியாயிருந்தவளைச்சேர்ந்து சொலோ
மோனைப்பெற்றான். —சொலோமோ 7
ன் உரோபோவாமைப்பெற்றான். உ
ரோபோவாம் அபியாவைப்பெற்றான்.
அபியா அசாவைப்பெற்றான்.— அசா 8
யோசபாத்தைப் பெற்றான். யோசபாத்
து யோராமைப்பெற்றான். யோராம் ஒ
சியாவைப்பெற்றான்.—ஒசியா யோத்தா 9
மைப்பெற்றான். யோத்தாம் ஆகாசைப்
பெற்றான். ஆகாசு எசேக்கியாவைப்பெ
ற்றான்.-எசேக்கியா மனாசேயைப் பெற் 10
றான். மனாசே அம்மோனைப்பெற்றான்.
அம்மோன் யோசியாவைப்பெற்றான்.-
(யூதர்கள்) பாபிலோன்தேசத்துக்குச் 11
சிறைப்பட்டுப்போகுங்காலத்திலேயோ
சியர் எகோனியர்முதலான குமாரர்களை
ப்பெற்றான்.-அவர்கள் பாபிலோன்தேச 12

த்துக்குச் சிறையாகக்கொண்டுபோகப்
பட்டபின்பு எகோனியா சாலாத்தியேலை
ப்பெற்றான். சாலாத்தியேல் சொரோபா
13 பேலைப் பெற்றான்.-சொரோபாபேல்
அபியூதைப்பெற்றான். அபியூது எலியா
க்கீமைப்பெற்றான். எலியாக்கீம் அசோ
14 ரைப்பெற்றான்.—அசோர் சாதோக்கை
ப்பெற்றான். சாதோக்கு ஆகீமைப்பெ
ற்றான். ஆகீம் எலியூதைப்பெற்றான்.—
15 எலியூது எலேயாசாரைப் பெற்றான். எ-
லேயாசார் மத்தானைப்பெற்றான். மத்தா
16 ன் யாக்கோபைப்பெற்றான்.—யாக்கோ
பு மரியாளுடைய புருஷனாகிய யோசே
ப்பைப்பெற்றான், அந்த மரியாளிடத்தி
லே கிறிஸ்து என்னப்பட்டிருக்கிற இயே
17 சு பிறந்தார்.— இவ்வண்ணமாய் உண்டா
ன தலைமுறைகளெல்லாம் ஆபிரகாம் மு
தல் தாவீதுவரைக்கும் பதினாலு தலைமு
றைகளுந், தாவீதுமுதற் பாபிலோன் தே
சத்துக்கு யூதர்கள் சிறைப்பட்டுப் போ
னகாலம்வரைக்கும் பதினாலு தலைமுறை
களும் பாபிலோன் தேசத்துக்குக் கொ
ண்டுபோனகாலம்முதற் கிறிஸ்துவரைக்

கும் பதினாலு தலைமுறைகளுமேயாம்.
இந்த இயேசுக்கிறிஸ்துவினுடைய உற் 18
பத்தியின் விபரமாவது, அவருடைய தா
யாகிய மரியாள் யோசேப்புக்கு (மனை
வியாக) நியமிக்கப்பட்டபின்பு அவர்கள்
கூடிவாழ்கிறதற்குமுன்னமே அவள் பரி
சுத்தஆவியினாலே கருப்பவதியானாள்.—
அவளுடைய புருஷனாகிய யோசேப்பு நீ 19
திமானாகையால் அவளை அவமானப்பண்
ணமனதில்லாமல் இரகசியமாய் அவளை
ஒளித்துவிடும்படியாய்ச் சிந்தித்தான் —
அவன் அப்படி நினைத்திருக்கையில் தேவ 20
னுடைய தூதன் சொப்பனத்திலே அவ
னுக்குக் காணப்பட்டுத் தாவீதின் சந்ததி
யாகிய யோசேப்பே, நீ உன் மனைவியா
கிய மரியாளைச்சேர்த்துக்கொள்ள ஐயப்
படவேண்டாம் என்னத்தினாலென்றால்,
அவளிடத்திலுண்டாயிருக்கிறது பரிசுத்
த ஆவியினாலுண்டானது.—அவள் ஒரு 21
குமாரனைப்பெறுவாள் அவர் தம்முடை
ய சனங்களின் பாவங்களை நீக்கி அவர்க
ளை இரட்சிப்பார் ஆகையால் அவருக்கு
இயேசுவென்றுபேரிடுவாயாகவென்றான்

22 தீர்க்கதரிசியைக்கொண்டு யெகோவா
சொன்னது நிறைவேறும்படிக்கு அவை
23 யெல்லாம் நடந்தன.—அவர் சொல்லு
வித்ததென்னவென்றால் இதோ ஒரு கன்
னி கருப்பவதியாகி ஒரு குமாரனைப்பெ
றுவாள் அவருக்கு இம்மானுவேலென்று
பேரிடுவார்களென்பதே. இம்மானுவேல்
என்பதற்குத் தேவன் நம்முடனேயிருக்
24 கிறாரென்று அருத்தமாம். யோசேப்பு
நித்திரைதெளிந்தெழுந்தபொழுது தன
க்கு யெகோவாவுடைய தூதன் கட்டளை
யிட்டபடி தன் மனைவியைச் சேர்த்துக்
25 கொண்டு, அவள் மூதற்பேறான குமார
னைப்பெறும்வரைக்கும் அவளை அறியா
திருந்து (அந்தக்குமாரன் பிறந்தபின்பு)
அவருக்கு இயேசுவென்றுபேரிட்டான்.

---

## உ. அதிகாரம்.

[(௧.) கிழக்கிலிருந்து சாஸ்திரிகள் வந்து கி
றிஸ்துவைப் பணிந்ததும், (௰௩.) யோசேப்பு
எகிப்துக்கு ஓடிப்போனதும், (௰௬.) குழந்
தைகளை ஏரோது கொலைசெய்தது, (௨௰)
[illegible] கலிலேயாவுக்குத் திரும்பினதும்.

ஏரோதென்னும் இராசனுடைய கா

லத்திலே யூதேயாத் தேசத்திலுள்ள பெ
த்துலேகேம் ஊரில் இயேசுவானவர் பி
றந்தபின்பு, கிழக்குத் திசையிலிருந்து சா
ஸ்திரிகள் எருசலேம் நகரத்துக்கு வந்து,
2 (இக்காலத்திற்) பிறந்திருக்கிற யூதரு
டைய இராசாவைக் குறித்துத் தோன்றி
ய நட்சத்திரத்தைக் கிழக்கிலே நாங்கள் க
ண்டு அவரைப் பணிந்துகொள்ளவந்தோ
ம் அவர் எங்கே என்றார்கள். —3 ஏரோ
திராசா அதைக் கேட்டபொழுது அ
வனும், அவனுடனே கூட எருசலேம் ந
கரத்தார் அனைவருங் கலங்கினார்கள்.—4 அ
ல்லாமலும் அவன் சனங்களிற் பிரதான
மான ஆசாரியர் வேதபாரகர் எல்லாருங்
கூடிவரச்செய்து, கிறிஸ்து எங்கே பிறப்
பாரென்று அவர்களிடத்தில் விசாரித்தா
ன்.—5 அவர்கள் அவனை நோக்கி, யூதாவின்
ஊராகிய பெத்துலேகேயிலே அவர் பி
றப்பார், என்னத்தினாலென்றால் யூதத்
தேசத்திலுள்ள பெத்துலேகேமூரே எ
ன்னுடைய சனங்களாகிய இஸ்ரவேலரை
ஆளும் பிரபு உன்னிடத்திலே தோன்று
வாராகையால் யூதாவிலுள்ள பிரபுக்களில்

6 நீ சிறியதல்லவென்று,— தீர்க்கதரிசியினாலே எழுதப்பட்டிருக்கின்றதென்றார்கள்.
7 — அப்பொழுது ஏரோது அந்தச் சாஸ்திரிகளை இரகசியமாய் அழைத்து, அந்த நட்சத்திரங் காணப்பட்ட காலத்தைக் குறித்து அவர்களிடத்திலே விசாரித்
8 துக்கொண்டு,— நீங்கள் போய் அந்தப் பிள்ளையைக் குறித்து நன்றாய் ஆராய்ந்து பாருங்கள், மேலும் நீங்கள் அதைக் கண்டபின்பு நானும் போய் அதைப்பணிந்துகொள்ளும்படி எனக்கு அறிவியுங்களென்று சொல்லி அவர்களைப் பெத்துலே
9 கேமூருக்கு அனுப்பிவிட்டான்.- இராசாச் சொன்னதை அவர்கள் கேட்டுப்போனார்கள். போகையிற் கிழக்கிலே அவர்கள் கண்ட நட்சத்திரம் அந்தப் பிள்ளை இருக்கிற ஸ்தலத்துக்கு மேலே வந்து நிற்கும் வரைக்கும் அவர்களுக்கு முன்பா
10 க நடந்தது.—அவர்கள் அந்த நட்சத்திரத்தைக் கண்டு, மிகுந்த ஆனந்த சந்தோ
11 ஷத்தை அடைந்து,-பின்பு அந்த வீட்டிற் பிரவேசித்துப் பிள்ளையையும் அதினுடைய தாயாகிய மரியாளையுங் கண்டு வ

ணக்கமாய் விழுந்து அதைப் பணிந்து
கொண்டு தங்கள் பொக்கிஷப்பெட்டிக
ளைத் திறந்து பொன்னையுந் தூபவருக்க
த்தையும் வெள்ளைப் போளத்தையும் அ
தற்குக் காணிக்கையாக வைத்தார்கள்.—
பின்பு ஏரோதினிடத்துக்குத் திரும்பிப் 12
போகாதிருங்களென்று அவர்கள் சொப்
பனத்திலே தேவ உத்தரவு பெற்று வே
று வழியாய்த் தங்கள் தேசத்திற்குப்புற
ப்பட்டுப்போனார்கள்.

அவர்கள் புறப்பட்டுப் போன பின்பு 13
கத்தருடைய தூதன் சொப்பனத்திலே
யோசேப்புக்குக்காணப்பட்டு ஏரோது
இந்தப்பிள்ளையைக் கொலைசெய்யத் தே
டுவான், ஆகையால் நீ எழுந்து பிள்ளையை
யும் அதினுடைய தாயையுங்கூட்டிக்கொ
ண்டு எகிப்த்துத் தேசத்திற்கு ஓடிப்போ
ய் நான் உனக்குச் சொல்லும்வரையும்
அவ்விடத்தில் இருவென்றான்.—உடனே 14
அவன் எழுந்து இராத்திரியிலே பிள்ளை
யையும் அதினுடைய தாயையுங் கூட்டி
க்கொண்டு எகிப்த்துக்குப் புறப்பட்டுப்
போய், - ஏரோது மரணம் அடைந்தகால 15

ம் வரைக்கும் அவ்விடத்தில் இருந்தான்.
எகிப்த்தில் இருந்து என்னுடைய குமா
ரனை வரவழைத்தேனென்ற தீர்க்கதரிசி
யைக்கொண்டு கர்த்தர் திருவுளம்பற்றின
து நிறைவேறும்படி அது நடந்தது.—
16 அப்பொழுது ஏரோது தான் சாஸ்திரிக
ளால் வஞ்சிக்கப்பட்டதைக் கண்டு மிகுந்
த கோபமடைந்து, அந்தச் சாஸ்திரிகளிட
த்திலே தான் கேட்டாராய்ந்த காலத்தின்
படி பெத்லெகேமூரிலும் அதினுடை
ய எல்லைகள் யாவிலும் இரண்டு வயதுமு
தற்கொண்டு அதற்குத் தாழ்ந்திருந்த வ
யதுள்ள ஆண்பிள்ளைகள் எல்லாரையும்
கொலைசெய்ய ஆட்களை அனுப்பினான்.—
17 அப்பொழுது எரேமியா தீர்க்கதரிசியினா
ற் சொல்லப்பட்டது நிறைவேறிற்று. அ
18 வன் சொன்னதென்னவென்றால்,—இரா
மா ஊரிலே புலம்பலும் அழுகையும் மி
குந்த துக்கிப்புமுள்ள சத்தம் கேட்
கப்பட்டது. இராகேலு தன் பிள்ளைகளை
க் குறித்து அழுதுகொண்டு அந்தப் பி
ள்ளைகளில்லாதபடியால் ஆறுதல் அ
19 டையாதிருக்கிறாளென்பதே.—ஏரோது

இறந்த பின்பு சொப்பனத்திலே கர்த்தருடைய தூதன் எகிப்த்திலே யோசேப்புக்குக் காணப்பட்டு, -பிள்ளையினுடைய பிராணனை வாங்கத் தேடினவர்கள் இறந்துபோனார்கள். ஆகையால் நீ எழுந்து பிள்ளையையும் அதினுடைய தாயையும் கூட்டிக்கொண்டு இஸ்ரவேற் தேசத்துக்குப் போவென்றான்.— அந்தப்படியே அவன் எழுந்திருந்து பிள்ளையையும் அதினுடைய தாயையுங் கூட்டிக்கொண்டு இஸ்ரவேல் தேசத்திற்குப் புறப்பட்டபொழுது,—அருகேலாவு என்பவன் தன் தகப்பனாகிய ஏரோதினுடைய பட்டத்துக்கு வந்து, யூதேயாவை ஆளுகிறானென்று கேள்விப்பட்டு அங்கேபோகப் பயந்தான். அப்பொழுது சொப்பனத்திலே அவன் தேவ உத்தரவு பெற்றுக் கலிலேயா நாட்டினுடைய திசைகளை நோக்கிப்புறப்பட்டுப்போய்,-நாசரேயனென்று அழைக்கப்படுவாரென்கிறதாய்த் தீர்க்கதரிசியாற் சொல்லப்பட்டது நிறைவேறும்படிக்கு நாசரேத்தூரிலே வந்து வாசம்பண்ணினான்.

20 21 22 23

## ௩ அதிகாரம்.

[(௧) யோவான்பிரசங்கம்பண்ணி ஞானஸ்நானங்கொடுத்ததும், (௰௩) கிறிஸ்துவுக்கு ஞானஸ்நானங்கொடுத்ததும்]

1 அக்காலத்திலே யோவான்ஸ்நானன் வந்து, — 2 பரலோக இராசரீகஞ் சமீபமாயிருக்கின்றதாகையால் மனந்திரும்புங்களென்று யூதேயாவின் வனாந்தரத்திலே 3 பிரசங்கம்பண்ணினான். — அவன் யாவனெனில், யெகோவாவுக்காகமார்க்கத்தை நன்றாகச் செய்யுங்களென்றும் அவருடைய பாதைகளைச் செவ்வைபண்ணுங்களென்றும் வனாந்தரத்திலே ஒருவன் சத்தமிடுவானென்று எசாயாவென்னுந் தீர்க்கதரிசியினாற் சொல்லப்பட்டவனே.-

4 அல்லாமலும் அந்த யோவான் ஒட்டகமயிர் உடையைத் தரித்துத் தன்னுடைய அரையில் வார்க்கச்சையைக் கட்டிக்கொண்டிருந்தான். வெட்டுக்கிளிகளுங் காட்டுத் தேனும் அவனுக்கு ஆகாரமாக இருந்தன. - 5 அக்காலத்திலே எருசலேம் நகரத்தாரும் யூதேயாத்தேசத்தாரனைவரும்

யோர்தானை நதிக்கடுத்த சுற்றுப்புறத்தா
ர் யாவரும் அவனிடத்துக்குப் புறப்ப
ட்டுப்போய்,—தங்கள் பாவங்களை அறி 6
க்கையிட்டு யோர்தான் நதியில்அவனாலே
ஞானஸ்நானம் பெற்றார்கள்.—அப்படி 7
யிருக்கையிற் பரிசேயர், சதுசேயரென்
பவர்களிலும் அநேகர் தன்னாலே ஞான
ஸ்நானம்பெறும்படிக்குவருகிறதை அவ
ன் கண்டு அவர்களை நோக்கி விரியன்பா
ம்புகளின் குட்டிகளே இனி வருங் கோ
பத்துக்கு நீங்கள் தப்பிக்கொள்ளும்படி
யாய் உங்களுக்கு வகைகாட்டினவன் எவ
ன்?—மனந்திரும்புதலுக்குத்தக்க கனிக 8
ளைக் கொடுங்கள் —ஆபிரகாம் எங்களுடை 9
ய பிதாவென்றுசொல்ல உங்களுடைய உ
ள்ளத்திலே நினைத்துக்கொள்ளாதிருங்க
ள்.ஆபிரகாமுக்குத் தேவன் இந்தக் கற்க
ளிற் பிள்ளைகளை உண்டுபண்ண வல்லவரா
யிருக்கிறாரென்று உங்களுக்குச் சொல்
லுகிறேன்.—இப்பொழுதே கோடரி ம 10
ரங்களுடைய வேரருகே வைத்திருக்கின்
றது. ஆகையால் நல்ல கனிகளைக்கொடா
மரங்களெல்லாம் வெட்டப்பட்டு அக்

11 கினியிலேபோடப்படும்.—நீங்கள் மனந்
திருப்பும்படிக்கு நான் சலத்தினாலே உ
ங்களுக்கு ஞானஸ்நானங் கொடுக்கிறேன்
எனக்குப் பின்வருகிறவர் என்னிலும் அதி
கவல்லமையுடையவர் அவருடைய பாத
இரட்சைகளைச் சுமக்கிறதற்கு நான் பா
த்திரவானல்ல. அவரே பரிசுத்தாவியினா
லும் அக்கினியினாலும் உங்களுக்கு ஞா
12 னஸ்நானங்கொடுப்பார். அவருடைய கை
யில் தூற்றுக்கூடையிருக்கின்றது. அவர்
தமது களம் முழுவதும் விளக்கித் தம்
முடைய கோதும்பையைக் களஞ்சியத்
திற்சேர்ப்பார். பதரை அவியாத அக்
கினியினாற் சுட்டுப்போடுவாரென்றான்.

13 அப்பொழுது இயேசுவானவர் யோவா
னாலே ஞானஸ்நானம்பெறுவதற்குக்கலி
லேயா நாட்டைவிட்டு யோர்தானருகே
14 அவனிடத்திற்குப்போனார்.—யோவான்
அவருக்குத் தடைபண்ணி உம்மாலே நா
ன் ஞானஸ்நானம்பெறவேண்டியதாயிரு
க்க நீர் என்னிடத்திற்கு வரலாமாவென்
15 றான்.—அதற்கு இயேசுவானவர் அவனை
நோக்கி இவ்விதமாய்ச் சகல நீதியையும்

நிறைவேற்றுகிறது நமக்கேற்றதாயிருக்கின்றது ஆகையால் இப்பொழுது சம்மதிப்பாயாகவென்றார். அப்பொழுது அவன் சம்மதித்தான்.—16 இயேசுவானவர் ஞானஸ்நானம்பெற்றுச் சலத்தைவிட்டேறி வந்தவுடனே இதோ வானம் அவருக்குத் திறக்கப்பட்டது. அல்லாமலுந் தேவனுடைய ஆவி புறாவைப்போலிறங்கி அவர்மேல் வருகிறதைக் கண்டான்.—17 மேலும் இவர் எனக்கு அன்பாயிருக்கிற என்னுடைய குமாரன் இவரிற் பிரியமாயிருக்கிறேனென்று வானத்திலிருந்து சத்தமுண்டாயிற்று.

---

## ௪. அதிகாரம்.

[(க.) கிறிஸ்து உபவாசித்ததுந் தூண்டிவிடப்பட்டதும், (௰௩.) கப்பர்நகூமிலே வாசம்பண்ணினதும் (௰எ) பிரசங்கம் பண்ணினதுஞ் சீஷர்களைச் சேர்த்ததும். (உ௩) பிணியாளிகளைக்குணமாக்கினதும்.

1 அப்பொழுது இயேசுவானவர் பசாசானவனாலே சோதிக்கப்படுவதற்கு ஆவியினாலே வனாந்தரத்திற்கொண்டுபோகப்ப

2 ட்டார்.—(அங்கே) அவர் நாற்பது நாள் இரவும்பகலும் உபவாசம்பண்ணினபின்பு அவருக்குப் பசியுண்டாயிற்று.
3 அப்பொழுது அந்தச் சோதிக்கிறவன் அவரிடத்துக்குவந்து நீ தேவனுடைய குமாரனானல் இந்தக் கற்கள் அப்பங்களாகும்படி கட்டளையிடுவென்றான்.—அதற்கு
4 அவர் மாறுத்தரஞ்சொன்னது மனிதனானவன் அப்பத்தினாலேமாத்திரமல்ல தேவனுடையவாய்மலர்ந்தருளிச்செய்கிற ஏந்தவாக்கினாலும்பிழைப்பானென்றெழுதியிருக்கின்றதென்றார்.
5 அப்பொழுது பசாசானவன் அவரைப் பரிசுத்த நகரத்துக்குக் கொண்டுபோய் அவரைத்தேவாலயத்துமேல் உப்பரிகையில் நிறுத்தி,- உன்னைக்குறித்துத்தம்மு
6 டைய தூதர்களுக்குக் கட்டளையிடுவாரென்றும், உன்னுடைய பாதங் கல்லில் இடறாதபடிக்கு அவர்கள் உன்னைக்கைகளில் ஏந்திக்கொண்டு போவார்களென்றும் எழுதியிருக்கின்றது. ஆகையால் நீ தேவனுடைய குமாரனானல் தாழக் குதி என்றா
7 ன்.—அதற்கு யேசுவானவர் சொன்னது

அதுவுமல்லாமல் உன் தேவனாகிய பராபரனைப் பரிட்சைபாராதிருப்பாயாக வென்றும் எழுதியிருக்கின்றதென்றார்.

8 மறுபடியும் பசாசானவன் அவரை மிகவும் உயர்ந்த மலையின்மேற் கொண்டு போய் உலகத்திலுள்ள இராச்சியங்களெல்லாவற்றையும் அவைகளின் மகிமையையும் அவருக்குக் காண்பித்து.

9 —நீ விழுந்து என்னைத் தொழுதுகொண்டால் இவைகளெல்லாவற்றையும் உனக்குத் தருவேனென்று சொன்னான்.—

10 அப்பொழுது இயேசுவானவர் அவனை நோக்கி உனது தேவனாகிய பராபரனைத் தொழுதுகொண்டு அவர் ஒருவருக்கே ஆராதனைசெய்வாயாகவென்று எழுதியிருக்கின்றதே ஆகையாற் சாத்தானே! அப்புறம்போவென்றார்.—

11 அப்பொழுது பசாசானவன் அவரைவிட்டுப்போனான். உடனே தேவதூதர்கள் சேர்ந்து வந்து அவருக்கு ஊழியஞ்செய்தார்கள்.

12 பின்பு யோவான் காவலில் வைக்கப்பட்டானென்று இயேசுவானவர் கேள்விப்பட்டுக் கலிலேயா நாட்டுக்குப் புறப்ப

13 ட்டுப் போய்,—நாசரேத்தூரைவிட்டுச், செபுலோன், நவுதலியென்னும் நாடுகளி ன் எல்லைகளிற் கடற்கரையருகேயிருக்கி ன்ற கப்பாரனூகும் பட்டினத்தில் வந்து,
14 வாசம்பண்ணினூர்.—அதினாலே கடற்க ரையருகிலும் யோர்தான் நதியோரத்தி லுமுள்ள அஞ்ஞானிகள் அடங்கியிருக்கி ற கலிலேயாத் தேசமாகிய செபுலோ ன் தேசத்தாரும், நவுதலிதேசத்தாருமா கிய இருளிலிருக்கின்ற சனங்கள் பெருந்த
15 ஒளியைக் கண்டார்கள்.—மரணநிழலுள் ள திசையிலிருக்கிறவர்களுக்கு ஒளிதோ
16 ன்றிற்றென்று,—ஏசாயா தீர்க்கதரிசியி னூற் சொல்லப்பட்டது நிறைவேறிற்று.
17 அக்காலத்திலே இயேசுவானவர் பர லோகஇராச்சியஞ் சமீபித்தது ஆகையா யால் மனந்திரும்புங்களென்று பிரசங்கி க்கத் தொடங்கினூர்.
18 ஒருகாலத்திலே இயேசுவானவர் கலி லேயா நாட்டின் கடலருகே நடந்துபோ கையில் மீன்பிடிக்கிறவர்களாகிய பேது ருவென்னப்பட்ட சீமோனும், அவனு டைய சகோதரன் அந்திரேயாவுமாகிய

இருவருங் கடலிலே வலைபோட்டுக்கொ
ண்டிருக்கிறபொழுது அவர்களைக் கண்
டு,—என் பின்னேவாருங்கள் உங்களை ம 19
னிதரைப் பிடிக்கிறவர்களாக்குவேனென்
று அவர்களுடனே சொன்னார்.-உடனே 20
அவர்கள் வலைகளைவிட்டு அவரைப்பின்ப
ற்றினார்கள்.-அவர் அவ்விடம்விட்டு அப்பு 21
றம் போகையிற் செபெதேயுவினுடைய
மகன் யாக்கோபும் அவனுடைய சகோ
தரன் யோவானுமாகிய இருவருந் தங்க
ள் தகப்பன் செபெதேயுவுடனே படகி
லிருந்து தங்கள் வலைகளைத் தைத்துக்கொ
ண்டிருக்கிறபொழுது அவர்களைக்கண்டு
அவர்களையும் அழைத்தார்.—உடனே அ 22
வர்கள் படகையுந் தங்கள் தகப்பனையும்
விட்டு அவரைப் பின்பற்றினார்கள்.

பின்பு இயேசுவானவர் கலிலேயா நா 23
டெங்குஞ்சுற்றி நடந்து, அவர்களுடை
ய செப ஆலயங்களிற் சனங்களுக்கு உ
பதேசஞ்செய்து பரலோக இராச்சியத்
தைக்குறித்துச் சுவிசேஷத்தைப் பிரச
ங்கித்துச் சனங்களுக்குண்டாயிருந்த ச
கலவிதமான நோய்களையும் நீக்கி அவர்

24 களைக்) குணமாக்கினார்.--அவருடைய கீ
ர்த்தி சீரியாத்தேசத்திலெங்கும் பிரபல
மாயிற்று. பின்பு பலபல வியாதிகளையும்
வேதனைகளுமடைந்த பிணியாளிகள் யா
வரையும் பசாசுபிடித்தவர்களையுஞ், ச
ந்திரரோகிகளையுந், திமிர்வாதக்காரரை
யும் அவரிடத்திற் கொண்டு வந்தார்கள்.
அவர்களைக் குணமாக்கினார்.

25 கலிலேயாவிலுந், தெக்கப்போலியிலும்,
எருசலேமிலும், யூதேயாவிலும், யோர்
தான் நதிக்கப்புறத்திலுமிருந்து மிகுந்த
சனங்கள்வந்து அவர் பின்சென்றார்கள்.

---

## ௫. அதிகாரம்.

[(௧.) கிறிஸ்து மலையில் ஏறிப்பண்ணின பிரச
ங்கத்தின் ஆரம்பம். (௩.) பாக்கியவான்களின்
தன்மை. (௰௩.) உலகத்திற்கு உப்பைப்போல
வும் ஒளியைப்போலவும் இருக்கிறவர்களின் த
ன்மை. (௰௭.) கிறிஸ்துநாதர் நியாயப்பிரமாண
த்தை நிறைவேற்றவந்தேனென்று சொன்ன
து. (உ௧.) கொலைபாதகத்தின் தன்மை. (உ௭)
விபசாரத்தின் தன்மை, (௩௩,) ஆணையின் த
ன்மை. (௩௮.) பொறுமையின் தன்மை. (௪௩.)
அன்பின் தன்மை.]

1 அவர் அந்தச் சனங்களைக் கண்டு மலை

யின்மேலேறி உளுக்கார்ந்தபொழுது, அவருடைய சீஷர்கள் அவரிடத்திலே வந்தார்கள்.—அப்பொழுது அவர் தமது 2 திருவாயைத் திறந்து அவர்களுக்கு உபதேசித்துச் சொன்னதாவது,—ஆவியில் 3 எளிமையுள்ளவர்கள் பரலோக இராச்சியத்தை அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.— துயரப்படுகிற 4 வர்கள் ஆறுதலடைவார்கள். ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள். — சாந்த கு 5 ணமுள்ளவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்வார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.—நீதியின் மேற் பசிதாகமுள்ளவர்கள் திருத்தியடைவார்கள், ஆ 6 கையால் அவர்கள் பாக்கியவான்கள்.—இ 7 ரக்கமுள்ளவர்கள் இரக்கத்தை அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.— சுத்தமான இருதயமுள்ளவர்கள் 8 பராபரனைத் தரிசிப்பார்கள் ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.-சமாதானத் 9 தை நடப்பிக்கிறவர்கள் பராபரனுடைய புத்திரரென்னப்படுவார்கள். ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.—நீதியின் நி 10

மித்தந் துன்பப்படுகிறவர்கள் பரலோ
க இராச்சியத்தை அடைவார்கள், ஆகை
11 யால் அவர்கள் பாக்கியவான்கள்.-என்னி
மித்தம் உங்களை நிந்தித்துத் துன்பப்படு
த்திப் பலவித தீமையான மொழிகளை உ
ங்கள்மேற் பொய்யாய்ச் சொன்னார்களா
னால் நீங்கள் பாக்கியவான்களாய் இருப்
12 பீர்கள்.— பரலோகத்திலே உங்களுக்கு
யிருந்த பலன் கிடைப்பதினால் நீங்கள் ச
ந்தோஷிப்பட்டு மிகவுங் களிகூருங்கள். உ
ங்களுக்கு முன்னிருந்த தீர்க்கதரிசிகளை
யும் அப்படியே துன்பப்படுத்தினார்
கள்.
13 நீங்கள் பூமிக்கு உப்பாயிருக்கிறீர்கள்,
உப்பானது சாரமற்றதேயானால் எதினா
ற் சாரமாக்கப்படும், அது வெளியே
கொட்டப்படுவதற்கும் மனிதரால் மி
திக்கப்படுவதற்குமேயன்றி வேறொன்று
14 க்கும் ஆகாது -நீங்கள் உலகத்திற்கு ஒ
ளியாய் இருக்கிறீர்கள். மலையின்மேல் இ
ருக்கிற பட்டிணம் மறைந்திருக்கமாட்டா
15 து.—மேலும் விளக்கைக் கொளுத்தி ம
ரக்காலால் மூடி வையாமல் ஒரு தண்டி

ன் மேல் வைப்பார்கள். அப்பொழுது
அது வீட்டில் இருக்கிற யாவருக்கும் பி
ரகாசங்கொடுக்கும் — அப்படியே மனி 16
தரானவர்கள் உங்கள் நற்கிரியைகளைக் க
ண்டு, பரமண்டலங்களில் இருக்கிற உங்க
ள் பிதாவின் மகிமை விளங்கப்பண்ணுத
ற்கதாக உங்கள் ஒளி அவர்கள் முன்பா
கப் பிரகாசிக்கக்கடவது.

வேதப்பிரமாணத்தையாகிலுந் தீர்க் 17
கதரிசனங்களையாகிலுந் தள்ளிவிடுகிறத
ற்கு நான் வந்ததாக நினையாதிருங்கள். அ
வைகளைத் தள்ளிவிடுகிறதற்கல்ல, நிறை
வேற்றுகிறதற்கு வந்தேன். — வானமும் பூ 18
மியும் ஒழிந்துபோனாலும் வேதம் முழு
வதும் நிறைவேறுவதன்றி, அதிலொரு சி
ன்னவெழுத்தாகிலும் ஓரெழுத்திலுடை
ய உறுப்பாகிலும் ஒழிந்துபோவதில்லை
யென்று மெய்யாய் உங்களுக்குச் சொ
ல்லுகிறேன். — ஆகையால் இந்தக் கற்ப 19
னைகளில் மிகவுஞ் சிறிய கற்பனையையாகி
லுந் தள்ளி, அவ்வண்ணமாய் மனிதருக்
கு உபதேசிக்கிறவனெவனோ அவன் பர
லோக இராச்சியத்திலே மிகவுஞ் சிறியவ

னென்றெண்ணப்படுவான். அவைகளி
ன்படிசெய்து உபதேசிக்கிறவனே பர
லோக இராச்சியத்திலே பெரியவனென்
20 றெண்ணப்படுவான் -ஆதலால் வேதபா
ரகர்களும் பரிசேயர்களுமானவர்களு
டைய நீதியிலும் உங்கள் நீதி அதிகப்பட்
டிராவிட்டால், பரலோக இராசசியத்தி
ற்குட் பிரவேசிக்கமாட்டீர்களென்று உ
ங்களுக்குச் சொல்லுகிறேன்.

21 கொலைசெய்யாதிருப்பாயாகவென்ப
தும் கொலைசெய்தவன் நியாயத்தீர்ப்புக்
கு ஏதுவாயிருப்பானென்பதும் பூர்வத்
தாருக்கு உரைக்கப்பட்டதென்று கேள்
22 விப்பட்டிருக்கிறீர்கள்.-அல்லாமலும் நா
ன் உங்களுக்குச் சொல்லுகிறதாவது, ச
கோதரனை வீணாய்க் கோபித்துக்கொள்
பவனெவனோ அவன் நியாயத்தீர்ப்புக்கு
ஏதுவாய் இருப்பான். சகோதரனை வீ
ணனென்கிறவனெவனோ அவன் பெரிய
சங்கத்தீர்ப்புக்கேதுவாய் இருப்பான், அ
வனை மதிகேடனென்கிறவனெவனோ அ
வன் எரிநரகத்திற்கு ஏதுவாயிருப்பான்.
23 —ஆகையால் நீ பலிபீடத்தினிடத்தில் உ

ன் காணிக்கையைச் செலுத்தவந்து உன்
மேற் சகோதரனுக்கு விசனமுண்டென்
று அங்கே நினைவுகொள்வாயாகில்,—அ 24
ந்தப் பலிபீடத்தின் முன் உன் காணிக்
கையை வைத்துவிட்டுப் போய், முன்பு
சகோதரனுடனே ஒப்புரவாகிப் பின்பு
வந்து உன் காணிக்கையைச் செலுத்து
வாயாக.— உனக்கெதிராளியானவன் உ 25
ன்னை நியாயாதிபதிக்கொப்புவியாமலும்
அந்த நியாயாதிபதி உன்னை ஊழியக்கா
ரருக்கொப்புவியாமலும், நீ சிறைச்சா
லையில் வைக்கப்படாமலும் இருக்கும்ப
டிக்குச் சீக்கிரமாய் உன் எதிராளியுட
னே வழியில் இருக்கும்பொழுதே அவ
னுடனே நன்மனம்பொருந்துவாயாக.-
(பொருந்தாவிட்டால்)நீ ஒரு காசுங் கு 26
றைவின்றி, முழுமையுஞ் செலுத்துகிறவ
ரைக்கும் அவ்விடத்தை விட்டுத் திரும்பி
வரமாட்டாயென்று மெய்யாய் உனக்கு
ச் சொல்லுகிறேன்.

விபசாரம்பண்ணாதிருப்பாயாகவென் 27
பது பூர்வத்தாருக்கு உரைக்கப்பட்டதெ
ன்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள். —

28 அல்லாமலும் நான உங்களுக்குச்சொல்லு
கிறதாவது, ஒரு ஸ்திரியை இச்சிப்போ
டே பார்க்கிறவனெவனோ அவன் தன் இ
ருதயத்தில் அவளோடே விபசாரஞ்செ
29 ய்தாயிற்று.-ஆகையால் உன் வலது கண்
உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவானால் அ
தைப் பிடுங்கியெறிந்துபோடு, உன் சரீ
ரம் முழுமையும் நரகத்திலே தள்ளப்
படாதபடிக்கு உன் அவயவங்களில் ஒன்
று கெட்டுப்போகிறதே உனக்கு நன்மை
30 யாய் இருக்குமே.—அன்றியும் உன் வல
துகை உன்னைக் கெடுக்கிறதற்கேதுவா
னால்,அதைத் தறித்தெறிந்துபோடு உன்
சரீரமுழுமையும் நரகத்திலே தள்ளப்ப
டாதபடிக்கு, உன் அவயவங்களிலொன்
று கெட்டுப்போகிறதே உனக்கு நன்மை
31 யாயிருக்குமே.— அல்லாமலும் யாவ
னானுந் தன் மனைவியைத் தள்ளிவிட்
டால் தள்ளுதற்சீட்டை அவனுக்குக்கொ
டுக்கக்கடவனென்று சொல்லப்பட்டது.
32 -அப்படியிருந்தும், எவனாகிலுந் தன் ம
னைவி வேசித்தனமில்லாமல் இருக்கை
யில், அவளைத் தள்ளிவிட்டால் அவன் அ

வளை விபசாரஞ்செய்யப்பண்ணுகிறவனாய் இருப்பானென்றும், எவனாகிலுந் தள்ளிவிடப்பட்டவளை விவாகம்பண்ணினால் விபசாரஞ் செய்கிறவனாய் இருப்பானென்றும் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

அன்றியும் பொய்யாணையிடாதிருப்பாயாகவென்பதும் உன் ஆணைகளைக் கருத்தாவுக்குச் செலுத்துவாயாகவென்பதும் பூர்வத்தாருக்கு உரைக்கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.— 33

அல்லாமலும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது, எவ்விதத்திலுஞ் சத்தியம்பண்ணக்கூடாது. வானந் தேவாசனமாய் இருக்கிறபடியால் அதின்மேற் சத்தியம்பண்ணலாகாது. பூமி தேவனுடைய பாதபடியாயிருக்கிறபடியால் அதின்மேற் சத்தியம்பண்ணலாகாது.— 34

எருசலேம் பெரிய இராசனுடைய நகரமாய் இருக்கிறபடியால் அதின் மேற் சத்தியம்பண்ணலாகாது.— 35

உன் சிரசின் ஒரே மயிரையும் நீ வெண்மையும் கறுப்புமாக்கத் திராணியில்லாதபடியால் அதின் மே 36

37 ற் சத்தியம்பண்ணலாகாது.— உள்ளத்தை உள்ளதென்றும் இல்லத்தை இல்லதென்றும் சொல்லக்கடவீர்கள். இவைகளுக்கு மேற்பட்டது தீமையினாலுண்டாயிருக்கின்றது.

38 கண்ணுக்குப் பதிலாகக் கண்ணையும் பல்லுக்குப் பதிலாகப் பல்லையும் (வாங்க வேண்டுமென்று) சொல்லப்பட்டதைக்

39 கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.— நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது, பொல்லாதவனோடே எதிர்த்துநிற்கக்கூடாது. ஒருவன் உன்னுடைய வலது கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தையும் அவனு

40 க்குத் திருப்பிக்காட்டு.- உன்னுடனே வழக்காடி உன்னுடைய மேலங்கியை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றிருக்கிறவனுக்கு உன் வஸ்திரத்தையும் விட்டுவிடு.-

41 ஒருவன் உன்னை ஒரு காதவழி வரும்படியாகப் பலபந்தம்பண்ணினால் அவனோடே இருகாதவழிமட்டும் நடந்துபோ.

42 உன்னை வேண்டிக்கொள்ளுகிறவனுக்குக் கொடு.உன்னிடத்திற் கடன்வாங்க விரும்புகிறவனுக்கு முகங்கோணதிருப்பாயாக.

நீ பிறனில் அன்புவைத்து உன் சத்து ருவைப் பகைக்கக்கடவாயென்று சொல் லப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்க ள்.—நான் உங்களுக்குச் சொல்லுகிறது பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதா பொல்லாதவர்கள்மேலும், நல்லவர்கள் மேலும், அநீதியுள்ளவர்கள்மேலும் ம ழையைப் பெய்யவும்பண்ணுகிறார்.—அ ப்படியே நீங்கள் அவருக்குப் புத்திரரா யிருக்கும்படிக்கு உங்கள் சத்துருக்களி ல் அன்பு கூர்ந்து உங்களைச் சபிக்கிறவர் களை ஆசீர்வதித்து, உங்களைப் பகைக்கி றவர்களுக்கு நன்மைசெய்து, உங்களை நி ந்திக்கிறவர்களுக்காகவும், உங்களைத் து ன்பப்படுத்துறவர்களுக்காகவுஞ் செப ம்பண்ணுங்கள்.-அல்லாமலும் உங்களில் அன்புகூருகிறவர்கள்மேலேமாத்திரம் அ ன்பாயிருப்பீர்களானால் உங்களுக்கு என் னபலன்வரும். ஆயக்காரரும் அப்படிச் செய்கிறார்களல்லவோ?—உங்கள் சகோ தரரைமாத்திரம் வாழ்த்திக்கொள்வீர்க ளானால் அது பெரிய செய்கையாகுமா? அஞ்ஞானிகளும் அப்படிச் செய்கிறார்க

43 44 45 46 47

48 ளல்லவோ.—ஆகையாற் பரமண்டலங்க ளிலிருக்கிற உங்கள் பிதா பூரணசற்குண ராயிருக்கிறதுபோல நீங்களும் பூரணச ற்குணராயிருக்கக் கடவீர்கள்.

---

## ௬. அதிகாரம்.

[(௧.) தருமத்தின் தன்மை. (௫.) செபத்தின் தன்மை. (௰௬.) உபவாசத்தின் தன்மை. (௰௯.) நாம் தேடவேண்டிய பொக்கிஷம். (௨௪) பராபரனுக்கும் உலகத்திற்கும் ஊழியஞ்செய் தல் (௨௫.) லவுகீக கவலையைவெறுத்தல்-(௩௩) பராபரனுடைய இராச்சியத்தைத்தேடல்.

1 நீங்கள் மனிதர்களாலே காணப்படும் பொருட்டாய் உங்கள் தருமத்தை அவர் களுக்குமுன்பாகச் செய்யாதபடிக்கு எ ச்சரிக்கையாயிருங்கள், செய்தாற் பரம ண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதாவினிட

2 த்திலே பலன்பெறுதிருப்பீர்கள்.-ஆகை யால் நீ தருமஞ்செய்கிறபொழுது மனி தர்களாற் புகழப்படுவதற்குச் செப ஆ லயங்களிலும் வீதிகளிலுஞ் செய்கிற வஞ் சகரைப்போல நீ உனக்குமுன்பாகத் தா

ளாயூதப்பண்ணக்கூடாது. அவர்கள் த
ங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று
மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகி
றேன்.-நீ தருமஞ்செய்கிறபொழுது உ 3
ன் தருமம் அந்தரங்கமாயிருக்கும்படிக்
கு உன் வலதுகை செய்கிறதை உன் இட
துகை அறியாதிருக்கக்கடவது.— அப் 4
பொழுது அந்தரங்கமாயிருக்கிறதை நோ
க்குகிற உன் பிதாத்தாமே வெளியரங்க
மாய் உனக்குப் பலனளிப்பார்.

அன்றியும் நீ செபம்பண்ணுகிறபொழு 5
து வஞ்சகரைப் போலிருக்கக்கூடாது, அ
வர்கள் மனிதர்களாற் காணப்படும்படிக்
குச்செப ஆலயங்களிலேயும், வீதிகளின் ச
ந்திகளிலேயும், நின்றுகொண்டு செபம்ப
ண்ணவிரும்புகிறார்கள். அவர்கள் தங்கள்
பலனை அடைந்துதீர்ந்ததென்று மெய்
யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.
-நீ செபம்பண்ணுகிறபொழுது உன் வீ 6
ட்டின் அறைக்குட் பிரவேசித்து அதின்
கதவைப் பூட்டின பின்பு அந்தரங்கத்திலி
ருக்கிற உன் பிதாவை நோக்கிச் செபம்ப
ண்ணு அப்பொழுது அந்தரங்கமாயிரு

க்கிறதை நோக்குகிற உன்பிதா வெளியர
7 ங்கமாய் உனக்குப் பலனளிப்பார்.—அ
ல்லாமலுஞ் செபம்பண்ணுகிற பொழு
து நீங்கள் அஞ்ஞானிகளைப்போல வீணா
ய் வசனிக்கக்கூடாது. அவர்கள் தாங்க
ள் அதிகமாய் வசனித்தாற் கேட்கப்படு
8 வோமென்று நினைக்கிறார்கள்.-அவர்களு
க்கொப்பாய்ச் செய்யாதிருங்கள் நீங்கள்
உங்கள் பிதாவை நோக்கி வேண்டிக்கொ
ள்ளுமுன்னமே அவர் உங்களுக்கு வே
ண்டுவதின்னதென்று அறிந்திருக்கிறாரே.
9 ஆகையால் நீங்கள் செபம்பண்ண
வேண்டுவதெப்படியெனிற் பரமண்டல
ங்களிலிருக்கிற எங்கள் பிதாவே உம்மு
டைய நாமம்பரிசுத்தமாய் வணங்கப்படு
10 வதாக,-உம்முடைய இராச்சியம் வருவ
தாக, உம்முடைய சித்தம் பரமண்டலத்
திலே செய்யப்படுகிறது போலப் பூமியி
11 லுஞ் செய்யப்படுவதாக,—இன்றைக்கு
எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை எங்
12 களுக்குத்தாரும் —எங்கள் கடனாளிகளு
க்கு நாங்கள் மன்னிப்பதுபோலத் தே
வரீர் எங்கள் கடன்களைமன்னித்தருளும்

—நாங்கள் சோதனையிற் பிரவேசியாதப 13
டிசெய்து தீமையினின்று எங்களை இரட்
சித்துக்கொள்ளும், இராச்சியமும் வல்ல
மையும் மகிமையும் உமக்கே என்றென்
றைக்குமுண்டாயிருக்கின்றன, ஆமென். எ
ன்பதேயாம்.—மனிதர்கள் (உங்களுக்கு) 14
செய்த தப்பிதங்களை மன்னிப்பீர்களா
கில் உங்கள் பரம பிதா உங்களுக்கும்
மன்னிப்பார்.— மனிதர்கள் (உங்களுக் 15
கு) செய்ததப்பிதங்களை மன்னியாதிருப்
பீர்களாகில், உங்கள் பிதா உங்கள்தப்பித
ங்களையும் மன்னியாதிருப்பார்.

மேலும் நீங்கள் உபவாசம் பண்ணும் 16
பொழுது வஞ்சகரைப்போல முகவாட
லாயிருக்கக்கூடாது அவர்கள் உபவாச
ம்பண்ணுகிறது மனிதர்களாற் காணப்ப
டும் பொருட்டாய்த் தங்கள் முகங்களை
வதங்கப்பண்ணுகிறார்கள். அவர்கள் தங்
கள் பலனையடைந்துதீர்ந்ததென்று மெ
ய்யாகவே உங்களுக்குச்சொல்லுகிறேன்.
—நீ உபவாசிக்கும்பொழுது, அந்த உ 17
பவாசம் மனிதர்களுக்குக் காணப்படா
மல் அந்தரங்கத்திலிருக்கிற உன் பிதாவு

க்கே காணப்படும்படிக்கு உன்சிரசைத்
தயிலத்தாற் பூசி உன்முகத்தைக் கழுவக்க
18 டவாய். —அப்பொழுது அந்தரங்கமா
யிருக்கிறதை நோக்குகிற உன் பிதா வெ
ளியரங்கமாய் உனக்குப்பலனளிப்பார்.
19 பூமியிலே நீங்கள் உங்களுக்காகப்பொ
க்கிஷங்களைக் கூட்டிவையாதிருங்கள். அ
வ்விடத்திலே பூச்சியுந் துருவும் அவைக
ளைக் கெடுக்கும். திருடருங் கன்னமிட்டு
20 த் திருடுவார்கள். —பரலோகத்திலே உ
ங்களுக்காகப் பொக்கிஷங்களைக் கூட்டி
வையுங்கள் அவ்விடத்திலே பூச்சியாவது
துருவாவது அவைகளைக் கெடுக்கிறதுமி
ல்லை அங்கே திருடர் கன்னமிட்டுத் திரு
21 டுகிறதுமில்லை. —உங்கள் பொக்கிஷமெ
ங்கேயோ அங்கே உங்கள் இருதயமுமி
22 ருக்குமே —கண்ணானது சரீரத்தின் வி
ளக்காயிருக்கின்றது. ஆகையால் உன் க
ண் சொஸ்தமாயிருந்தால், உன்சரீரம் மு
ழுவதும் வெளிச்சம் அடைந்திருக்கும்.
23 —உன்கண் வியாதியாயிருந்தால் உன் சரீ
ரம் முழுவதும் இருள் அடைந்திருக்கும்.
அப்படியிருக்க, உன்னிலுள்ள வெளிச்ச

ம் இருளாயிருந்தால் இருளே மிகவும்
மிகுதியாயிருக்குமல்லவா.—ஒருவன் இ
ரண்டெசமான்களுக்கு ஊழியஞ் செய் 24
யமாட்டான், என்னத்தினாலெனில், ஒருவ
னை அவன் பகைத்து மற்றவனைச் சிநேகி
ப்பான். அல்லது ஒருவனைப் பற்றிக்கொ
ண்டு மற்றவனை அசட்டைபண்ணுவான்.
நீங்கள் பராபரனுக்கும் உலகப்பொருளு
க்கும் ஊழியஞ்செய்ய மாட்டீர்கள்.

ஆகையால் உங்கள் சீவனுக்காக எ 25
ன்னத்தைப் போசனஞ் செய்வோம் எ
ன்னத்தைப் பானம்பண்ணுவோமென்
றும் உங்கள் சரீரத்துக்காக என்னத்
தை உடுப்போமென்றுங் கவலைப்படா
திருங்களென்று நான் உங்களுக்குச் சொ
ல்லுகிறேன். ஆகாரத்திற்குச் சீவனும்
உடைக்குச் சரீரமும் அதிகமாயிருக்கிற
தல்லவோ.—ஆகாசத்துப் பறவைகளை 26
நோக்கிப்பாருங்கள் அவைகள் விதைக்கி
றதும் அறுக்கிறதுங் களஞ்சியங்களிற் கூ
ட்டிவைக்கிறதுமில்லை. அவைகளுக்கு உ
ங்கள் பரமபிதா உணவைக்கொடுக்கிறார்.
அவைகளிலும் நீங்கள் மேன்மையுள்ளவ

27 நீங்களல்லவா. —அல்லாமலும் உங்களி
லொருவன் கவலைப்படுகிறதினாலே தன்
சரீர அளவுக்கு ஒரேமுழத்தையுங் கூட்
28 டுவானா (மாட்டானே.) —பின்னும் உ
டைகளுக்காக நீங்கள் கவலைப்படுகிறதெ
ன்ன. வெளியிலே லீலீயென்னும் புஷ்ப
ங்கள் வளருகிறவகையை யுற்றுப்பாருங்க
ள். அவைகள் வருந்துகிறதுமில்லை நூற்
29 கிறதுமில்லை. —அப்படியிருந்தும் மிகு
ந்த மகிமையுடைய சாலோமோனும் அ
வைகளில் ஒன்றைப்போலாகிலும் (அழ
காய்) உடுக்கவில்லையென்று உங்களுக்கு
30 ச் சொல்லுகிறேன். —அப்படியிருக்க,
அற்பவிசுவாசிகளே, ஒருநாள் வளருகிற
துமாய் மறுநாள் அடுப்பிற் போடப்ப
டுகிறதுமாயிருக்கிற புல்லுக்குப் பராப
ரன் இவ்விதமாய் உடுத்துவிக்கிறதால், மி
கவும் அதிகமாய் உங்களுக்கு உடுத்துவி
31 ட்பாரல்லவோ. —ஆகையால் என்னத்
தைப் போசனஞ்செய்வோமென்றும் எ
ன்னத்தைப் பானம்பண்ணுவோமென்
றும் என்னத்தையுடுப்போமென்றும் நீ
ங்கள் கவலைப்படாதிருங்கள். அப்படிப்

வளை விபசாரஞ்செய்யப்பண்ணுகிறவனு
ய் இருப்பானென்றும், எவனுனுந் த
ள்ளிவிடப்பட்டவளை விவாகம்பண்ணில்
விபசாரஞ் செய்கிறவனுய் இருப்பானெ
ன்றும் நான் உங்களுக்குச் சொல்லுகி
றேன்.

அன்றியும் பொய்யாணையிடாதிருப்பா 33
யாகவென்பதும் உன் ஆணைகளைக் கரு
த்தாவுக்குச் செலுத்துவாயாகவென்ப
தும் பூர்வத்தாருக்கு உரைக்கப்பட்ட
தென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.—
அல்லாமலும் நான் உங்களுக்குச் சொ 34
ல்லுகிறதாவது, எவ்விதத்திலுஞ் சத்திய
ம்பண்ணக்கூடாது. வானந் தேவாசன
மாய் இருக்கிறபடியால் அதின்மேற் சத்
தியம்பண்ணலாகாது. பூமி தேவனுடை
ய பாதபடியாயிருக்கிறபடியால் அதின்
மேற் சத்தியம்பண்ணலாகாது.— எருச 35
லேம் பெரிய இராசனுடைய நகரமாய்
இருக்கிறபடியால் அதின் மேற் சத்திய
ம்பண்ணலாகாது.—உன் சிரசின் ஒரே ம 36
யிரையும் நீ வெண்மையும் கறுப்புமாக்
கத் திராணியில்லாதபடியால் அதின் மே

37 நீ சத்தியம்பண்ணலாகாது.— உள்ளத்தை உள்ளதென்றும் இல்லத்தை இல்லதென்றும் சொல்லக்கடவீர்கள். இவைகளுக்கு மேற்பட்டது தீமையினாலுண்டாயிருக்கின்றது.

38 கண்ணுக்குப் பதிலாகக் கண்ணையும் பல்லுக்குப் பதிலாகப் பல்லையும் (வாங்க வேண்டுமென்று) சொல்லப்பட்டதைக் 39 கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.— நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது, பொல்லாதவனோடே எதிர்த்துநிற்கக்கூடாது. ஒருவன் உன்னுடைய வலது கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தையும் அவனுக்குத் திருப்பிக்காட்டு.- 40 உன்னுடனே வழக்காடி உன்னுடைய மேலங்கியை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றிருக்கிறவனுக்கு உன் வஸ்திரத்தையும் விட்டுவிடு.-

41 ஒருவன் உன்னை ஒரு காதவழி வரும்படியாகப் பலபந்தம்பண்ணினால் அவனோடே இருகாதவழிமட்டும் நடந்துபோ.

42 உன்னை வேண்டிக்கொள்ளுகிறவனுக்குக் கொடு. உன்னிடத்திற் கடன்வாங்க விரும்புகிறவனுக்கு முகங்கோணாதிருப்பாயாக.

நீ பிறனில் அன்புவைத்து உன் சத்து ருவைப் பகைக்கக்கடவாயென்று சொல் லப்பட்டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்க ள்.—நான் உங்களுக்குச் சொல்லுகிறது 43 பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதா 44 பொல்லாதவர்கள்மேலும், நல்லவர்கள் மேலும், அநீதியுள்ளவர்கள்மேலும் ம ழையைப் பெய்யவும்பண்ணுகிறார்.—அ 45 ப்படியே நீங்கள் அவருக்குப் புத்திரரா யிருக்கும்படிக்கு உங்கள் சத்துருக்களி ல் அன்பு கூர்ந்து உங்களைச் சபிக்கிறவர் களை ஆசிர்வதித்து, உங்களைப் பகைக்கி றவர்களுக்கு நன்மைசெய்து, உங்களை நி ந்திக்கிறவர்களுக்காகவும், உங்களைத் து ன்பப்படுத்துறவர்களுக்காகவுஞ் செப ம்பண்ணுங்கள்.-அல்லாமலும் உங்களில் 46 அன்புகூருகிறவர்கள்மேலேமாத்திரம் அ ன்பாயிருப்பீர்களானால் உங்களுக்கு என் னபலன்வரும். ஆயக்காரரும் அப்படிச் செய்கிறார்களல்லவோ?—உங்கள் சகோ 47 தரரைமாத்திரம் வாழ்த்திக்கொள்வீரக ளானால் அது பெரிய செய்கையாகுமா? அஞ்ஞானிகளும் அப்படிச் செய்கிறார்க

48 எல்லவோ.—ஆகையாற் பரமண்டலங்க
ளிலிருக்கிற உங்கள் பிதா பூரணசற்குண
ராயிருக்கிறதுபோல நீங்களும் பூரணச
ற்குணராயிருக்கக் கடவீர்கள்.

---

## ௬. அதிகாரம்.

[(௧.) தருமத்தின் தன்மை. (௫.) செபத்தின்
தன்மை.(௰௬.)உபவாசத்தின் தன்மை. (௰௯.)
நாந்தேடவேண்டிய பொக்கிஷம். (௨௪) ப
ராபரனுக்கும் உலகத்திற்கும் ஊழியஞ்செய்
தல் (௨௫.)லவுகீக கவலையைவெறுத்தல்-(௩௩)
பராபரனுடைய இராச்சியத்தைத்தேடல்.

1 நீங்கள் மனிதர்களாலே காணப்படும்
பொருட்டாய் உங்கள் தருமத்தை அவர்
களுக்குமுன்பாகச் செய்யாதபடிக்கு எ
ச்சரிக்கையாயிருங்கள், செய்தாற் பரம
ண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதாவினிட
2 த்திலே பலன்பெறாதிருப்பீர்கள்.-ஆகை
யால் நீ தருமஞ்செய்கிறபொழுது மனி
தர்களாற் புகழப்படுவதற்குச் செப ஆ
லயங்களிலும் வீதிகளிலுஞ் செய்கிற வஞ்
சகரைப்போல நீ உனக்குமுன்பாகத் தா

ரை பூதப்பண்ணக்கூடாது. அவர்கள் தங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.-நீ தருமஞ்செய்கிறபொழுது 3 உன் தருமம் அந்தரங்கமாயிருக்கும்படிக்கு உன் வலதுகை செய்கிறதை உன் இடதுகை அறியாதிருக்கக்கடவது.— 4 அப்பொழுது அந்தரங்கமாயிருக்கிறதை நோக்குகிற உன் பிதாத்தாமே வெளியரங்கமாய் உனக்குப் பலனளிப்பார்.

5 அன்றியும் நீ செபம்பண்ணுகிறபொழுது வஞ்சகரைப் போலிருக்கக்கூடாது, அவர்கள் மனிதர்களாற் காணப்படும்படிக்குச்செப ஆலயங்களிலேயும், வீதிகளின் சந்திகளிலேயும், நின்றுகொண்டு செபம்பண்ணவிரும்புகிறார்கள். அவர்கள் தங்கள் பலனை அடைந்துதீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். 6 -நீ செபம்பண்ணுகிறபொழுது உன் வீட்டின் அறைக்குட் பிரவேசித்து அதின் கதவைப் பூட்டினபின்பு அந்தரங்கத்திலிருக்கிற உன் பிதாவை நோக்கிச் செபம்பண்ணு அப்பொழுது அந்தரங்கமாயிரு

க்கிறதை நோக்குகிற உன்பிதா வெளியர
7 ங்கமாய் உனக்குப் பலனளிப்பார்.—அ
ல்லாமலுஞ் செபம்பண்ணுகிற பொழு
து நீங்கள் அஞ்ஞானிகளைப்போல வீணா
ய் வசனிக்கக்கூடாது. அவர்கள் தாங்க
ள் அதிகமாய் வசனித்தாற் கேட்கப்படு
8 வோமென்றுநினைக்கிறார்கள்.-அவர்களு
க்கொப்பாய்ச் செய்யாதிருங்கள் நீங்கள்
உங்கள் பிதாவை நோக்கி வேண்டிக்கொ
ள்ளுமுன்னமே அவர் உங்களுக்கு வே
ண்டுவதின்னதென்று, அறிந்திருக்கிறாரே.
9 ஆகையால் நீங்கள் செபம்பண்ண
வேண்டுவதெப்படியெனிற் பரமண்டல
ங்களிலிருக்கிற எங்கள் பிதாவே உம்மு
டைய நாமம்பரிசுத்தமாய் வணங்கப்படு
10 வதாக,-உம்முடைய இராச்சியம் வருவ
தாக, உம்முடைய சித்தம் பரமண்டலத்
திலே செய்யப்படுகிறது போலப் பூமியி
11 லுஞ் செய்யப்படுவதாக,—இன்றைக்கு
எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை எங்
12 களுக்குத்தாரும் —எங்கள் கடனாளிகளு
க்கு நாங்கள் மன்னிப்பதுபோலத் தே
வரீர் எங்கள் கடன்களைமன்னித்தருளும்,

—நாங்கள் சோதனையிற் பிரவேசியாதப 13
டிசெய்து தீமையினின்று எங்களை இரட்
சித்துக்கொள்ளும், இராச்சியமும் வல்ல
மையும் மகிமையும் உமக்கே என்றென்
றைக்குமுண்டாயிருக்கின்றன, ஆமென். எ
ன்பதேயாம்.—மனிதர்கள் (உங்களுக்கு) 14
செய்த தப்பிதங்களை மன்னிப்பீர்களா
கில் உங்கள் பரம பிதா உங்களுக்கும்
மன்னிப்பார்.— மனிதர்கள் (உங்களுக் 15
கு) செய்ததப்பிதங்களை மன்னியாதிருப்
பீர்களாகில், உங்கள் பிதா உங்கள் தப்பித
ங்களையும் மன்னியாதிருப்பார்.

மேலும் நீங்கள் உபவாசம் பண்ணும் 16
பொழுது வஞ்சகரைப்போல முகவாட
லாயிருக்கக்கூடாது அவர்கள் உபவாச
ம்பண்ணுகிறது மனிதர்களாற் காணப்ப
டும் பொருட்டாய்த் தங்கள் முகங்களை
வதங்கப்பண்ணுகிறார்கள். அவர்கள் தங்
கள் பலனையடைந்துதீர்ந்ததென்று மெ
ய்யாகவே உங்களுக்குச்சொல்லுகிறேன்.
—நீ உபவாசிக்கும்பொழுது, அந்த உ 17
பவாசம் மனிதர்களுக்குக் காணப்படா
மல் அந்தரங்கத்திலிருக்கிற உன் பிதாவு

க்கே காணப்படும்படிக்கு உன்சிரசைத்
தயிலத்தாற் பூசி உன்முகத்தைக் கழுவக்க
18 டவாய். —அப்பொழுது அந்தரங்கமா
யிருக்கிறதை நோக்குகிற உன் பிதா வெ
ளியரங்கமாய் உனக்குப்பலனளிப்பார்.

19 பூமியிலே நீங்கள் உங்களுக்காகப்பொ
க்கிஷங்களைக் கூட்டிவையாதிருங்கள். அ
வ்விடத்திலே பூச்சியுந் துருவும் அவைக
ளைக் கெடுக்கும். திருடருங் கன்னமிட்டு
20 த் திருடுவார்கள். —பரலோகத்திலே உ
ங்களுக்காகப் பொக்கிஷங்களைக் கூட்டி
வையுங்கள் அவ்விடத்திலே பூச்சியாவது
துருவாவது அவைகளைக் கெடுக்கிறதுமி
ல்லை அங்கே திருடர் கன்னமிட்டுத் திரு
21 டுகிறதுமில்லை. —உங்கள் பொக்கிஷமெ
ங்கேயோ அங்கே உங்கள் இருதயமுமி
22 ருக்குமே —கண்ணானது சரீரத்தின் வி
ளக்காயிருக்கின்றது. ஆகையால் உன் க
ண் சொஸ்தமாயிருந்தால், உன்சரீரம் மு
ழுவதும் வெளிச்சம் அடைந்திருக்கும்.
23 —உன்கண் வியாதியாயிருந்தால் உன் சரீ
ரம் முழுவதும் இருள் அடைந்திருக்கும்.
அப்படியிருக்க, உன்னிலுள்ள வெளிச்ச

ம் இருளாயிருந்தால் இருளே மிகவும் மிகுதியாயிருக்குமல்லவா.—ஒருவன் இரண்டெசமான்களுக்கு ஊழியஞ் செய்யமாட்டான், என்னத்தினாலெனில், ஒருவனை அவன் பகைத்து மற்றவனைச் சிநேகிப்பான். அல்லது ஒருவனைப் பற்றிக்கொண்டு மற்றவனை அசட்டைபண்ணுவான். நீங்கள் பராபரனுக்கும் உலகப்பொருளுக்கும் ஊழியஞ்செய்ய மாட்டீர்கள். 24

ஆகையால் உங்கள் சீவனுக்காக என்னத்தைப் போசனஞ் செய்வோம் என்னத்தைப் பானம்பண்ணுவோமென்றும் உங்கள் சரீரத்துக்காக என்னத்தை உடுப்போமென்றுங் கவலைப்படாதிருங்களென்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகாரத்திற்குச் சீவனும் உடைக்குச் சரீரமும் அதிகமாயிருக்கிறதல்லவோ.—ஆகாசத்துப் பறவைகளை நோக்கிப்பாருங்கள் அவைகள் விதைக்கிறதும் அறுக்கிறதுங் களஞ்சியங்களிற் கூட்டிவைக்கிறதுமில்லை. அவைகளுக்கு உங்கள் பரமபிதா உணவைக்கொடுக்கிறார். அவைகளிலும் நீங்கள் மேன்மையுள்ளவ 25 26

27 ர்களல்லவா. —அல்லாமலும் உங்களி
லொருவன் கவலைப்படுகிறதினாலே தன்
சரீர அளவுக்கு ஒரேமுழத்தையுங் கூட்
28 டுவானா (மாட்டானே.) —பின்னும் உ
டைகளுக்காக நீங்கள் கவலைப்படுகிறதெ
ன்ன. வேளியிலே லீலீயென்னும் புஷ்ப
ங்கள் வளருகிறவகையை யுற்றுப்பாருங்க
ள். அவைகள் வருந்துகிறதுமில்லை நூற்
29 கிறதுமில்லை. —அப்படியிருந்தும் மிகு
ந்த மகிமையுடைய சாலோமோனும் அ
வைகளில் ஒன்றைப்போலாகிலும் (அழ
காய்) உடுக்கவில்லையென்று உங்களுக்கு
30 ச் சொல்லுகிறேன். —அப்படியிருக்க,
அற்பவிசுவாசிகளே, ஒருநாள் வளருகிற
துமாய் மறுநாள் அடுப்பிற் போடப்ப
டுகிறதுமாயிருக்கிற புல்லுக்குப் பராப
ரன் இவ்விதமாய் உடுத்துவிக்கிறதால், மி
கவும் அதிகமாய் உங்களுக்கு உடுத்துவி
31 ட்பாரல்லவோ. —ஆகையால் என்னத்
தைப் போசனஞ்செய்வோமென்றும் எ
ன்னத்தைப் பானம்பண்ணுவோமென்
றும் என்னத்தையுடுப்போமென்றும் நீ
ங்கள் கவலைப்படாதிருங்கள். அப்படிப்

பட்டவைகளையெல்லாம் அஞ்ஞானிகள்
தேடுவார்கள். —உங்கள் பரமபிதா இ 32
வைகளெல்லாம் உங்களுக்கு வேண்டிய
வைகளென்று அறிந்திருக்கிறாரே. —மு 33
தலாவது, பராபரனுடைய இராச்சியத்
தையும் அவருடைய நீதியையுந் தேடுங்
கள். அப்பொழுது இவைகளெல்லாம் உ
ங்களுக்குக் கூடக்கொடுக்கப்படும். —ஆ 34
கையால், நாளைக்காகக் கவலைப்படாதிரு
ங்கள். நாளைக்காக நாளைக்குத்தானே க
வலைகளுண்டாகும். ஒவ்வொரு நாளைக்கு
அதனதனுடைய வருத்தம் போதுமே.

---

## ௭. அதிகாரம்.

[(௧) தெளியாதஎண்ணம். (௬) பரிசுத்தமானதைக்காத்தல். (௭) சந்தோஷமாய்வேண்டுதல். (௰௩) நெருக்கமானவாசலின்வழியாய்ச்சீவனிடத்திற்பிரவேசித்தல் (௰௫) கள்ளத்தீர்க்கதரிசிகளுக்குவிலகல். (௨௧) திருவசனத்தின்படிசெய்தல்.]

நீங்கள் (மற்றவர்களை) எண்ணுவதெப் 1
படியோ அப்படி நீங்களும் எண்ணப்
படுவீர்கள். —அல்லாமலும் நீங்கள் அ 2
ளக்கிற அளவின்படியே உங்களுக்கும் அ

3 ளப்பார்கள். —ஆகையால் நீங்கள் (நியா
யமின்றி ஒருவரையும்) குற்றவாளிகளெ
ன்றெண்ணாதிருங்கள். எண்ணினால் உங்க
ளையும் அப்படியே எண்ணுவார்கள். மே
லும் நீ உன் கண்ணிலிருக்கிற உத்திரத்
தைப்பாராமற் சகோதரனுடைய கண்
ணில் இருக்கிற சிராயைப்பார்க்கிறதெ
4 ன்ன? —உத்திரமே உன்கண்ணிலிருக்கையி
ல், நீ சகோதரனை நோக்கி, உன் கண்ணிலி
ருக்கிற சிராயை நான் எடுத்துப்போடுகி
றேன் இடங்கொடு என்று நீ சொல்வதெ
5 ன்ன? —வஞ்சகனே, முதலாவது உன் க
ண்ணிலிருக்கிற உத்திரத்தை எடுத்துப்
போடு, பின்பு சகோதரனுடைய கண்ணி
லிருக்கிறசிராயையெடுத்துப்போட நன்
றாய்ப் பார்ப்பாய்.

6 பரிசுத்தமானதை நீங்கள் நாய்களுக்
குக் கொடுக்கக்கூடாது. அல்லாமலும்
உங்கள் முத்துக்களைப் பன்றிகளுக்குப்
போடக்கூடாது. அப்படிச்செய்தால்,
அவைகள் அந்த முத்துக்களைத் தங்கள்
கால்களால் மிதித்துப் பின்பு திரும்பிக்
கொண்டு உங்களைப்பீறும்.

வேண்டிக்கொள்ளுகிறவனும் வாங்கிக்கொள்ளுகிறான். தேடுகிறவன் கண்டடைகிறான். —8 தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும். ஆகையால் வேண்டிக்கொள்ளுங்கள். அப்பொழுது உங்களுக்குக்கொடுக்கப்படும் தேடுங்கள் அப்பொழுது கண்டடைவீர்கள் தட்டுங்கள். அப்பொழுது உங்களுக்குத்திறக்கப்படும். —9 உங்களில் எந்த மனிதனானாலுந் தன்னிடத்தில் அப்பங்கேட்டுக்கொள்ளுகிற தன் மகனுக்குக் கல்லைக்கொடுப்பானா. —10 மீனை அவன் கேட்டுக்கொண்டால் அவனுக்குப் பாம்பைக்கொடுப்பானா -11 ஆதலாற் பொல்லாதவர்களாகிய நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைச்செய்யும்படி அறிந்திருக்க, பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதா தம்மைவேண்டிக்கொள்ளுகிறவர்களுக்கு மிகவும் அதிகமாய் நன்மைகளைக் கொடாமலிருப்பாரா.

12 அன்றியும் மனிதர்கள் உங்களுக்குச் செய்யும்படி நீங்கள் விரும்புகிறவைகளெவைகளோ அவைகளை நீங்களும் அவர்களுக்குச்செய்யுங்கள். இதுவே நியாயப்

பிரமாணமுந் தீர்க்கதரிசனங்களுமாம்.
கேட்டுக்குக் கொண்டுபோகிற வாசல்
13 விரிவாயும் வழி விசாலமுமாயிருக்கின்ற
ன. அதின்வழியாய்ப் பிரவேசிக்கிறவர்க
ள் அநேகர். —சீவனுக்குக் கொண்டு
14 போகிற வாசல் மிகவும் இடுக்கமாயும் வ
ழி நெருக்கமாயுமிருக்கின்றன. சிலர்மா
த்திரம் அதைக் கண்டடைகிறார்கள். ஆத
லால் நீங்கள் இடுக்கமான வாசல்வழியா
ய்ப் பிரவேசியுங்கள்.

15 மேலும் ஆட்டைப்போல உருவும் பீ
றுகிற கோனாய்களைப்போல மனசுமு
டையவர்களாய் உங்களிடத்திற்கு வருகிற
கள்ளத் தீர்க்கதரிசிகளுக்கு நீங்கள் இடங்
கொடாமல் எச்சரிக்கையாயிருங்கள்.—
16 அவர்களுடைய கனிகளினாலே அவர்களை
அறிவீர்கள். முட்செடிகளில் திராட்சப்
பழங்களையும் முட்பூண்டுகளில் அத்திப்
17 பழங்களையும் பறிக்கிறார்களா?--அப்படி
யே நல்ல மரங்களெல்லாம் நல்ல கனிக
ளைக் கொடுக்கும். கெட்ட மரம் பொல்
18 லாத கனிகளைக்கொடுக்கும்.-நல்ல மரம்
பொல்லாத கனிகளையுங் கெட்ட மரம் ந

ல்லகனிகளையுங் கொடுக்கமாட்டாது.—நல்ல கனிகளைக் கொடாதமரங்களெல்லா 16 மீவெட்டபட்டு அக்கினியிலே போடப் படும்.—ஆதலால் அவர்களுடைய கனிக 20 ளினாலேஅவர்களை அறிவீர்கள்.

என்னைக் கத்தாவே கத்தாவே என்று 21 சொல்லுகிற எவனும் பரலோக இராச்சி யத்திற் பிரவேசிப்பதில்லை. பரமண்ட த்திலே இருக்கிற என் பிதாவினுடைய சி த்தத்தின்படி செய்கிறவனே அதிற் பிர வேசிப்பான்.-அந்நாளிலே அநேகர் என் 22 னை நோக்கி ஆ! கத்தாவே,கத்தாவே, உம து நாமத்தினாலே நாங்கள் தீர்க்கதரிசனம் உரைத்தோமல்லவோ! உமது நாமத்தினா லேபசாசுக்களைத் துரத்தினோமல்லவோ! உமது நாமத்தினாலே அநேக அற்புதங்க ளைச் செய்தோமல்லவோ என்பார்கள்.- 23 அப்போது நான் அவர்களை நோக்கி,நா ன் ஒருக்காலும் உங்களை அறியவில்லை.அக் கிரமக்காரரே,நீங்கள் என்னைவிட்டுப்போ ங்களென்று அவர்களுக்கு அறிவிப்பேன்

ஆகையால் நான் சொல்லிய வசனங்க 24 ளைக்கேட்டு அவைகளின் படி செய்கிறவ

வனே அவனைத் தன் வீட்டைக் கல்மலை
யின்மேற் கட்டின புத்தியுள்ள மனிதனு
25 க்கொப்பிடுவேன்.— அந்த வீடு கல்மலை
யின் மேல் அஸ்திபாரம்போட்டிருந்தப
டியாற் பெருமழை சொரிந்தும் பெரு
வெள்ளம் வந்துங் காற்றுக்கள் அடித்து
அந்த வீட்டின் மேலே மோதியும்
26 அது விழவில்லை.- நான் சொல்லிய வசனங்
களைக் கேட்டும் அவைகளின்படி செய்
யாதிருக்கிறவனெவனோ அவன் தன் வீட்
டை மணலின் மேற் கட்டின புத்தியீன
27 னுக்கொப்பாயிருப்பான்.- பெருமழை
சொரிந்து பெருவெள்ளம்வந்து காற்று
களுமடித்து அந்த வீட்டின் மேல் மோ
தியபொழுது அது விழுந்து முழுவது
ம் இடிந்துபோயிற்றென்றார்.

28 பின்பு நடந்ததென்னவெனில், இயேசு
வானவரிந்த வசனங்களைச் சொல்லி முடி
த்தபொழுது அவர் வேதபாரகரைப்போ
29 லல்ல. -அதிகாரமுடையவரைப் போலப்
போதித்தபடியினாற் சனங்கள் அவருடை
ய உபதேசத்தைக் குறித்துப் பிரமித்தா
ர்கள்.

## அ. அதிகாரம்.

[ (குஷ்டரோகியையுஞ் சேனைத்தலைவனையும் பேதுருவினுடைய மாமியையும் மற்றவர்களையுங் கிறிஸ்து சுகமாக்கினது. (௰௮.) கிறிஸ்துவைப்பின்பற்றுகிறதற்கானவகை. (௨௩.) சமுத்திரத்தையுங் காற்றையும் அமைதலாக்கினது. (௨௮.) இரண்டுபசாசுகளைத் துரத்திப் பன்றிக்கூட்டத்திலே போகப்பண்ணினது.

1 அவர் மலையிலிருந்திறங்கிவந்தபொழுது திரளானசனங்கள் அவரைப்பின்தொடர்ந்தார்கள்.— 2 அப்பொழுது ஒரு குஷ்டரோகிவந்து அவருக்குமுன்பாக விழுந்து வணங்கி ஆண்டவரே உமக்குச் சித்தமானால் என்னைச் சுத்தமாக்க உம்மால் ஆகுமென்றான்.— 3 இயேசுவானவர் தமது கையை நீட்டி அவனைத்தொட்டு எனக்குச் சித்தமுண்டு சுத்தமாகு என்றார். உடனே குஷ்டரோகம் நீங்க அவன் சுத்தமானான்.— 4 அல்லாமலும் இயேசுவானவர் அவனை நோக்கி நீ இதை ஒருவனுக்குஞ் சொல்லாமலிருக்க நினை அவர்களுக்குச்சாட்சியாகும்படிக்கு நீ போய் ஆசாரியனுக்கு உன்னைக் காண்பித்து மோசே

கட்டளையிட்ட காணிக்கையைச் செலுத்
து என்றார்.
5 இயேசுவானவர் கப்பர்நாகூம் பட்
டணத்திற் பிரவேசித்த பின்பு நூறு
பேருக்குச் சேர்வைக்காரனொருவன் அ
6 வரிடத்தில வந்து அவரை நோக்கி,—ஆ
ஆண்டவரே என் வேலைகாரன் திமிர்வாத
முள்ளவனாய் வீட்டிலே கிடந்து மிகவும்
உபாதிப்படுகிறானென்று வேண்டிக்கொ
7 ண்டான்.—அவனுடனே இயேசுவானவர்
நான் வந்து அவனைக் குணமாக்குவேனெ
8 ன்றார்.—அதற்கு அந்தச் சேர்வைக்கார
ன் சொன்னது ஆண்டவரே நீர் என் வீ
ட்டுக்குப் பிரவேசிப்பதற்கு நான் பாத்
9 திரனல்ல,—அல்லாமலும் நான் அதிகார
த்துக்குக் கீழ்ப்பட்டவனாயிருந்தும் என
க்குட்பட்டிருக்கிற சேவகரிலொருவனை
ப் போவென்னப்போகிறான், மற்றொருவ
னை வாவென்ன வருகிறான் எனக்கு அடி
மையானவனை இதைச் செய்யென்னச்
செய்கிறான். ஆகையால் நீர் ஒரு வார்த்
தைமாத்திரஞ்சொன்னால் என்வேலைகார
10 ன் சொஸ்தமடைவானென்றான்.—இயே

சுவானவர் அதைக்கேட்டு ஆச்சரியப்பட்டுத் தமக்குப்பின்செல்லுகிறவர்களை நோக்கி இஸ்ரவேலருக்குள்ளும் நான் இப்படிப்பட்ட விசுவாசத்தைக் காணவில்லை என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.—பின்னும் நான் உங்களுக் 11 குச் சொல்லுகிறதாவது, அநேகம்பேர் கிழக்கிலும், மேற்கிலுமிருந்துவந்து பரலோக இராச்சியத்திலே ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்பவர்களுடனே கூடப்பந்தியிலிருப்பார்கள்.—இராச்சியத்தி 12 ன்பிள்ளைகள் காரிருளிலே புறம்பாகத்தள்ளப்படுவார்கள். அங்கே அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்குமென்று, சொன்னபின்பு,—அவர் அந்தத் தலைவ 13 னை நோக்கி நீ போகலாம் உன் விசுவாசத்தின்படி உனக்காகக்கடவதென்றார்.அந்நாழிகையிலே அவனுடைய வேலைகாரன் சொஸ்தமடைந்தான்.

இயேசுவானவர்பேதுருவின் வீட்டிலே 14 வந்து அவனுடைய மாமி சுரமாய்க் கிடக்கிறதைக் கண்டு,-அவள் கையைத் தொ 15 ட்டார். உடனே சுரம் அவளை விட்டு நீ

ங்கிற்று. அவள் எழுந்திருந்து அவர்களு
க்கு ஊழியஞ்செய்தாள்.

19 அஸ்தமானபொழுது பசாசுபிடித்திரு
ந்த அநேகரை அவரிடத்துக்குக் கொண்
டுவந்தார்கள். அவர் நமது பலவீனங்களை
ஏற்றுக்கொண்டு நம்முடைய நோய்களை
ச் சுமந்தாரென்று தீர்க்கதரிசியாகிய ஏசா
யாய்ச் சொன்னது நிறைவேறும்படிக்
17 கு, - அவர் அந்த ஆவிகளை ஒரு வார்த்தை
யினாலே துரத்திப் பிணியாளிகளெல்லா
ரையுங் குணமாக்கினார்.

18 பின்பு இயேசுவானவர் அநேக சனங்
கள் தம்மைச் சூழ்ந்திருக்கக் கண்டு, அக்
கரைக்குப்போகக் கட்டளையிட்டார்.

19 அப்பொழுது வேதபாரகனொருவன் வ
ந்து அவரை நோக்கிப் போதகரே நீர் எ
ங்கேபோனாலும் உம்மைப் பின்பற்று
20 வேனென்றான். - - அவனுடனே இயேசு
வானவர் சொன்னது நரிகளுக்குக் குழி
களும் ஆகாசத்துப் பறவைகளுக்குக் கூ
டுகளுமுண்டு, மனிதனுடைய குமாரனோ
தலைசாய்க்கிறதற்குஇடமில்லாதவனாயிரு
க்கிறானென்றார்.

பின்னும் அவருடைய சீஷர்களில் ஒரு ௨௧
வன் அவரை நோக்கி ஆண்டவரே, முன்பு
நான் போய் என் தகப்பனை அடக்கம்ப
ண்ணுவதற்கு உத்தரவுதாருமென்றான்.-
அவனுடனே இயேசுவானவர் சொன்ன ௨௨
தாவது, மரித்தோர் தங்களிடத்தில் மரி
த்தவர்களை அடக்கம்பண்ணட்டும், நீ என்
னைப் பின்பற்றிவாவென்றார்.

பின்பு அவர் படகில் ஏறுகிறபொழு ௨௩
து சீஷர்கள் அவர் பின்சென்று ஏறினார்
கள்.—அப்பொழுது படவு அலைகளினா ௨௪
லே மூடப்படத்தக்கதாய்க் கடலிற் பெ
ருங் காற்றுண்டாயிற்று. அவரோ நித்
திரைபண்ணினார்.— அப்பொழுது அவ ௨௫
ருடைய சீஷர்கள் வந்து அவரை எழுப்
பி ஆண்டவரே, எங்களை இரட்சிக்கவே
ண்டும் கெட்டுப்போகிறோமேயென்றார்
கள்.—அவர்களை அவர் நோக்கி ஆ! அற் ௨௬
பவிசுவாசிகளே ஏன் பயப்படுகிறீர்களெ
ன்று சொல்லி, எழுந்து காற்றுகளையுங் க
டலையும் அதட்டினார். உடனே மிகுந்த
அமைதலுண்டாயிற்று.-அவர்கள் மிகவு ௨௭
ம் ஆச்சரியப்பட்டுக் காற்றுகளுங் கட

லும் இவருக்குக் கீழ்ப்படியத்தக்கதாக
இவர் எப்படிப்பட்டவரோவென்று சொ
ன்னார்கள்.

28 பின்பு அவர் அக்கரையிலே கெர்கே
சேனர் தேசத்திலே சேர்ந்தார். அவ்வழி
யாய் மற்றொருவரும் நடவாமலிருக்கத்
தக்கதாக மிகுந்த துஷ்டராய்ப் பசாசுபி
டித்த மனிதர்கள் இரண்டுபேர் பிரேத
க் கல்லறைகளிலிருந்து புறப்பட்டு அவ
29 ருக்கெதிராக வந்து,—ஆ, யேசுவே! ப
ராபரனுடைய குமாரனே, எங்களுக்கும்
உமக்குமென்ன. காலம் வரு முன்னமே
எங்களை வேதனைப்படுத்தும் படிக்கு இ
ங்கே வந்தீரோவென்று கூப்பிட்டார்க
30 ள்.—அல்லாமலும் அவர்களுக்குச் சற்
றே தூரமாய் அநேகம்பன்றிகள் கூட்ட
31 மாய் மேய்ந்துகொண்டிருந்தன.—அ
ப்பொழுது பசாசுக்கள் நீர் எங்களைத் து
ரத்துவீரானால் நாங்கள் அந்தப் பன்றிக்
கூட்டத்திற் பிரவேசிக்கும்படிக்கு உத்த
ரவு கொடுமென்று அவரை வேண்டிக்
32 கொண்டார்கள்.—போங்களென்று அ
வர்களுக்குச் சொன்னார். உடனே அவர்

கள் புறப்பட்டுப் பன்றிக்கூட்டத்திற் பி
ரவேசித்தார்கள். அப்பொழுது பன்றிக
ளெல்லாம் உயர்ந்த மேட்டிலிருந்து கட
லிற்பாய்ந்து சலத்திலே மாண்டுபோ
யின — அவைகளை மேய்த்தவர்களோ ஓ 33
டிப் பட்டினத்திற் சென்று எல்லாவற்
றையும் பசாசு பிடித்திருந்தவர்களுடை
ய சங்கதியையும் அறிவித்தார்கள். — அ 34
ப்பொழுது பட்டினத்தாரெல்லாரும் இ
யேசுவுக்கு எதிராகப் புறப்பட்டு அவ
ரைக்கண்டு தங்கள் எல்லைகளை விட்டுப்
போகும் படிக்கு அவரை வேண்டிக்
கொண்டார்கள்.

---

## ௯ அதிகாரம்.

[(௨) திமிர்வாதக்காரனைக் குணமாக்கினது. (௯) மத்தேயுவை அழைத்தது, (௰) ஆயக்காரரோடே சாப்பிட்டது. (௰௪) உபவாசம்பண்ணுத சீஷருக்காகப் பேசினது. (௨௰) பெரும்பாடுள்ள ஸ்திரீயைக் குணமாக்கினது. (௨௩) யாவீருவினுடைய குமாரத்தியை உயிரோடே யெழுப்பினது. (௨௭) இரண்டு குருடருக்குப் பார்வையிட்டது. (௩௨) ஊமையனைப் பேசப் பண்ணினது. (௩௬) சனங்கள்மேலிரங்கினது.

அப்பொழுது அவர் படகிலேறி இக் 1

கரைப்பட்டுத் தமது பட்டினத்தில் வந்
2 தார். —அங்கே படுக்கையின்மேற் கிட
ந்த திமிர்வாதக்காரனை அவரிடத்துக்குக்
கொண்டு வந்தார்கள். இயேசுவானவர்
அவர்களுடைய விசுவாசத்தைக் கண்டு,
திமிர்வாதக்காரனை நோக்கி மகனே திட
மாயிரு உன் பாவங்கள் மன்னிக்கப் பட்
3 டனவென்றார். -அங்கேயிருந்த வேதபா
ரகரிற் சிலர் இவன் தேவதூஷணஞ் சொ
ல்லுகிறானென்று எண்ணிக்கொண்டார்
4 கள். —இயேசுவானவர் அவர்களுடைய
நினைவுகளை அறிந்து நீங்கள் உங்களிருத
யங்களிற் பொல்லாங்கானவைகளை நினை
5 க்கிறதென்ன?—உன் பாவங்கள் மன்னி
க்கப்பட்டன வென்று சொல்லுகிறதோ
எழுந்திருந்து நடவென்று சொல்லுகிற
6 தோ,—எது எளிது மனிதனுடைய கு
மாரன் பூமியிற் பாவங்களை மன்னிக்கிற
தற்கு அதிகாரமுடையவனென்பதை நீ
ங்கள் அறியும்படிக்கு அவர் திமிர்வாதக்
காரனைநோக்கி, நீ எழுந்திருந்து உன்
படுக்கையை எடுத்துக்கொண்டு உன் வீ
7 ட்டுக்குப் போவென்றார். —உடனே அ

வனெழுந்து தன் வீட்டுக்குப் போனான்.
—அதைக் கண்ட சனங்கள் ஆச்சரியப்ப 8
ட்டு, மனிதருக்கு இப்படிப்பட்ட அதி
காரத்தைக் கொடுத்த பராபரனைப் புக
ழ்ந்தார்கள்.

இயேசுவானவர் அவ்விடம் விட்டுப் பு 9
றப்பட்டுப் போகையில் ஆயத்துறையி
ல் உளுக்கார்ந்திருந்த ஒரு மனிதனைக் க
ண்டார். அவனுக்கு மத்தேயுவென்று
பேர். அவனை அவர் நோக்கி, என்னைப்
பின்பற்றி வாவென்றார். அவனெழுந்திரு
ந்து அவர் பின்சென்றான்.

பின்பு அவர் வீட்டிலே போசனபந் 10
தியிருக்கையில், அநேகம் ஆயக்காரரும்
பாவிகளும் வந்து இயேசுவுடனேயும் அ
வருடைய சிஷருடனேயுங் கூடப் பந்தி
யிருந்தார்கள். —பரிசேயர் அதைக்கண் 11
டு, அவருடைய சிஷர்களை நோக்கி, என்
னத்தினாலே உங்கள் போதகர் ஆயக்கார
ரோடும் பாவிகளோடும் போசனம்பண்
ணுகிறாரென்றார்கள்.— இயேசுவானவர் 12
அதைக் கேட்டு, அவர்களை நோக்கி, சொ
ஸ்தமுள்ளவர்களுக்கு வயித்தியன் வேண்

டுவதில்லை வியாதி யுள்ளவர்களுக்கே அவ
13 ன் வேண்டும். —மேலும் பலியிலும் இ
ரக்கத்தை விரும்புகிறேனென்கிற (வாக்
கியத்தின் கருத்தை) நீங்கள் போய்ப் ப
டித்துக் சொள்ளுங்கள். அந்தப்படி நா
ன் நீதிமான்களையல்ல பாவிகளையே மன
ந்திருப்புதற்கு அழைக்க வந்தேனென்
14 றார். —அந்நேரத்திலே யோவானுடை
ய சீஷர்கள் அவரிடத்தில் வந்து,தாங்களு
ம் பரிசேயரும் அநேகந்தரம் உபவாச
ம் பண்ணியிருக்கிறோம். உம்முடைய சீ
ஷர்களோ உபவாசம் பண்ணாமலிருக்கி
16 றார்கள்,அதேன் என்றார்கள்.-இயேசுவா
னவர் அவர்களுக்குச் சொன்னது, கலி
யாணத்துக்கு வந்த மனிதர்கள் மணவா
ளன் தங்களோடிருக்கையில் துயரப்படு
வார்களா. மணவாளன் அவர்களைவிட்டு
நீக்கப்படுங்காலம்வரும். அப்பொழுது
அவர்கள் உபவாசம் பண்ணுவார்கள். —
17 ஒருவனுங் கோடித்துண்டைப் பழய வ
ஸ்திரத்தின்மேற் போட்டிணைக்கமாட்
டான். இணைத்தால் அதிலிணைத்த துண்டு
அவ்வஸ்திரத்திலெடுபட்டுப்போக அதிக

ப் பொத்தலுண்டாகும். —மேலும் தி 17
ராட்சப் பழங்களின் புதிய இரசத்தைப்
பழய துருத்திகளில் வார்க்கமாட்டார்க
ள். வார்த்தால் துருத்திகள் கிழிந்துபோ
கும். இரசமுஞ் சிந்திப்போகுந் துருத்
திகளுங் கெட்டுப்போகும். புதிய இரச
த்தைப் புதிய துருத்திகளில் வார்த்துவை
த்தால் அப்பொழுது இரண்டும் பத்திர
ப்பட்டிருக்குமென்றார்.

அவர் இவைகளை அவர்களோடே பே 18
சுகையில், தலைவனொருவன் வந்து வணக்
கமாய்விழுந்து அவரைநோக்கி, இந்நே
ரத்திலே என் மகள் இறந்துபோனாள், அ
வள் உயிரடையும்படிக்கு நீர் வந்து அவ
ள்மேல் உமது கையை வையும். அப்பொ
ழுது பிழைப்பாள் என்றான். -இயேசுவா 19
னவர் எழுந்திருந்து தமது சீஷர்களோ
டுங்கூட அவன் பின்னேபோனார்.

அவர் போகையிற் பன்னிரண்டு வரு 20
ஷமாய்ப் பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரிவ
ந்து,—இவருடைய வஸ்திரத்தைத் தொ 21
ட்டமாத்திரமே சொஸ்தம் அடையலா
மென்று தன் உள்ளத்திலே எண்ணி, அ

வருக்குப் பின்னாலே போய், அவருடை
ய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்டாள்.
22 —அப்பொழுது இயேசுவானவர் திரும்
பி அவளை நோக்கி, மகளே, திடமாயிரு,
உன் விசுவாசத்தினாலே உனக்குச் சுகமு
ண்டாயிற்றென்றார். அந்நேரமே அந்த
ஸ்திரி சொஸ்தம் அடைந்தாள்.
23 பின்பு இயேசுவானவர் அத்தலைவனுடை
ய வீட்டிற் சேர்ந்து தாரை யூதுகிறவர்
களையும் இரைகிற சனங்களையுங் கண்டு,
24 —அவர்களை நோக்கி, வெளியே போங்க
ள். இந்தப்பெண் இறந்துபோகவில்லை.
நித்திரை பண்ணுகிறாளென்றார். அவர்க
25 ள் அவரை நோக்கி நகைத்தார்கள். —ச
னங்கள் வெளியே துரத்தப்பட்டபின்பு
அவர் உள்ளே பிரவேசித்து, அந்தப் பெ
ண்ணின் கையைப்பிடித்தார். உடனே அ
26 வள் எழுந்திருந்தாள். —அந்தச்செய்கை
யினாலே அவருடைய கீர்த்தி அத்தேசத்
திலெங்கும் பிரபலமாயிற்று.
27 இயேசுவானவர் அவ்விடம் விட்டுப்
போகையிற் குருடரிருவர் அவர்பின்னே
சென்று, ஆ! தாவீதின் குமாரனே, எங்க

ளுக்கிரங்குமென்று கூப்பிட்டார்கள். —
அவர் வீட்டிலே வந்தபின்பு அந்தக் குரு 28
டர் அவரிடத்துக்கு வந்தார்கள். இயே
சுவானவர் அவர்களை நோக்கி, இப்படி
ச்செய்ய எனக்கு வல்லமையுண்டென்று
விசுவாசிக்கிறீர்களோவென்றார். ஆண்ட
வரே, விசுவாசிக்கிறோமென்றார்கள். —
அப்பொழுது அவர் அவர்களுடைய க 29
ண்களைத்தொட்டு, உங்கள் விசுவாசத்தின்
படி உங்களுக்கு ஆகக்கடவதென்றார். —
உடனே அவர்களுடைய கண்கள் திறக்க 30
ப்பட்டன. பின்பு இயேசுவானவர் அவர்
களை நோக்கி, நீங்கள் இதை ஒருவனுக்கும்
அறிவிக்கவேண்டாமென்று கெட்டியா
ய்க் கட்டளையிட்டார். —அவர்களோ பு 31
றப்பட்டு, அத்தேசத்திலெங்கும் அவரு
டைய கீர்த்தியைப் பிரசித்தம்பண்ணினா
ர்கள்.

அவர்கள் புறப்பட்டுப்போகையில், ப 32
சாசு பிடித்திருந்த ஊமையனை அவரிடத்
துக்குக் கொண்டுவந்தார்கள். —பசாசு 33
துரத்தப்பட்டபின்பு ஊமையன் பேசி
னான். சனங்கள் ஆச்சரியப்பட்டு, இப்ப

டியாக இஸ்ரவேலருக்குள்ளே ஒருக்கா
லுங் காணப்படட்டதில்லையென்றூர்கள்.
34 — பரிசெயர் இவன் பசாசுக்களுடைய
தலைவனாலே பசாசுக்களைத் துரத்துகிறு
35 னென்றூர்கள். —பின்பு இயேசுவானவர்
சகல பட்டினங்களையுங் கிராமங்களையுஞ்
சுற்றிநடந்து செப ஆலயங்களிலே போ
தகம்பண்ணி, இராச்சியத்தைக் குறித்து
ச்சுவிசேஷித்தைப் பிரசங்கித்துச் சன
ங்களுக்குண்டான எந்த வியாதியையும் எ
ந்த நோயையும் நீக்கி அவர்களைக் குணமா
36 க்கினூர்.—அப்பொழுது அவர் மிகுந்த
சனங்களைப் பார்த்து மேய்ப்பனில்லாத
ஆடுகளைட்போல அவர்கள் சோர்ந்துபோ
யச் சிதறப் பட்டவர்களாயிருந்தபடியா
ல் அவர்களைக் குறித்து மிகவும் மனது
ருகித் தமது சீஷர்களை நோக்கி, அறுப்
பு மிகுதியாகவேயிருக்கின்றது வேலையா
ட்கள் சிலர் மாத்திரமிருக்கிறூர்கள். —
37 ஆதலால் அறுப்புக்கு எசமான் தமது
அறுப்புக்கு வேலையாட்களை அனுப்ப
வேண்டுமென்று அவரை வேண்டிக்கொ
ள்ளுங்கள் என்றூர்.

---

## ௰. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து அப்போஸ்தலர்கள் பன்னிருவருக்குங் கட்டளைகளைக்கொடுத்தது, (௰௬) துன்பத்தைச்சகிக்கும்படி ஆறுதலைச் சொல்லி,(௪௰) அவர்களைச் சேர்த்துக்கொள்ளுகிறவர்களுக்கு ஆசீர்வாதத்தையறிவித்தது.

1 அப்பொழுது அவர் தம்முடைய பன்னிரண்டு சீஷர்களையுந் தம்மிடத்தில் அழைத்து அசுத்தமான ஆவிகளைத் துரத்தவுஞ் சகலவிதமான வியாதிகளையும் நோய்களையும் நீக்கவும் அவர்களுக்கு அதிகாரங் கொடுத்தார்.— 2 அந்தப் பன்னிரண்டு அப்போஸ்தலர்களின் நாமங்களென்னவெனில், முந்தினவனாகிய பேதுரு என்னப்பட்ட சீமோன், அவனுடைய சகோதரனாகிய அந்திரேயா, சேபேதேயுவின் குமாரன் யாக்கோபு, அவனுடைய சகோதரன் யோவான்,— 3 பிலிப்பு, பருத்தோலோமேயு, தோமா, ஆயக்காரனான மத்தேயு, அல்பேயுவின் குமாரன் யாக்கோபு, ததேயு என்னும் மறுநாமமுள்ள இலெபேயும்,— 4 கானானாகிய சீ

மோன், இயேசுவைக்காட்டிக் கொடுத்த
வனான யூதா இஸ்காரியோத்து என்னப்
பட்டவர்களே.

5 இயேசுவானவர் அந்தப்பன்னிருவரை
யும் அனுப்ப அவர்களுக்குக் கட்டளையி
ட்டுச் சொன்னதாவது, நீங்கள் புறத்தே
6 சத்தாரிடத்துக்குப் போகாமலும்,—சா
மாரியருடைய பட்டினங்களிற் பிரவேசி
யாமலுங் காணமற்போன ஆடுகளாயிரு
க்கிற இஸ்ரவேல் குடும்பத்தாரிடத்துக்
7 குப் புறப்பட்டுப் போய்,—பரலோக
இராச்சியஞ் சமீபமாய் வந்ததென்று கூ
8 றி,—வியாதிப்பட்டவர்களைக் குணமாக்
கிக் குஷ்டரோகிகளைச் சுத்தம்பண்ணி
மரித்தோரை யெழுப்பிப் பசாசுகளைத்
துரத்துங்கள். நீங்கள் இலவிசமாய்ப் பெ
ற்றுக்கொண்டீர்கள் இலவிசமாய்க் கொ
9 டுங்கள்.— நீங்கள் கச்சைகளிற் பொன்னை
யாவது வெள்ளியையாவது செம்பையா
வது வழிக்காகப் பையையாவது இரண்
டங்கிகளையாவது பாத இரட்சைகளையா
வது தடியையாவது உங்களுக்காகத் தே
10 டி வைக்கவேண்டாம்.—வேலைசெய்கிற

வன் தனக்கு வேண்டிய ஆகாரத்தைப்
பெறும்படிக்குப் பாத்திரவானாயிருக்கி
றானே.—அல்லாமலும் எந்தப்பட்டின 11
த்திலுங் கிராமத்திலும் நீங்கள் பிரவேசி
க்கும்பொழுது, அதிலேயிருக்கிற பாத்
திரவான் இன்னானென்று விசாரித்துக்
கொண்டு நீங்கள் புறப்படுமளவும் அவ
னிடத்திலிருங்கள்.—அந்த வீட்டுக்குட்பி 12
ரவேசிக்கும்பொழுது நீங்கள் அதிலிரு
க்கிறவர்களை வாழ்த்திக்கொள்ளுங்கள்.—
அந்தக் குடும்பத்தார் பாத்திரவான்களா 13
யிருந்தால் நீங்கள் அவர்களுக்குச் சொன்
ன சமாதானம் அவர்களைச் சேரக் கடவ
து. பாத்திரவான்களல்லாதிருந்தால் அந்
த வாழ்த்துதல் உங்களிடமாய்த் திரும்பக்
கடவது.—எங்கேயாகிலும் அவர்கள் உங் 14
களை அங்கிகரித்துக்கொள்ளாமலும் உங்
கள் வசனங்களுக்குச் செவிகொடாமலு
ம் இருந்தால் நீங்கள் அந்தவீட்டையாவ
து பட்டினத்தையாவது விட்டுப் புறப்
படுகையில் உங்கள் கால்களிலுள்ள தூளை
உதறிப்போடுங்கள்.—நியாயத்தீர்ப்புநா 15
ளிலே சோதோங் கொமோறு தேசத்தை

ப்பார்க்கிலும் அந்தப்பட்டினத்துக்கு
அதிக தண்டனை கிடைக்குமென்று மெய்
யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.
16 —பாருங்கள் ஆடுகளை ஓனாய்களுக்குள்
ளே (அனுப்புகிறதுபோல) உங்களை அ
னுப்புகிறேன் ஆகையால் நீங்கள் பாம்பு
களைப்போல விவேகமுள்ளவர்களாயும்
புறாக்களைப்போலக் கபடமில்லாதவர்க
17 ளாயுமிருக்கவேண்டும்.—அப்படியே நீ
ங்கள் மனிதர்களிடத்திற் சாவதானமாயி
ருங்கள். என்னத்தினாலென்னில் உங்களைப்
பெரிய சங்கத்தாருக்கு ஒப்புக்கொடுத்
துத் தங்கள் ஆலயங்களிலே உங்களை வா
18 ரினால் அடிப்பார்கள். — என்னிமித்தம்
நீங்கள் துரைகளிடத்துக்கும் இராசாக்க
ளிடத்துக்குங் கொண்டுபோகப்பட்டு அ
வர்களுக்கும் புறத்தேசத்தாருக்கும் மு
19 ன்பாகச் சாட்சிகளாயிருப்பீர்கள்.—அ
வர்கள் உங்களை ஒப்புக்கொடுக்கும் பொ
ழுது நீங்கள் பேசவேண்டுவது அந்நே
ரத்திலே உங்களுக்கு அருளிச் செய்யப்
படும். ஆகையால் எப்படி எதைப்பேச
வோமென்று கவலைப்படாதிருங்கள்.—

பேசுகிறவர்கள் நீங்களல்ல உங்கள் பிதா 20 வின் ஆவி உங்களிலிருந்து பேசுகிறவர். —அல்லாமலுஞ் சகோதரன் தன் சகோ 21 தரனையுந் தகப்பன் தன்பிள்ளையையும் மரணத்துக்கொப்புக்கொடுப்பார்கள் தாய்தகப்பன்மாரைப் பிள்ளைகள்விரோதித்து அவர்கள் மரணமடையும்படிக்குச் செய்விப்பார்கள்.—என்னுடைய நாமத் 22 தினிமித்தம் நீங்கள் எல்லாராலும் பகைக்கப்படுவீர்கள். ஆகிலும் முடிவுபரியந்தம் நிலைத்திருக்கிறவனே இரட்சிக்கப்படுவான்-அல்லாமலும் மனிதனுடையகு 23 மாரன் வரும்வரைக்கும் நீங்கள் இஸ்ரவேலருடைய பட்டினங்களையெல்லாங்கடந்துபோய் வரமாட்டீர்களென்று மெய்யாகவே உங்களுக்குச்சொல்லுகிறேன். ஆதலால் ஒரு பட்டினத்திலே உங்களைத்துன்பப்படுத்தினால் மறுபட்டினத்துக்கு ஓடிப்போங்கள்.-சீஷனானவன் போத 24 கனிலும் அடிமைப்பட்டவன் தன் எசமானிலும் மேற்பட்டவர்களல்ல,-சீஷன் த 25 ன் போதகனைப்போலவும் அடிமைப்பட்டவன் தன் எசமானைப்போலவுமிருக்கிற

து அவர்களுக்குப் போதுமே. வீட்டெ
சமானைப் பெயெல்செபூலென்று அவர்
கள் சொல்வார்களானால் அவருடைய வீ
ட்டாரை அதிகமாய் அப்படிச்சொல்வா
ர்களல்லவா. ஆதலால் அவர்களுக்குப் ப
26 யப்படாதிருப்பீர்களாக.— வெளியாக்க
ப்படாத மறைபொருளில்லை, அறியப்ப
27 டாத இரகசியமுமில்லை.- நான் உங்களுக்
கு இருளிலே சொல்லுகிறதை நீங்கள்
வெளிச்சத்திற் சொல்லுங்கள், நீங்கள் இ
ரகசியமாய்க் கேட்கிறதை மேடைகளில்
28 இருந்து பிரசித்தஞ்செய்யுங்கள்,—அல்
லாமலும் ஆத்துமாவைக் கொலைசெய்ய
த்திராணியில்லாமற் சரீரத்தைமாத்திரங்
கொலைசெய்கிறவர்களுக்கு நீங்கள் பயப்
படவேண்டாம், ஆத்துமாவையுஞ் சரீரத்
தையும் நரகத்திலே கெடுக்க வல்லவருக்
29 குப் பயப்படுங்கள்.- ஒரு காசுக்கிரண்
டு அடைக்கலான் குருவிகளை விற்கிறார்கள
ல்லவோ, ஆனாலும் உங்கள் பிதாவின் உத்த
ரவில்லாமல் அவைகளிலொன்றுந் தரையி
30 லே விழாது.- அல்லாமலும் உங்களதலையி
ன் மயிரெல்லாம் எண்ணப்பட்டிருக்கின்

றது.—ஆதலாற் பயப்படாதிருங்கள், அ 31
நேகம் அடைக்கலான் குருவிகளைப் பார்
க்கிலும் நீங்கள் மேன்மையாய் இருக்கிறீ
ர்கள்.-அப்படியிருக்க, மனிதர்களுக்கு 32
முன்பாக என்னை அறிக்கைபண்ணுகிறவ
ன் எவனோ அவனை நானும் பரமண்டலங்
களிலிருக்கிற என் பிதா முன்பாக அறிக்
கைபண்ணுவேன். — மனிதர் முன்பாக 33
என்னை மறுதலிக்கிறவனெவனோ அவனை
நானும் பரமண்டலங்களிலிருக்கிற என்
பிதாவின் முன்பாக மறுதலிப்பேன்.—
பூமியின் மேற் சமாதானத்தை வரப்ப 34
ண்ண வந்தேனென்றெண்ணிக்கொள்ளா
திருங்கள். சமாதானத்தையல்ல சண்டை
யைவரப்பண்ண வந்தேன்.-எப்படியெ 35
னிற் குமாரன் தன் தகப்பனையும் மகள்
தன் தாயையும் மருமகள் தன் மாமியை
யும் விட்டுப் பிரிந்து போகப்பண்ணவந்
தேன்.-அப்படி ஒருமனிதனுடைய குடு 36
ம்பத்தாரே அவனுக்குச் சத்துருக்களாய்
இருப்பார்கள்.— என்னிலுந் தகப்பனை 37
யாவது தாயையாவது அதிகமாய்ச் சி
நேகிக்கிறவன் எனக்குப் பாத்திரனல்ல,

என்னிலும் மகனையாவது மகளையாவது அதிகமாய்ச் சிநேகிக்கிறவன் எனக்குப் 38 பாத்திரனல்ல.- அல்லாமலுந் தன் சிலுவையை எடுத்துக்கொண்டு என் பின்னே செல்லாதவன் எனக்குப் பாத்திரனல்ல. 39 -தன் சீவனைக் காக்கிறவன் அதை இழந்துபோவான், என் நிமித்தந் தன் சீவனை இழந்துபோகிறவன் அதைக் காப்பான். 40 —உங்களைச் சேர்த்துக்கொள்ளுகிறவன் என்னைச் சேர்த்துக்கொள்ளுகிறான், என்னைச் சேர்த்துக்கொள்ளுகிறவன் என்னை அனுப்பினவரைச் சேர்த்துக்கொள்ளுகி 41 றான்.—தீர்க்கதரிசியென்கிற நாமத்தினிமித்தம் ஒரு தீர்க்கதரிசியை ஏற்றுக்கொள்ளுகிறவன் தீர்க்கதரிசிக்குரிய பலனைய டைவான். நீதிமானென்கிற நாமத்தினிமித்தம் நீதிமானை ஏற்றுக்கொள்ளுகிறவன் நீதிமானுக்குரிய பலனை அடைவான். 42 —இந்தச் சிறியவர்களிலொருவன் சீஷனாயிருக்கிறதினிமித்தம் அவனுக்கு ஒரு கலயந் தண்ணீர் மாத்திரந் தாகத்துக்குக் கொடுக்கிறவன் தன் பலனை இழந்து

போகாதென்று மெய்யாய் உங்களுக்கு
ச் சொல்லுகிறேனென்றார்.

---

## ௰௧. அதிகாரம்.

[(௨.) யோவான் தன் சீஷரை இயேசுவினிடத்
திலே அனுப்பினது. (௭.) இயேசுவானவர் யோ
வானைக் குறித்துச் சாட்சிகொடுத்தது. (௰௮.)
இயேசுவையும் யோவானையுங் குறித்துச் ச
னங்கள் நினைத்தது. (௨௰) மனந்திரும்பாத சி
ல பட்டினத்தாரை இயேசுவானவர் கடிந்து
கொண்டது (௨௫.) சிறியவர்களுக்குச் சுவி
சேஷத்தை வெளிப்படுத்தினதற்காகப் பிதா
வைப் புகழ்ந்தது. (௨௮) தங்கள் பாவங்க
ளையுணருகிறவர்களைத் தம்மிடத்திலே வரவ
ழைத்தது.

1 இயேசுவானவர் தமது பன்னிரண்டு
சீஷருக்குங் கட்டளைகொடுத்து முடித்த
பின்பு அவர்களுடைய பட்டணங்களில் உ
பதேசம்பண்ணிப் பிரசங்கிக்கும்படிக்கு
அவ்விடம்விட்டுப் புறப்பட்டார்.

௨ அத்தருணத்தில் காவலில் இருந்த யோ
வான் கிறிஸ்துவின் கிரியைகளைக் கேள்வி
ப்பட்டுத் தன் சீஷரில் இரண்டுபேரை
3 அழைத்து,-நீங்கள் போய் அவரை நோ
க்கி, வருகிறவர் நீர்தாமோ அல்லது வே

றொருவர்வர நாங்கள் காத்திருக்கவேண்
டுமோவென்று கேளுங்களென்றுசொன்
4 னன்.—அவர்கள் அப்படியே வந்து கே
ட்டபோது இயேசுவானவர், அவர்களுக்
கு மாறுத்தரமாகச் சொன்னதாவது, நீ
ங்கள் கேட்டுங் கண்டுமிருக்கிறவைகளை
யோவானுக்குப் போய் அறிவியுங்கள்.-
5 என்னவெனில் என்னாலே குருடர் பார்
வையடைகிறார்கள், சப்பாணிகள் நடக்கி
றார்கள், குஷ்டரோகிகள் சுத்தமடைகிறா
ர்கள், செவிடர் கேட்கிறார்கள், மரித்
தோர் எழுந்திருக்கிறார்கள், எளியவர்களு
க்குச் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படுகின்ற
6 து.—அல்லாமலும் என்னைக் குறித்து இ
லச்சை அடையாதிருக்கிறவன் பாக்கிய
வானென்று சொல்லி அவர்களை அனுப்
7 பினார்.— அவர்கள் போன பின்பு இயே
சுவானவர் சனங்களை நோக்கி, யோவானை
க் குறித்துச் சொன்னதாவது நீங்கள் வ
னாந்தரத்திலே எதைப் பார்க்கப் புறப்ப
ட்டீர்கள். காற்றினால் அடித்தலைக்கப்ப
டுகிற நாணலையோ. எதைப் பார்க்கப் புற
8 ப்பட்டீர்கள்.—அல்லது மெல்லிய வஸ்

திரங்களைத் தரித்திருக்கிற மனிதனையோ! மெல்லிய வஸ்திரங்களை உடுத்திருக்கிறவர்கள் அரசர் மாளிகைகளில் இருக்கிறார்கள்.—அல்லது எதைப் பார்க்கப் புறப்பட்டீர்கள். தீர்க்கதரிசியையோ, ஆம், தீர்க்கதரிசியிலும் அதிக மேன்மையுள்ளவனையே என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.—அதெப்படியெனில், இதோ நான் என்னுடைய தூதனை உமக்கு முன்பாக அனுப்புகிறேன், அவன் உமக்கு முன்னே உம்முடைய மார்க்கத்தைச் செம்மைபண்ணுவானென்று ஒருவனைக் குறித்து எழுதியிருக்கின்றதே. அவன் இவன்தான். 9 10

அல்லாமலும் ஸ்திரிகளிடத்திற் பிறந்தவர்களில் யோவானிஸ்நானனிலும் பெரியவனொருவனும் எழும்பவில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகிலும் பரலோக இராச்சியத்திலே சிறியவனானவன் அவனிலும் பெரியவனாயிருக்கிறான்.— அல்லாமலும் யோவானிஸ்நானன் தோன்றின காலம் முதற்கொண்டு இதுவரைக்கும் பரலோக இ 11 12

ராச்சியம் பலபந்தப்படுகின்றது, பலபந்த
தம்பண்ணுகிறவர்கள் அதைப் பிடித்துக்
13 கொள்ளுகிறார்கள்.— நியாயப்பிரமாண
மும் தீர்க்கதரிசிகள் யாவரும் அதையோ
வான் வரைக்கும் தீர்க்கதரிசனமாய் அறி
14 வித்தார்கள்.-நீங்கள் ஒத்துக்கொள்ள ம
னதிருந்தால் வருபவனாகிய எலியா இவன்
15 தான்.-கேட்கிறதற்குக்காதுள்ளவன் கே
16 ட்கக்கடவன்.-இந்தச் சந்ததியை ஆருக்கு
நிகர்சொல்வேன். சந்தைதனில் உளுக்கா
17 ர்ந்து தங்கள் தோழரை நோக்கி,— உங்
களுக்காக ஊதினோம், நீங்கள் கூத்தாட
வேயில்லை. உங்களுக்காகப் புலம்பினோம்
நீங்கள் மார்பில் அடிக்கவேயில்லையென்
று சொல்லிக் கூப்பிடுகிற பிள்ளைகளுக்
18 கு ஒப்பாயிருக்கிறார்கள்.— எப்படியெ
ன்றால், யோவான் வந்து போசனபானம்
பண்ணாமல் இருந்தான். பசாசைக் கொ
19 ண்டிருக்கிறானென்கிறார்கள்.— மனிதனு
டைய குமாரன் வந்து போசனபானம்ப
ண்ணுகிறான். இதோ பெருந்தீனிக்காரன்
என்றும் குடிக்கிறவனென்றும் ஆயக்கா
ரருக்கும் பாவிகளுக்குஞ் சிநேகிதனென்

றுஞ் சொல்லுகிறார்கள். ஆனாலும் ஞானமானது தன் பிள்ளைகளாலே நீதியாய் எண்ணப்படுமென்றார்.

அப்பொழுது அவர் தமது பலத்த செய்கைகளில் அநேகங்களைக் கண்ட பட்டினத்தார் மனந்திரும்பாமலிருந்தபடியினாலே அவர்களைக் கடிந்துகொள்ளத் தொடங்கிச் சொன்னதாவது,-ஐயோ! கோராசின்பட்டினத்தாரே, உங்களுக்கு வேதனைவரும், ஐயோ! பெத்சாயிதாப் பட்டினத்தாரே உங்களுக்குவேதனைவரும், உங்களுக்குள்ளே நடந்த பலத்தசெய்கைகள் தீரு சீதோன் பட்டினத்தாருக்குள்ளே நடந்திருந்தால் அவர்கள் சீக்கிரமாய் இரட்டையுடுத்திச் சாம்பலில் உளுக்கார்ந்து மனந்திரும்பியிருப்பார்கள்.-- ஆதலால் நியாயத்தீர்ப்புநாளிலே அவர்களைப்பார்க்கிலும் நீங்களே அதிக தண்டிப்பை அடைவீர்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.—வானபரியந்தமுயர்ந்த கப்பர்நாகூம்பட்டினத்தாரே ஐயோ! பாதாளபரியந்தந்தாழ்த் தப்படுவீர்கள். உங்களுக்குள்ளே நடந்த பலத்த

20 21 22 23

செய்கைகள் சோதோம்பட்டினத்தாரு
க்குள்ளே நடந்திருந்தால் அவர்களுடை
ய பட்டினம் இந்நாள்வரைக்குமிருக்கு
24 மே!—ஆதலால் நியாயத்தீர்ப்புநாளிலே
அவர்களுக்கு வருந் தண்டிப்பு எளிதாயி
ருக்கும். நீங்களே அதிக தண்டிப்பை
அடைவீர்களென்று உங்களுக்குச் சொல்
லுகிறேனென்றார்.

25 அக்காலத்திலே யேசுவானவர் சொ
ன்னதாவது, பிதாவே வானத்தையும் பூ
மியையும் ஆளுகிறவரே நீர் இவைகளை
(லோக) ஞானிகளுக்குங் கல்விமான்களு
க்கும் மறைத்துக் குழந்தைகளுக்கு வெ
ளிப்படுத்தினபடியினாலே உம்மைத் து
26 திக்கிறேன்.—ஆ! பிதாவே, இப்படியே
27 உமக்குப் பிரியமாயிருந்ததென்றார்.—அ
ல்லாமலுஞ் சகலமும் என் பிதாவினாலே
எனக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கின்
றது. பிதாத் தவிர மற்றொருவனுங் குமா
ரனை அறியான், குமாரன் தவிர மற்றொரு
வனும் பிதாவையறியான். மேலும் எவ
னுக்குக் குமாரன் அவரை வெளிப்படுத்
தச் சித்தமாயிருக்கிறாரோ அவனும் பிதா

வை அறிவான்.—வருத்தப்பட்டுப் பார 28
ஞ்சுமந்துகொள்ளுகிறவர்களாகிய நீங்கள்
எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள். நா
ன் உங்களுக்கு ஆறுதல்செய்வேன்.—நா 26
ன் சாந்தமாயும் மனத்தாழ்மையாயுமிரு
க்கிறபடியினாலும் நான் வைக்கிற நுகத்
தடி மெதுவாயும் நான் ஏற்றுகிற சுமை
இலேசாயுமிருக்கிறபடியினாலும்,—நீங்க 30
ள் என்னுடைய நுகத்தடியை ஏற்றுக்
கொண்டு என்னிடத்திற் கற்றுக்கொள்ளு
ங்கள். அப்பொழுது உங்கள் ஆத்துமா
க்களுக்கு ஆறுதல் கிடைக்குமென்றார்.

## ௰௨. அதிகாரம்.

[(௧.) ஓய்வுநாளைக் குறித்துப் பரிசேயருக்கு
ப் புத்திசொன்னது. (௰௩.) அற்புதஞ்செய்த
து. (௨௨.) பசாசுபிடித்த குருடும் ஊமையு
முள்ளவனைக் குணமாக்கினது. (௩௧.) தேவனு
க்கு விரோதமான தூஷணம் மன்னிக்கப்ப
டாதென்பது. (௩௬.) வீணானவார்த்தைகளுக்
காகக்கணக்குக்கொடுக்கவேண்டுவது (௩௮) அ
டையாளத்தைத்தேடினவர்களைக்கடிந்துகொ
ண்டது (௪௬.) அவருடையதாய் சகோதரன்
முதலானவர்களின்னாரென் றுகாண்பித்தது.

அக்காலத்தில் ஓய்வுநாளிலே இயேசுவா 1

னவர் பயிர்வழியே போனார். அப்பொ
ழுது அவருடைய சீஷர் பசியாயிருந்தப.
டியினாலே கதிர்களைக் கொய்து சாப்பிட்
2 த்தொடங்கினார்கள்.—அதைக் கண்ட பரி
சேயர் அவரை நோக்கி இதோ ஓய்வுநாளி
ற் செய்யத்தகாததை உமது சீஷர்கள்
3 செய்கிறார்களென்றார்கள்.— அவர்களுக்
கு அவர் சொன்னதாவது தாவீதும் அ
வனோடிருந்தவர்களும் பசியாய் இருந்த
4 பொழுது,—அவன் தேவாலயத்திற் பிர
வேசித்து ஆசாரியரேயன்றித், தானுந் த
ன்னோடிருக்கிறவர்களுஞ் சாப்பிடத்தகா
த தேவசமுகத்தப்பங்களைச் சாப்பிட்டா
5 னென்று நீங்கள் வாசிக்கவில்லையா.-அல்
லது ஆசாரியானவர்கள் தேவாலயத்திலே
ஓய்வுநாட்களில் ஓய்ந்திராமல்வேலைசெய்
துங் குற்றமில்லாதிருக்கிறார்களென்று நீ
6 ங்கள் வேதத்தில் வாசிக்கவில்லையா.—தே
வாலயத்திலும் பெரியவர் இங்கேயிருக்கி
றாரென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.
7 -மேலும் பலியிலும் இரக்கத்தை விரும்
புகிறேனென்கிற (வாக்கியத்தின் கருத்
தை) நீங்கள் அறிந்தீர்களானாற் குற்ற

ல்லாத இவர்களை நீங்கள் குற்றப்படுத்த
மாட்டீர்கள்.-- அல்லாமலும் மனிதனு 8
டைய குமாரனானவர் ஓய்வுநாளைக்குறித்
துங் கத்தராயிருக்கிறாரென்றார்.-- பின்பு 9
அவர் அவ்விடம்விட்டுப்போய் அவர்க
ளுடைய செப ஆலயத்திற் பிரவேசித்தா
ர்.- அங்கே சூம்பினகையையுடைய மனி 10
தனொருவன் இருந்தான், அப்பொழுது
அவர்கள் அவர்மேற் குற்றஞ்சாற்றும்ப
டிக்கு அவரை நோக்கி ஓய்வுநாளிற் சுக
மாக்குகிறது நியாயமாவென்றுகேட்டா
ர்கள்.--அவர் சொன்னது உங்களில் எவ 11
னாலுந் தன் ஆடு ஓய்வுநாளில் ஒரு கு
ழியிலே விழுந்தால் அதைப்பிடித்துத் தூ
க்கிவிடுவானல்லவா?--ஆட்டிலும் மனித 12
னானவன் மிகவும் மேன்மையாயிருக்கிறா
ன். ஆதலால் ஓய்வுநாளிலே நன்மைசெய்
கிறது நியாயந்தானென்று சொல்லிப் பி
ன்பு அந்த மனிதனை நோக்கி,—உன் கை 13
யை நீட்டென்றார். அவன் அதை நீட்டி
னான் உடனே அது மறுகையைப்போ
லவே சுகமாயிற்று.-அப்பொழுது பரிசே 14
யர் புறப்பட்டுப்போய் அவரைச் சங்க

ரிக்கும்படிக்கு யோசனைபண்ணிக்கொ
ண்டார்கள்.

15 அதை இயேசுவானவர் அறிந்து அவ்
விடம் விட்டுப்போனார். அப்பொழுது
அநேகசனங்கள் அவர் பின்னே சென்று
16 ர்கள். - எல்லாரையும் அவர் குணமாக்கிப்
பின்பு தம்மைப் பிரசித்தம்பண்ணாதப
டிக்கு அவர்களுக்குக் கட்டளையிட்டார்.
17 - அதினாலே இதோ நான் தெரிந்துகொ
ண்ட ஊழியக்காரன் எனக்கு அன்பான
வர் என் ஆத்துமாவுக்குப் பிரியமானவர்
இவரிடத்திலே என்னுடைய ஆவியிருக்க
ச்செய்வேன். இவர் நியாயமானதை உல
18 கத்தாருக்கு அறிவிப்பார். —சண்டைப
ண்ணாமலும் கூக்குரல்பண்ணாமலுமிருப்
பார். இவருடைய சத்தம் வீதிகளில் ஒ
19 ருவராலும் கேட்கப்படுவதில்லை. —நியா
யமானது சயமாயிருக்கும்படி செய்கிற
வரைக்கும் இவர் நெரிந்திருக்கிற நாணலை
முரியாமலும், மங்கியெரிகிற திரியை அ
20 ணையாமலுமிருப்பார். —இவருடைய நா
மத்தின்மேலே புறத்தேசத்தார் நம்பிக்
21 கையாயிருப்பார்களென்று, - ஏசாயாதீர்க்

கதரிசி உரைத்தவசனம் நிறைவேறிற்று.
அப்பொழுது பசாசுபிடித்த குருடும் 22
ஊமையுமான ஒருவன் அவரிடத்திற்கொ
ண்டுவரப்பட்டான். குருடும் ஊமையு
மான அவன் பேசவுங் காணவுந்தக்கதாக
அவனைக் குணமாக்கினார்.—சனங்களெல் 23
லாரும் பிரமித்து இவர் தாவீதின் குமார
னல்லவாவென்றார்கள்.-பரிசேயர் அதை 24
க்கேட்டு இவன் பசாசுக்களுடைய தலைவ
னாகிய பேயெல்செபூலினாலே பசாசுக்க
ளைத்துரத்துகிறானேயன்றி மற்றப்படிய
ல்லவென்றார்கள்.—இயேசுவானவர் அவ 25
ர்களுடைய சிந்தனைகளையறிந்து அவர்க
ளை நோக்கி ஒரு இராச்சியத்தார் தங்க
ளுக்குள்ளேதானே பிரிவினைபண்ணினால்
அழிந்துபோவார்கள். அல்லாமலும் ஒ
ருபட்டினத்தாராகிலுங் குடும்பத்தாரா
கிலுந் தங்களுக்குள்ளே பிரிவினைபண்ணி
னால் நிலைநிற்கமாட்டார்கள்.—அப்படி 26
ப்போலச் சாத்தான் மற்றொரு சாத்தா
னைத்துரத்தினால் அவர்களுக்குள்ளேதா
னே பிரிவினையுண்டாயிருக்குமே அப்ப
டியானால் அவனுடைய இராச்சியம் எப்

27 படி நிலைநிற்கும்?—அல்லாமலும் நான் பெயேல்செபூலினாலே பசாசுக்களைத் துரத்துகிறவனென்றால் உங்கள் பிள்ளைகள் அவைகளை ஆராலே துரத்துகிறார்கள் ஆகையால் அவைகளே உங்களுக்கு நியாயத்
28 தீர்ப்புக்கொடுப்பார்கள்,-நான் பராபரனுடைய ஆவியாலே பசாசுகளைத் துரத்துகிறபடியாற் பராபரனுடைய ஆளுகையே உங்களிடத்தில் வந்திருக்கின்றது.—
29 அல்லது முன்பு பலவானைக் கட்டாவிட்டால் அவனுடைய வாசஸ்தலத்திலே ஒருவன் எப்படிப் பிரவேசித்து அவனுடைய உடைமைகளைக் கொள்ளையிடுவான் (பலவானைக் கட்டினபின்பல்லவா) அவனுடைய வாசஸ்தலத்தைக் கொள்ளையி
30 டுவான்,—என்பக்கவிராதவன் எனக்கு விரோதமாயிருக்கிறான் என்னுடனே கூடச் சேர்த்துக்கொள்ளாதவன் சிதற அடிக்
31 கிறான்,-ஆதலால் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது,எந்தப்பாவமுந் தூஷணையும் மனிதர்களுக்கு மன்னிக்கப்படும், தேவ ஆவியை (பிந்திக்கும்)தூஷணம்மாத்திரம் மனிதருக்கு மன்னிக்கப்படுவதில்

லை.—எவனானாலும் மனிதனுடைய குமா 32
ரனுக்கு விரோதம்பேசினால் அது அவ
னுக்கு மன்னிக்கப்படும் எவனாகிலும் ப
ரிசுத்த தேவ ஆவிக்கு விரோதம்பேசினா
ல் அது அவனுக்கு இம்மையிலும் மறு
மையிலும் மன்னிக்கப்படுவதில்லை, -மே 33
லும் ஒரு மரத்தின் தன்மையை அதின் க
னிகளாலே அறியலாம். ஆகையால் நீங்க
ள் ஒரு மரத்தை நல்லமரமென்றெண்ணி
னால் அதின் கனியையும் நல்லதென்றெ
ண்ணுங்கள். அல்லது நீங்கள் ஒருமரத்தை
க் கெட்டமரமென்றெண்ணினால், அ
தின் கனியுங் கெட்டதென்றெண்ணு
ங்கள்.—இருதயத்தின் நிறைவினாலே வா 34
ய் பேசும். ஆதலால் விரியன் குட்டிக
ளே நீங்கள் பொல்லாதவர்களாயிருக்க ந
ன்மையானவைகளை எப்படிப் பேசுவீர்க
ள்.—நல்ல மனிதனானவன் தன் இருதயத் 35
திலுள்ள நல்லபொக்கிஷத்தில் நல்லவை
களை எடுத்துக் காண்பிக்கிறான். பொல்
லாத மனிதன் தன் பொல்லாதபொக்கிஷ
த்திற் பொல்லாதவைகளை எடுத்துக் கா
ண்பிக்கிறான். -மனிதர்கள் பேசும் வீணா 36

வார்த்தைகள் யாவையுங் குறித்து நியா
யத்தீர்ப்பு நாளிலே உத்தரவுகொடுப்பா
ர்களென்று உங்களுக்குச் சொல்லுகிறே
37 னென்றார்.-எப்படியும் உன் வார்த்தைக
ளினாலே நீதிமானென்றும் உன்வார்த்தை
களினாலே குற்றவாளியென்றுந் தீர்க்கப்
படுவாய்.

38 அப்பொழுது வேதபாரகரிலும் பரி
சேயரிலுஞ் சிலர் அவரை நோக்கிப் போ
தகரே, உம்மாலே ஒரு அடையாளத்தை
39 க்காண விரும்புகிறோமென்றார்கள்.—அ
தற்கு அவர் சொன்னது, சோரமார்க்க
மாய்ப்போகிற பொல்லாத சந்ததி(யாகி
ய இவர்கள்)ஒரு அடையாளத்தைக் கே
ட்கிறார்கள். யோனாத்தீர்க்கதரிசியின் அ
டையாளமேயன்றி வேறு அடையாளம்
இவர்களுக்குக் கொடுக்கப்படுவதில்லை.-
40 என்னவென்றால், யோனாவென்பவன் இ
ரவும்பகலும் மூன்றுநாள் ஒரு பெரிய மீ
னுடைய வயிற்றில் இருந்ததுபோல ம
னிதனுடைய குமாரன் இரவும் பகலும்
மூன்று நாட் பூமியின் இருதயத்திலே இ
41 ருப்பாரென்பதே.—யோனாவென்பவன்

பிரசங்கம்பண்ணினபொழுது, நினிவே
பட்டினத்தார்மனந்திரும்பினார்கள்.யோ
னாவிலும் அதிக மேன்மையானவர் இ
தோ இங்கே இருக்கிறார்.ஆதலால் நியாய
த்தீர்ப்பு நாளிலே நினிவே பட்டினத்தா
ர் எழும்பி இவர்களைக் குற்றவாளிகளெ
ன்று தீர்ப்பார்கள். —அல்லாமலுந் தெற் 42
கு இராசஸ்திரி மிகுந்த தூரமான தேசத்
திலிருந்து சாலோமோனுடைய ஞானத்
தைக் கேட்கவந்தாள்.சாலோமோனிலு
ம் அதிக மேன்மையானவர் இதோ இங்
கே இருக்கிறார். ஆதலால் நியாயத்தீர்ப்பு
நாளிலே அந்த இராசஸ்திரி எழும்பி இவ
ர்களைக் குற்றவாளிகளென்று தீர்ப்பாள்.

அல்லாமலும் அசுத்தமான ஆவி ஒரு 43
மனிதனை விட்டுப் புறப்பட்டபின்புதண்
ணீரில்லாத இடங்களில் அலைந்து இளைப்
பாறுதற்கான இடத்தைத் தேடியும் அ
டையாமலிருக்கும் பொழுது, -அவன் எ 44
ன் வீட்டுக்குத் திரும்பிப்போவேனென்
று சொல்லி (அங்கே) சென்று அவ்விட
த்தை வெறுமையாயும் பெருக்கிச் சோ
டிக்கப்பட்டதாயுமிருக்கக்கண்டு திரும்

45 பிப்போய்,— தன்னிலும் அதிக பொல்லாத வேறேழு ஆவிகளைத் தன்னுடனே கூட்டிக்கொண்டு வந்து பிரவேசித்து அங்கே வாசம்பண்ணும். இவ்விதமாய் அந்த மனிதனுடைய முன்னிலைமையிலும் பின்னிலைமை அதிக கேடுள்ளதாய் இருக்கின்றது. அப்படியே இந்தப் பொல்லாத சந்ததிக்குஞ் சம்பவிக்கும் என்றார்.

46 அவர் இப்படிச் சனங்களுடனே பேசுகையில் அவருடைய தாயுஞ் சகோதரரும் வந்து வெளியே நின்று அவரோ
47 டே பேசத்தேடினார்.— அப்பொழுது அவரை நோக்கி, இதோ உம்முடைய தாயாருஞ் சகோதாரும் வெளியே நின்று உம்மோடே பேசத்தேடுகிறார்களென்று
48 ன்.— அப்படித் தமக்குச் சொன்னவனுக்கு அவர் மாறுத்தரமாக என்னுடைய தாய் யாவள்! என் சகோதரர் யாரென்று
49 சொல்லி,— தம்முடைய கையைத் தமது சீஷர் மேல் நீட்டி இதோ, இவர்கள் என் தாயும் என்சகோதாருமாயிருக்கிறார்கள்.
50 -எவனாலும் பரமண்டலங்களிலிருக்கிற என் பிதாவின் சித்தத்தின்படி செய்தால்

அவனே என் சகோதரனுமாய் சகோதரியுமாய்த் தாயுமாயிருக்கிறானென்றார்.

---

## ௰௩. அதிகாரம்.

[(௧.) பயிர்செய்கிறவனை உவமையாய்க் காட்டியது (௰௮.) அதின் பயன். (௨௪.) களைகளையும், (௩௧.) கடுகையும், (௩௩.) புளித்தமாவையும் உவமையாய்க் காட்டியது. (௪௪.) ஒளித்திருந்த பொக்கிஷத்தை உவமையாகக்காட்டியது. (௪௫) ஆணிமுத்தை உவமையாகக் காட்டியது. (௪௭) கடலிற்போட்டவலையை உவமையாய்க் காட்டியது. (௫௩.) கிறிஸ்து தமது ஊராராலே அசட்டைபண்ணப்பட்டது.

அந்நாளிலே இயேசுவானவர் வீட்டிலிருந்து புறப்பட்டுக் கடலின் அருகே உளுக்கார்ந்தார். — அப்பொழுது அநேக சனங்கள் அவரிடத்திற் கூடிவந்தபடியால் அவர் படகிலேறி உளுக்கார்ந்து சனங்களெல்லாருங் கரையிலே நிற்க, - அநேக 3 விசேஷங்களை உவமைகளால் அவர்களுக்குச் சொன்னதாவது, விதைக்கிறவனொருவன் விதைக்கப் புறப்பட்டான். அவன் விதைக்கையிற் சில (விதை) வழியருகே விழுந்தது. — அதைப் பறவைகள் வந்து ப 4 ட்சித்தன. — வேறு சில (விதை) மிகுந்த 5

மண்ணில்லாத கற்பாறை இடங்களில் வி
ழுந்து ஆழமான மண்ணில்லாததினால் உ
6 டனே முளைத்தது.-வெயில் தோன்றின
பொழுது அது தீய்ந்துபோய், வேரில்
7 லாததினால் உலர்ந்துபோயிற்று.—வேறு
சில(விதை)முள்ளுக்களுள் இடத்திலே
விழுந்தது. முள்ளுக்கள் வளர்ந்து அதை
8 நெருக்கிப்போட்டன.—வேறு சில (வி
தை) நல்ல நிலத்தில் விழுந்து சில நூறாக
வுஞ் சில அறுபதாகவுஞ் சில முப்பதாக
9 வும் பலன் கொடுத்தது. — கேட்கிறதற்
குக் காதுள்ளவன் கேட்கக்கடவனென்று
10 ர்.-அப்பொழுது சீஷர்கள் அவரிடத்தில்
வந்து என்னத்தினாலே உவமைகளாலே
அவர்களோடே பேசுகிறீர் என்றார்கள்.—
11 அதற்கவர் சொன்னதாவது,பரலோக இ
ராச்சியத்தின் இரகசியங்களை அறியும்படி
க்கு உங்களுக்கு அருள் அளிக்கப்பட்டது
அவர்களுக்கு அப்படி அளிக்கப்படவி
12 ல்லை - எப்படியெனில், எவன் உள்ளவனா
யிருக்கிறானோ அவனுக்குக் கொடுக்கப்ப
டும், பரிபூரணமுமடைவான். எவன் உ
ள்ளவனல்லாதவனாயிருக்கிறானோ அவனி

டத்தில் உள்ளதும் எடுத்துக்கொள்ளப்ப
டும்.—அவர்கள் கண்டுங் காணாமலுங் கே 1
ட்டுங் கேளாமலுஞ் சிந்தித்துக்கொள்ளா
மலுமிருக்கிறபடியினாலே நான் உவமை
களால் அவர்களுடனே பேசுகிறேன்.—
இந்தச் சனங்கள் கண்களினாலே காணாம 1
லுங் காதுகளினாலேகேளாமலும் இருத
யத்தினாலே சிந்தித்துக்கொள்ளாமலுந்
திரும்பாமலும் என்னால் ஆரோக்கியம்
அடையாமலுமிருக்கும்படிக்கு அவர்க
ள் கடினமாக்கப்பட்ட இருதயமுடைய
வர்களுமாய் வருத்தத்தோடே கேட்கிற
காதுள்ளவர்களுமாய் மூடிக்கொண்டி
ருக்கிற கண்களையுடையவர்களுமாயிரு
க்கிறபடியினாலே,—நீங்கள் உற்றுக்கேட் 15
டாலுஞ் சிந்தித்துக்கொள்ளாமலிருப்பீ
ர்கள். உற்றுப்பார்த்தாலும் அறியாமலி
ருப்பீர்களென்று ஏசாயாசொன்ன தீர்க்
கதரிசனம் அவர்களிடத்தில் நிறைவேறி
வருகின்றது.—உங்கள் கண்களோ காணுகி 16
றபடியினாலும் உங்கள் காதுகள் கேட்கி
றபடியினாலும் பாக்கியமுள்ளவைகள்.—
அநேகந்தீர்க்கதரிசிகளும் நீதிமான்களு 1

டம் நீங்கள் காணுகிறவைகளைக் காணவும் நீ
ங்கள் கேட்கிறவைகளைக் கேட்கவும் விரு
ரும்பியுங் காணாமலுங் கேளாமலும் போ
னார்களென்று மெய்யாகவே உங்களுக்
குச் சொல்லுகிறேன்.

18 ஆகையால் விதைக்கிறவனுடைய உவ
19 மையைக் கேளுங்கள்.—ஒருவன் பரலோ
க இராச்சியத்தைக் குறித்து வசனத்தை
க் கேட்டும் அதைச் சிந்தித்துக்கொள்ளா
மலும் இருக்கிறபொழுது பொல்லாங்க
ன் வந்து, அவனுடைய இருதயத்தின்மே
ல் விதைக்கப்பட்டதை யெடுக்கிறான் அ
வனே விதைவிழுந்த வழிக்கொப்பானவ
20 ன்.—விதைவிழுந்த கற்பாறைக்கொப்பா
னவன் அந்த வசனத்தைக்கேட்டு உட
னே அதைச் சந்தோஷத்தோடே ஏற்று
21 க்கொண்டு,—பின்பு அது தனக்குள்ளே
வேர்பற்றியிராமற் கொஞ்சக் காலம்மாத்
திரம் அதைப் பற்றிக்கொள்ளுவான். அ
ந்த வசனத்தினிமித்தம் உபத்திரவமும்,
துன்பப்படுதலுமுண்டாகிற பொழுது
உடனே அவன் தவறுவானென்பதே.—
22 விதைவிழுந்த முள்ளுள்ளவிடத்துக்கொ

ப்பானவன் அந்த வசனத்தைக் கேட்கிற பொழுது லவுகிக கவலைகளும் ஐசுவரியத்தின் வஞ்சனையும் அவ்வசனத்தை நெருக்கிப்போடுவதாற் கனியற்றவனுவானென் பதே.-விதைவிழுந்த நல்லநிலத்துக்கொ 23 ப்பானவன் அந்தவசனத்தைக் கேட்டுஞ் சிந்தித்தும் அதின்படிசெய்தும் நூறும், அறுபதும் முப்பதுமாகப் பலனைக்கொடுத்தும் வருவானென்பதேயென்றார்.

பின்பு அவர் வேறொரு உவமையை அ 24 வர்களுக்குச் சொல்லிக்காட்டினர். அதாவது பரலோக ராச்சியம் ஒரு வயல் நிலத்துக்கொப்பாயிருக்கின்றது. அந்த நிலத்திலே எசமானனவன் நல்விதையை விதைத்தான்.—பின்பு மனிதர் நித்திரைப 25 ண்ணுகையில் அவனுடைய பகைஞன் வந்து கோதும்பைக்குள்ளே களைகளை விதைத்துப்போனன்.-பயிரானது வளர்ந் 26 து தானியத்தை உண்டாக்கினபொழுது அந்தக் களைகளுங் காணப்பட்டன.-வே 27 லைக்காரர் எசமானிடத்தில் வந்து ஆண்டவனே, நீர் உமது வயல்நிலத்திலே நல்ல விதையை விதைக்கவில்லையா? களைகள் அ

திலே எப்படியுண்டாயினவென்றார்கள்?
28 —அதற்கவன் பகைஞன் அப்படிச்செய்
தானென்றான். அப்பொழுது வேலைக்கா
ரர் நாங்கள்போய் அவைகளைப் பிடுங்கிப்
போடச் சித்தமாயிருக்கிறீரோவென்று
29 கேட்டார்கள். —அதற்கவன் சொன்னது
வேண்டாம் களைகளைப் பிடுங்குகிறபொ
ழுது நீங்கள் கோதும்பையையுங் கூட
30 வேரோடே பிடுங்காதபடிக்கு, —அவ்வி
ரண்டையும் அறுப்புக்காலம்வரைக்கும்
வளரவிடுங்கள் அறுப்புக்காலத்திலே அ
றுக்கிறவர்கள் முதலாவது களைகளைப்பிடு
ங்கி அவைகளைச் சுட்டெரிக்கிறதற்குக்
கட்டுக்களாகக் கட்டவுங் கோதும்பை
யை என் களஞ்சியத்திற் சேர்க்கவுங் கட்
டளையிடுவேனென்று சொன்னானென்
றார்.

31 பின்பு அவர் வேறொரு உவமையை அ
வர்களுக்குச் சொல்லிக்காட்டினார். அ
தாவது, பரலோக இராச்சியங் கடுகுவி
தைக்கு ஒப்பாயிருக்கின்றது அதை ஒரு
மனிதனெடுத்துத் தன் நிலத்திலே விதை
32 த்தான். —அது எல்லாவிதைகளிலுஞ் சிறி

தாயிருந்தும் வளரும்பொழுது கீரைக ளிலும் பெரிதாகி ஆகாசத்துப்பறவைக ள் அதின் கிளைகளில் வந்தடையத்தக்கதா ன செடியாமென்றார்.

பின்பு அவர் வேறொரு உவமையை அ 33 வர்களுக்குச்சொன்னார். அதாவது மூன் றுமரக்கால் மாமுழுவதும் புளிப்பாகும் வரைக்கும் ஒரு ஸ்திரி புளிப்புமாவையெ டுத்து அதிலே அடக்கி வைத்தாள். பர லோக இராச்சியம் அந்தப் புளிப்புமா வுக்கொப்பாயிருக்கின்றதென்றார்.- என் 34 வாயைத்திறந்து உவமைகளாலே பேசு வேன் உலகத்தோற்றம் முதற்கொண்டு மறைபொருளானவைகளை வெளிப்படுத் துவேனென்று தீர்க்கதரிசியால் உரைக்க ப்பட்டது நிறைவேறத்தக்கதாக,- இயே 35 சுவானவர் இவைகளையெல்லாம் உவமை யாய்ச் சனங்களுடனே பேசினார். உவ மைகளினாலேயன்றி வேறுவிதமாய் அவ ர் அவர்களுடனே பேசவில்லை.—அப் 36 பொழுது இயேசுவானவர் சனங்களை அ னுப்பிப் பின்பு வீட்டுக்குப்போனார். அ ங்கே அவருடைய சீஷர் அவரிடத்தில் வ

ந்து நீர் வயல்நிலத்தின் களைகளைக்குறித்துக் காட்டின உவமையை எங்களுக்கு வெளிப்படுத்தவேண்டுமென்றுகேட்டார்கள்.—அவர்களுடனே அவர் மறுமொ
37 ழியாகச் சொன்னதாவது நல்ல விதையை விதைக்கிறவன் மனிதனுடைய குமார
38 னே,வயல்நிலம் உலகமே,—நல்விதைஇராச்சியத்தின் புத்திரரே, களைகள் பொ
39 ல்லாங்கனுடைய புத்திரரே,— அவைகளை விதைக்கிற பகைஞன் பசாசே, அறு
ப்பு உலகத்தின் முடிவே, அறுக்கிற
40 வர்கள் தேவதூதர்களே,-ஆதலாற் களைகள் சேர்க்கப்பட்டு அக்கினியினாற் சுட்டெரிக்கப்படுகிறது போல இவ்வுலகத்தின்
41 முடிவிலே நடக்கும்.—மனிதனுடையகுமாரன் தன்னுடைய தூதரை அனுப்புவான், அவர்கள் அவனுடைய இராச்சியத்திலிருக்கிற சகல இடறல்களையும், அக்
42 கிரமஞ்செய்கிறவர்களையுஞ் சேர்த்து அழுதலும் பற்கடிப்புமுண்டாயிருக்கிற அ
43 க்கினிச் சூளையிலே போடுவார்கள்.—அப்பொழுது நீதிமான்கள் தங்கள் பிதாவின் இராச்சியத்திலே சூரியனைப் போல

ய் பிரகாசிப்பார்கள். கேட்கிறதற்குக் கா
துள்ளவன் கேட்கக்கடவன்.

அல்லாமலும் பரலோக இராச்சியம் வ 44
யல் நிலத்தில் ஒளிக்கப்பட்டிருக்கிற பொ
க்கிஷத்துக்கொப்பாயிருக்கின்றது. அ
தை ஒரு மனிதன் கண்டு அதை மறைத்
து அதைக் குறித்து அடைந்த சந்தோ
ஷத்தினாலே போய்த் தனக்குள்ளயாவை
யும் விற்று அந்த வயல்நிலத்தையே கொ
ள்ளுகிறான்.

அல்லாமலும் பரலோக இராச்சியம் 45
நல்ல முத்துகளைத் தேடி,—ஒரு ஆணி 46
முத்தைக் கண்டு போய்த் தனக்குள்ள
யாவையும் விற்று அதைக் கொள்ளுகிற
வியாபாரி ஒருவனுக்கு ஒப்பாயிருக்கின்
றது.

அல்லாமலும் பரலோக இராச்சியம் 47
ஒரு வலைக்கொப்பாயிருக்கின்றது. வலை
யானது கடலிற்போடப்பட்டு எல்லாச்
சாதியான மீன்களையும் வாரி நிறைந்த
பொழுது,—சனங்கள் அதைக் கரையிலி 48
ழுத்து உளுக்கார்ந்து நல்லவைகளைப்பா
க்கிரங்களிற் சேர்த்துக்கொண்டு தகாத

49 வைகளைத் தள்ளிப்போடுகிறார்கள்.—இவ்விதமாக உலகத்தின் முடிவிலே நடக்கும். தேவதூதர் புறப்பட்டு நீதிமான்களிலிருந்து துன்மார்க்கரைப் பிரித்து,—
50 அழுதலும் பற்கடிப்புமுண்டாயிருக்கிற அக்கினிச் சூளையிலே போடுவார்களென்
51 று சொல்லி,—பின்பு நீங்கள் இவைகளையெல்லாம் அறிந்துகொண்டீர்களாவென்று இயேசுவானவர் சீஷர்களிடத்திற் கேட்டதற்கு ஆண்டவரே, அறிந்துகொண்
52 டோமென்றார்கள்.—அவர் பின்னும் அவர்களை நோக்கி அப்படியிருக்கையாற் பரலோக இராச்சியத்தைக் குறித்துப்போதனையடைந்த வேதபாரகனெவனோ அவன் தன் பொக்கிஷத்திற் புதியவைகளையும் பழையவைகளையுமெடுத்துக் காண்பிக்கிற வீட்டெசமானுக்கு ஒப்பாயிருக்கிறானென்றார்.

53 இப்படி இயேசுவானவர் இந்த உவ
54 மைகளைச் சொல்லிமுடிந்தபின்பு,—அவர் அவ்விடம்விட்டுத் தாம் வளர்ந்த ஊரில் வந்து செப ஆலயத்திலே சனங்களுக்கு உபதேசம்பண்ணினார். அவர்கள் அ

தைக் கேட்டுப் பிரமித்து இப்படிப்பட்ட ஞானமும் வல்லமைகளும் இவனுக்கு எங்கேயிருந்து வந்தன.—இவன் தச்சனுடைய குமாரனல்லவா? இவனுடைய தாய் மரியா ளென்னப்பட்டிருக்கிறாளல்லவா? யாக்கோபு, யோசே, சீமோன், யூதா என்பவர்கள் இவனுடைய சகோதரரல்லவா? —இவனுடைய சகோதரிகளெல்லாரும் நமக்குள்ளே இருக்கிறார்களல்லவா. இப்படியிருக்க இவையெல்லாம் இவனுக்கு எங்கேயிருந்து வந்தனவென்று சொல்லி, —அவரைக் குறித்து இடறற்பட்டார்கள். அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்கி, தீர்க்கதரிசியொருவன் தன் ஊரிலேயுந் தன் குடும்பத்திலேயுமன்றி மற்ற இடங்களிலே கனவீனப்படானென்றார்.—மேலும் அந்தச் சனங்களுடைய அவிசுவாசத்தினாலே அவர் அவ்விடத்திலே அநேக அற்புதங்களைச்செய்யவில்லை.

55 56 57 58

---

## ௧௪. அதிகாரம்.

[(௧)எரோது கிறிஸ்துவைக்குறித்து நினைத்தது. (௩.) யோவான் சிரசுசேதம் பண்ணப்பட்டதற்குக் காரணம். (௰௩)வனாந்தரத்திலே இயேசுவானவர் ஐயாயிரம்பேருக்குச் சாப்பாடுகொடுத்தது. (௨௨) அவர் கடலிலே நடந்து சீஷரிடத்தில்வந்தது,(௩௪) கெனேசரேத்தினிடத்தில் வந்து தம்முடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்டவர்களைக் குணமாக்கினது ]

1 அக்காலத்திலே கால்பங்கு தேசாதிபதியாகிய எரோதே இராசா இயேசுவின் கீ
2 ர்த்தியைக் கேள்விப்பட்டு,—தன் ஊழியக்காரரை நோக்கி, அவன் யோவானிஸ்நானன் அவன் மரித்தோரிலிருந்தெழுந்திருந்தவன், அதினாலே அவன் அற்புதங்களைச்செய்துவருகிறானென்றான்.
3 அதெப்படியென்றால் எரோதே இராசா தன் தம்பியாகிய பிலிப்புவினுடைய மனைவி எரோதியாளைக் குறித்து நீர் அவளைச் சேர்த்துக்கொள்ளக்கூடாதென்
4 று,-யோவான் அவனுடனே சொன்னபடியினாலே எரோதே இராசா அவனைப் பிடித்துக் கட்டிக் காவலில் வைத்தான்.-
5 —அவனைக் கொலைசெய்யவும் மனசாயி

ருந்தான். அப்படியிருந்துஞ் சனங்கள் யோவானைத் தீர்க்கதரிசியென்றெண்ணினபடியினாலே அவன் அவர்களுக்குப் பயந்து (அப்படிச் செய்யவில்லை.)— பின்பு ஏரோதையினுடைய சென்ம நாள் கொண்டாடப்படுகிற காலத்திலே ஏரோதியாளின் குமாரத்தி ஏரோதே இராசாவுக்கு யிருந்த சந்தோஷமுண்டாகத்தக்கதாக நடனம்பண்ணினபொழுது,— அவன் அவளை நோக்கி, நீ ஏதைக்கேட்டாலுந் தருவேனென்று அவளுக்கு ஆணையிட்டு வார்த்தை கொடுத்தான்.— உடனே அவள் தன் தாய் தனக்குப் போதித்திருந்தபடியே நீர் யோவானிஸ்நானனுடைய சிரசை ஒரு தாலத்தில் இங்கே எனக்குக் கொடுக்கவேண்டுமென்று கேட்டாள்.—இராசா துக்கமடைந்தான். அப்படியிருந்துந் தான் கொடுத்த ஆணையின் நிமித்தமும் பந்தியிற் கூடவிருந்தவர்களின் நிமித்தமும் அவன் அதைக்கொடுக்கக் கட்டளையிட்டான்.— அந்தப்படி இராசாவினாலே அனுப்பப்பட்டவர்கள் காவற் கூடத்துக்குப்போய் யோவானைச் சிர

6 7 8 10

11 சேதம்பண்ணி,—வந்து அவனுடைய சிரசை ஒரு தாலத்தில் வைத்து அந்தப் பெண்ணுக்குக் கொடுத்தார்கள். அவள் அதைத் தன் தாய்க்குக் கொண்டுபோய்
12 க்கொடுத்தாள்.-பின்பு அவனுடைய சீஷர்கள் வந்து அவனுடைய உடலையெடுத்து அடக்கம்பண்ணி வந்து இயேசுவுக்கு அந்தச் சங்கதியை அறிவித்தார்கள்.
13 இயேசுவானவர் அதைக் கேட்டு அவ்விடம் விட்டு வனாந்தரமான இடத்திலே தனியேயிருக்க ஒரு படவிலேறிப் போனார். சனங்கள் அதைக் கேள்விப்பட்டுப் பட்டினங்களிலிருந்து கால் நடையாய்
14 அவர் பின்சென்றார்கள்.—இயேசுவானவர்புறப்பட்டுத் திரளான சனங்களைக் கண்டு அவர்களுக்கு இரக்கமாய் மனதுருகி அவர்களில் வியாதிப்பட்டவர்களைக் குணமாக்கினார்.
15 சாயங்காலத்தில் அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்து இது வனாந்தரமான இடம், அல்லாமலும் பகல்போயிற்று. ஆதலால் இந்தச் சனங்கள் கிராமங்களுக்குப்போய்த் தங்களுக்காகப் போசனபதா

ர்த்தங்களைக் கொள்ளும்படி இவர்களை அ
னுப்பிவிடுமென்றார்கள்.- அதற்கு இயேசு 16
வானவர் இவர்கள்போகவேண்டுவதில்லை,
நீங்களே இவர்களுக்குச் சாப்பாடு கொ
டுங்களென்றார்.- அவர்கள் சொன்னது ஐ 17
ந்தப்பமும் இரண்டு மீன்களுமேயல்லாம
ல் வேறொன்றும் எங்களிடத்தில் இல்லை
யென்றார்கள்.- அவைகளை எனக்கு இங் 18
கேகொண்டுவாருங்களென்றார்.- பின்பு ச 19
னங்கள் புல்லின் மேற் பந்தியிருக்கும்ப
டிக்கு அவர் கட்டளையிட்டு அவ்வைந்து
அப்பங்களையும் இரண்டு மீன்களையும் எ
டுத்து வானத்தை அண்ணார்ந்துபார்த்து,
அவைகளை ஆசீர்வதித்து அப்பங்களைப்
பிட்டுச் சீஷர்களுக்குக்கொடுத்தார். சீஷ
ர் அவைகளைச் சனங்களுக்குக் கொடுத்தா
ர்கள்.- அவர்கள் எல்லாருஞ் சாப்பிட்டுத் 20
திருத்தியடைந்தார்கள், அதுவுமல்லாமற்
சேஷமானவைகளைப் பன்னிரண்டு கூ
டை நிறைய எடுத்தார்கள். — அப்படிச் 21
சாப்பிட்டவர்கள் பெண்களும் பிள்ளைக
ளுந் தவிர ஏறக்குறைய ஐயாயிரம்பேரி
ருந்தார்கள்.

௨௨ உடனே இயேசுவானவர் சனங்களை அனுப்பிவிடுகையில் தமது சீஷர்கள் படவிலேறித் தமக்கு முன்னே அக்கரைக்குப் போகும்படி அவர்களைத் துரிதப்படுத்தினுர்.- ௨௩ சனங்களை அனுப்பிவிட்டபின்பு அவர் தனியே செபத்தியானம்பண்ணும்படிக்கு ஒரு மலையின்மேலேறினுர். சாயந்தரமான பொழுது அவர்மாத்திரம் அங்கே இருந்தார்.- ௨௪ அவ்வெளையிற் படவு கடலின் நடுவே சேர்ந்து எதிர்க்காற்றிருந்தினுலே அலைகளால் அலைவுபட்டது.- ௨௫ அப்படியிருக்கிறபொழுது, இரவின் நாலாஞ் சாமத்திலே இயேசுவானவர் கடலின் மேலே நடந்து அவர்களிடத்துக்குப் போனுர்.— ௨௬ அவர் கடலின் மேல் நடக்கிறதைச் சீஷர் கண்டு தத்தளித்து ஆவேசிமுண்டாயிருக்கிறதென்று புலம்பிப்பயத்தினுலே கூப்பிட்டார்கள்.— ௨௭ உடனே இயேசுவானவர் திடன்கொள்ளுங்கள், நான்தான் பயப்படாதிருங்களென்று அவர்களுடனே சொன்னுர்.— ௨௮ பேதுரு அவருக்கு ஆண்டவரே, நீரேயானுற் சலத்தின் மேலே உம்மிடத்தில் வரும்படி என

க்குக் கட்டளையிடுமென்றான்.—அதற்க 29
வர் வாவென்றார். அப்பொழுது பேது
ரு படவை விட்டிறங்கி இயேசுவினிடத்
துக்கு வரும்படிக்குச் சலத்தின் மேலே
நடந்து,—காற்றுப் பலத்திருக்கிறதைக் 30
கண்டு பயமடைந்து அமிழத்தொடங்கி
ஆண்டவரே! என்னை இரட்சிக்கவேண்டு
மென்று கூப்பிட்டான்.—உடனே இயே 31
சுவானவர் கையை நீட்டி அவனைப் பிடி
த்துக்கொண்டு அற்ப விசுவாசியே, என்
சந்தேகப்பட்டாயென்றார்.—அவர்கள்ப 32
டவிலேறினவுடனே காற்று அமைதலாயி
ற்று.— அப்பொழுது படவிலுள்ளவர்க 33
ள் வந்து மெய்யாகவே நீர் பராபரனு
டைய குமாரனாயிருக்கிறீரென்று சொ
ல்லி அவரை வணங்கினார்கள்.

பின்பு அவர்கள் அக்கரைக்கோடிக் கெ 34
னேசரேத்து நாட்டில் வந்தார்கள்.—அ 35
வ்விடத்து மனிதர் அவரை அறிந்து அந்
தத் திசைகளிலெங்கும் ஆட்களை அனுப்
பிப் பிணியாளிகளெல்லாரையும் அவரிட
த்தில் அழைத்துக்கொண்டுவந்து,—அவ 36
ருடைய வஸ்திரத்தின் ஓரத்தை மாத்திர

ந் தொடும்படிக்கு உத்தரவு கேட்க அதைத் தொட்ட யாவருஞ் சொஸ்தமடைந்தார்கள்.

---

## யரு. அதிகாரம்.

[(க) பரிசேயர் முதலானவர்கள் தேவ கற்பனைகளை மீறினதற்காக அவர்களைக் கடிந்துகொண்டது. (யக) வாய்க்குள்ளே போகிற பதார்த்தத்தினலே அசுசிவாராதென்பது. (உக) கானன்தேசத்தாளுடையமகளைக் குணமாக்கினது. (கூஉ) நாலாயிரபேருக்கும் அற்புதமாய்ச்சாப்பாடுகொடுத்தது.]

1 அக்காலத்திலே எருசலேமிலிருந்து வந்த வேதபாரகரும் பரிசேயரும் இயேசுவினிடத்தில் வந்து,— 2 உம்முடைய சீஷர் தங்கள் கைகளைக் கழுவாமற் போசனம்பண்ணுகிறார்கள். அப்படி அவர்கள் பெரியோர்களுடைய பாரம்பரை நியாயத்தை ஏன் மீறிநடக்கிறார்களென்றார்கள்.— 3 அதற்கு அவர் சொன்னது, உங்கள் பாரம்பரை நியாயத்தினல் நீங்களும் பராபரனுடைய கற்பனையை ஏன் மீறிநடக்கிறீர்கள்.— 4 எப்படியெனில் உன் தகப்பனையுந் தாயையுங் கனம்பண்ணவேண்

டுமென்றுந் தகப்பனையானாலுந் தாயை
யானாலும் நிந்திப்பவனை மரண ஆக்கினை
க்குட்படுத்த வேண்டுமென்றும் பராப
ரன் கட்டளையிட்டார். - அப்படியிருந்து 5
ம் நீங்கள் எவனாகிலுந் தன் தகப்பனுடனே
அல்லது தாயுடனே உமக்கென்னாலே உத
வுகிறதேதுண்டோ அதைக் காணிக்கையா
கக் கொடுக்கிறேனென்றுசொன்னால், - அ 6
வன் தன் தகப்பனை அல்லது தாயைக் கன
ம்பண்ண வேண்டுவதில்லையென்று போ
தித்து இவ்விதமாய்ப் பராபரனுடைய க
ற்பனையை உங்கள் பாரம்பரை நியாயத்தி
னாலே அவமாக்கிவருகிறீர்கள். - ஆ! வஞ்ச 7
கரே, இந்தச் சனங்கள் தங்கள் வாயினாலே
என்னைச்சேர்ந்து தங்கள் உதடுகளினாலே
என்னைக் கனம்பண்ணியுந் தங்களிருதய
மோ எனக்குத் தூரமாய் விலகியிருக்கின்
றது. - அப்படி இவர்கள் மனிதர்களுடை 8
ய கற்பனைகளாகிய போதகங்களைப் போ
திக்கிறவர்களாயிருந்து எனக்குவீணாய் ஆ
ராதனைசெய்கிறார்களென்று, - ஏசாயாவெ 9
ன்பவர் உங்களைக்குறித்து நன்றாய்த் தீர்க்
கதரிசனமுரைத்தானென்று சொன்னார்.

10 பின்பு சனங்களைத் தம்மிடத்தில் வர
அழைத்து நீங்கள் கேட்டுச் சிந்தித்துக்
11 கொள்ளுங்கள்.— வாய்க்குள்ளே போகி
றபொருள் ஒருவனையும் அசுசிப்படுத்த
மாட்டாது வாயிலிருந்து புறப்படுகிற
பொருளே ஒருவனை அசுசிப்படுத்துகி
கின்றதென்று அவர்களுடனே சொன்
12 னார்.— அப்பொழுது அவருடைய சீஷர்
அவரிடத்தில் வந்து பரிசேயர் இந்தவச
னத்தைக் கேட்டு விசனப்பட்டார்களெ
ன்று அறிந்திருக்கிறீராவென்றார்கள்.—
13 அதற்கவர், என் பரமபிதா நடாத நாற்று
14 க்கள் யாவும் பிடுங்கப்படும்.— அவர்களை
விட்டுவிடுங்கள். குருடருக்கு வழிகாட்டு
கிற குருடராயிருக்கிறார்கள். ஒருகுருட
ன் மற்றொரு குருடனுக்கு வழிகாட்டி
னால் இருவருங் குழியிலே விழுவார்களெ
15 ன்றார் —அப்பொழுது பேதுரு அவரை
நோக்கி, இந்த உவமையை எங்களுக்கு
வெளிப்படுத்தவேண்டுமென்று கேட்டா
16 ன்.—அதற்கு இயேசுவானவர், நீங்களும்
17 இன்னம் புத்தியில்லாதவர்களா?—வாய்க்
குள்ளே போகிறவைகள் யாவும் வயிற்றி

ற் பிரவேசித்துப் பின்பு ஆசனவழியாய்க் கழிந்து போகின்றனவென்பதை நீங்கள் இன்னஞ் சிந்தித்துக்கொள்ளவில்லையா?-
18 வாயிலிருந்து புறப்படுகிறவைகள் இருத யத்திலிருந்து புறப்பட்டு வருகின்றன. அவைகளேமனிதனை அசுசிப்படுத்துகின்
19 றன —எவையெனிற் பொல்லாத சிந்தனைகள், கொலைகள், விபசாரங்கள், வேசித்தனங்கள், களவுகள், பொய்ச்சாட்சிக
20 கள், தூஷணங்களாகிய இவைகள் இருதயத்திலிருந்து புறப்பட்டு வருகின்றன.-இவைகள் மனிதனை அசுசிப்படுத்துகிறவைகள்கை. கழுவாமற் சாப்பிடுகிறது மனிதனை அசுசிப்படுத்தாதென்றார்.

௨௧ பின்பு இயேசுவானவர் அவ்விடம் விட்டுத் தீருசீதோன் பட்டினங்களின் திசைக
௨௨ ளுக்குப் போனார்.—அப்பொழுது அவ்விடங்களில் எல்லைகளிலிருந்து வந்த கானான் தேசத்தாளாகிய ஒருஸ்திரி அவரை நோக்கி, ஆண்டவரே, தாவீதின் குமாரனே, என் மகள் பசாசினாலே கடினமாய் வாதிக்கப்படுகிறாள் எனக்கு இரங்கவேண்
௨௩ டுமென்று சொல்லிக்கூப்பிட்டாள்.-அவ

ரோ அவளுக்கு மாறுத்தரமாக அவர் ஒ
ரு வார்த்தையுஞ் சொல்லவில்லை. அப்
பொழுது அவருடைய சீஷர் வந்து அவ
ரை நோக்கி, இவள் நம்மைப்பின்றொடர்
ந்து கூப்பிடுகிறுளே, ஆதலால் இவளை அ
னுப்பிவிடுமென்று வேண்டிக்கொண்டா
24 ர்கள்.— அதற்கு அவர், காணமற்போன
ஆடுகளாகிய இஸ்ரவேல் குடும்பத்தாரிட
த்துக்கேயன்றி, (மற்றவர்களிடத்தில்)நா
ன் அனுப்பப்படவில்லையேயென்றார்.-
25 அவளோ வந்து ஆண்டவரே, எனக்குச் ச
காயஞ்செய்ய வேண்டுமென்று அவரை
26 நமஸ்காரம்பண்ணினாள்.-அவர் சொன்ன
து, பிள்ளைகளுடைய அப்பத்தையெடுத்
து, நாய்களுக்குப் போடுகிறது நல்லத
27 ல்லவேயென்றார்.—அதற்கவள் ஆண்ட
வரே, மெய்தான், ஆகிலும் நாய்கள் தங்
கள் எசமான்கள் போசனஞ்செய்கிற பல
கைகளிலிருந்து விழுகிற உச்சிட்டங்களை
28 த் தின்னுமேயென்றாள்.— அப்பொழு
து இயேசுவானவர் அவளை நோக்கி, ஆ!
ஸ்திரீயே, உன் விசுவாசம் பெரிதாயிருக்
கின்றது. நீ விரும்பினபடி உனக்காகக் க

டவதென்றார். அந்நேரமே அவளுடைய
மகள் சுகமடைந்தாள்.—பின்பு இயேசு 29
வானவர் அவ்விடம்விட்டுப் புறப்பட்டுக்
கலிலேயாக் கடலினருகே வந்து, ஒரு மலை
யிலேறி அங்கே உட்கார்ந்தார்.—அப் 30
பொழுது சப்பாணிகள், குருடர், ஊ
மையர், முடவர்கள், முதலான அநேகம்
பேரைக் கூட்டிக்கொண்டுவந்த மிகுந்த
சனங்கள் இயேசுவினிடத்தில் வந்து அவ
ர்களை அவருடைய பாதத்தினிடத்தில் வை
த்தார்கள். அவர்களை அவர் குணமாக்கி
னார்.—ஊமையர் பேசுகிறதையும் முட 31
வர்கள் சொஸ்தம் அடைகிறதையுஞ் சப்
பாணிகள் நடக்கிறதையுங் குருடர் காணு
கிறதையுஞ் சனங்கள் கண்டு ஆச்சரியப்
பட்டு இஸ்ரவேலின் தேவனைத் துதித்தா
ர்கள்.

பினபு இயேசுவானவர் தமது சீஷரை 32
த் தம்மிடத்தில் அழைத்து சனங்களைக்
குறித்து மன உருக்கமாயிருக்கிறேன். எ
ன்னத்தினாலென்றால், இவர்கள் மூன்
றுநாளென்னிடத்திலே தங்கிப் போசன
மில்லாதிருக்கிறார்கள். இவர்கள் வழியி

லே சோர்ந்துபோகும்படிக்குப் பட்டி
னியாய் இவர்களை அனுப்பிவிடமாட்டே
33 னென்றார்.—அதற்கு அவருடைய சீஷர்
கள் இவ்வளவு சனங்களுக்குத் திருத்தியு
ண்டாகும்படிக்கு வேண்டிய அப்பங்க
ள் இந்த வனாந்தரத்திலே நமக்கு எப்படி
34 அகப்படுமென்றார்கள்.- இயேசுவானவ
ர் உங்களிடத்தில் எவ்வளவு அப்பங்களு
ண்டென்றார்.ஏழு அப்பங்களுஞ் சிலசிறு
மீன்களுமுண்டென்று சீஷர் சொல்ல,—
35 அவர் சனங்களைத் தரையிலே பந்தியிருக்
36 கச்சொல்லி,-பின்பு அந்த ஏழு அப்பங்க
ளையும்,மீன்களையுமெடுத்துத் தோத்திர
ஞ்செய்து அவைகளைப்பிட்டுத்தம்முடை
ய சீஷர்களுக்குக் கொடுத்தார். சீஷர் அ
37 வைகளைச் சனங்களுக்குக்கொடுக்க,-எல்
லாருஞ்சாப்பிட்டுத் திருத்தியடைந்தார்க
ள்.பின்பு சேஷிமானவைகள் ஏழுகூடைநி
றையச் சேகரித்துக்கொள்ளப்பட்டன.-
38 பெண்களும் பிள்ளைகளுந்தவிரப்போசன
ம்பண்ணின புருஷர் நாலாயிரம்பேர்.-
39 அவர் சனங்களை அனுப்பி விட்டுப் படவி
லேறிமகுதலவூரின் திசைகளிற்சேர்ந்தார்.

---

## ௰௬. அதிகாரம்.

[(௧) பரிசேயர் ஓரடையாளத்தைக் கேட்டது. (௬) பரிசேயர் சதுசேயருடைய புளித்தமாவுக்கு விலகவேண்டுமென்பது. (௰௩) சனங்கள் கிறிஸ்துவைக்குறித்து யோசித்தது. (௰௬) பேதுரு அவரைக்குறித்து அறிக்கைபண்ணினது (௨௧) இயேசுவானவர் தமது மரணத்தை முன்னறிவித்தது. (௨௨) பேதுரு அவரைக்கடிந்தது (௨௪) தம்மைப் பின்பற்ற விரும்புகிறவர்கள் பாடுபடும்படி புத்திசொன்னது.

1 அப்பொழுது பரிசேயரும் சதுசேயரும் அவரைச் சோதிக்கும்படிக்கு அவரிடத்தில் வந்து வானத்திலிருந்து ஓரடையாளத்தைத் தங்களுக்குக் காண்பிக்கவேண்டுமென்று கேட்டார்கள்.— 2 அவர்களுக்கு அவர் சொன்னது, அஸ்தமனமாகிற பொழுது, செவ்வானந் தோன்றியபடியால் வெளிவாங்குமென்கிறீர்கள்.— 3 அல்லாமலும் உதயமாகிறபொழுது, வானஞ் சிவப்பாயும் மந்தாரமாயும் இருக்கிறபடியால் இன்றைக்குப் பெருங்காற்றும் மழையும் உண்டாகுமென்கிறீர்கள். வஞ்சகரே, வானத்தின் தோற்றத்தை வகையறுக்க அறிந்திருக்கிறீர்கள். காலங்களின் அ

டையாளங்களைக் குறித்து வகைவரக்க
4 மாட்டீர்களா — சோர மார்க்கமுள்ள
பொல்லாத சந்ததியாரானவர்கள் அடை
யாளங் கேட்கிறார்கள். யோனா தீர்க்கதரி
சியின் அடையாளமேயன்றி வேறொரு
அடையாளமும் இவர்களுக்குக் கொடுக்
கப் படுவதில்லையென்று சொல்லி அவர்
5 களை விட்டுப்போனார். —அவருடைய சீ
ஷர்கள் அக்கரைக்குப் போனபொழு
து, அவர்கள் அப்பங்களைக் கூடக்கொ
ண்டு போக மறந்திருந்தார்கள்.

6 அப்பொழுது இயேசுவானவர் அவர்
களை நோக்கி, நீங்கள் பரிசேயர் சதுசே
யரென்பவர்களுடைய புளிப்புள்ள மா
வுக்குவிலகி மிகவும் எச்சரிக்கையாயிருங்
7 களென்றார். —அவர்கள் நாம் அப்பங்க
ளைக்கூடக் கொண்டுவராததைக்குறித்து,
(இப்படிச் சொல்லுகிறாரென்று) தங்க
ளுக்குள்ளே யோசனை பண்ணிக்கொண்
8 டார்கள். —இயேசுவானவர் அதை அறிந்
து, அவர்களை நோக்கி, அற்பவிசுவாசிக
ளே, நீங்கள் அப்பங்களைக் கூடக்கொண்
டு வராததைக்குறித்து, (நான் இப்படிச்

சொல்லனதாக) உங்களுக்குள்ளே யோச
னைபண்ணுகிறதென்ன. —இன்னம் உங் 9
களுக்குப் புத்தியில்லையோ, ஐயாயிரம்
பேருக்குள்ளே (கொடுத்த) ஐந்து அப்ப
ங்களையும் நீங்கள் அவ்வளவு கூடைநிறை
யச் சேகரித்த துண்டங்களையும், -நாலா 10
யிரம் பேருக்குள்ளே (கொடுத்த) ஏழு
அப்பங்களையும் நீங்கள் அவ்வளவு கூடை
நிறைய எடுத்ததுண்டங்களையும் நினைத்
துக் கொள்ளுகிறதில்லையா. —பரிசேயர் 11
சதுசேயரென்பவர்களுடைய புளிப்புள்
ள மாவுக்கு விலகி எச்சரிக்கையாய் இரு
க்க வேண்டுமென்று நான் அப்பத்தைக்
குறித்துச் சொல்லவில்லை யென்று நீங்க
ள் சிந்தித்துக்கொள்ளாமலிருக்கிற தெ
ப்படியென்றார். —அப்பொழுது அவர் 12
கள் பரிசேயர் சதுசேயரென்பவர்களு
டைய அப்பங்களின் புளிப்புள்ள மாவுக்
கல்ல அவர்களுடைய உபதேசத்துக்கே
விலகி எச்சரிக்கையாய் இருக்கச் சொன்
னாரென்று அறிந்தார்கள்.

பின்பு இயேசுவானவர் பிலிப்புசேசா 13
ரியாவின் திசைகளில் வந்தபொழுது அ

வர் தம்முடைய சீஷர்களை நோக்கி, மனி
தனுடைய குமாரனாகிய என்னைச் சனங்
கள் ஆரென்று சொல்லுகிறார்களென்று
14 கேட்டார்.—அதற்கவர் சொன்னது சில
ர் உம்மை யோவானிஸ்நானனென்றுஞ்,
சிலர் எலியாவென்றும், சிலர் எரேமியா
அல்லது தீர்க்கதரிசிகளில் ஒருவரென்று
15 ஞ் சொல்லுகிறார்களென்றார்.—அதற்கவ
ர் நீங்களென்னை ஆரென்று சொல்லுகி
16 றீர்களென்று கேட்டபொழுது,- அதற்
குச் சீமோன் பேதுருசொன்னது, நீர் சீ
வனுள்ள பாரபரனுடைய குமாரனாகிய கி
17 றிஸ்துவென்றான்.—அவனுடனே இயே
சுவானவர் சொன்னது, யோனாவின் கு
மாரனாகிய சீமோனே மாமிச இரத்தமல்
ல பரமண்டலங்களில் இருக்கிற என்பிதா
இதை உனக்கு வெளிப்படுத்தினார். ஆத
18 லால் நீ பாக்கியமுள்ளவன்.-மேலும் நீ
பேதுருவாயிருக்கிறாய் இந்தக் கல்மலை
யின்மேல் நான் என்னுடைய சபையைக்
கட்டுவேன், பாதாளத்தின் வாசல்களும்
அதைச் சயிப்பதில்லையென்று உனக்கு
19 ச் சொல்லுகிறேன்.—அல்லாமலும் பர

லோக ராச்சியத்தின் திறவுகோல்களை
உனக்குக் கொடுப்பேன் பூமியிலே நீ க
ட்டுவதேதோ அது பரலோகத்திலே க
ட்டப்பட்டிருக்கும். பூமியிலே நீ கட்ட
விழ்ப்பதேதோ அது பரலோகத்திலே க
ட்டவிழ்க்கப்பட்டிருக்குமென்று சொ
ல்லி,-பின்பு தாம் கிறிஸ்தென்று ஒருவருக் 20
குஞ் சொல்லாதபடிக்குத் தமது சீஷர்க
ளுக்குக் கட்டளையிட்டார்.

அது முதல் இயேசுவானவர் தாம் எரு 21
சலேமுக்குப்போய்ப் பெரியோர்களா
லும், பிரதான ஆசாரியராலும், வேதபா
ரகராலும் மிகுந்தபாடுபடவுங்கொலைசெ
ய்யப்படவும் மூன்றாநாளிலே எழுந்தி
ருக்கவும்வேண்டுமென்று தம்முடைய சீ
ஷருக்குக் காண்பிக்கத் தொடங்கினார்.—
அப்பொழுது பேதுரு அவரைத் தனி 22
யே அழைத்து ஆண்டவரே உம்மிடத்தி
ல் இரக்கமுண்டாவதாக, அப்படி உமக்
குவராதிருப்பதாகவென்று அவருடனே
கண்டிப்பாய்ச் சொன்னான்.-இயேசுவா 23
னவர் திரும்பிப் பேதுருவினிடத்தில் ஆ!
சாத்தானே நீ என்முன்னிராமற்போ, நீ

பராபரனுக்குப் பிரியமானவைகளைச் சி
ந்தியாமல் மனிதருக்குப் பிரியமானவை
களைச் சிந்திக்கிறபடியினாலே எனக்குத்
துன்பமாயிருக்கிறாயென்று சொல்லி,

24 பின்பு தம்முடைய சீஷர்களை நோக்கி,
என்னைப் பின்பற்றி நடக்க ஒருவன் விரு
ம்பினால் தன்னைத்தான் வெறுத்துத் தன்
சிலுவையை எடுத்துக்கொண்டு என்னைப்
25 பின்பற்றக்கடவன்.— என்னத்தினாலென்
றால் தன் சீவனை இரட்சிக்கவிரும்புகிறவ
ன் அதை இழந்துபோவான். என்னிமி
த்தந் தன் சீவனையிழந்துபோகிறவன் அ
26 தைக்கண்டடைவான்.—அல்லாமலும் ம
னிதனானவன் உலகம்முழுமையுஞ்சம்பா
தித்துக்கொண்டாலுந் தன் சீவனை நஷ்
டப்படுத்தினால் அவனுக்கு என்னலாபமு
ண்டாயிருக்கும்? அன்றியும் ஒரு மனித
ன் தன் சீவனை மீட்கிறதற்கு என்னத்தை
27 க்கொடுப்பான்?–அல்லாமலும் மனிதனு
டைய குமாரன் தம்முடைய பிதாவின் மகிமை
யைப்பொருந்தித் தம்முடைய தூதரோ
டுங் கூட வருவான். அப்பொழுது அவ
னவனுடைய செய்கையின்படியே அ

வனவனுக்குப் பலன் அளிப்பான்.—இங் 28
கே நிற்கிறவர்களிற் சிலர் மனிதனுடைய
குமாரன் தம்முடைய இராச்சியத்தில் வ
ருவதைக்காண்கிறதற்கு முன்னே மரண
த்தை அடைவதில்லையென்று மெய்யாய்
உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.

---

## ௰௭. அதிகாரம்.

[(௧.) இயேசுவானவர் மறுரூபங்கொண்டது. (௰௪.) சந்திரரோகியைக் குணமாக்கினது. (௨௨,) தம்முடைய பாடுகளை முன்னறிவித்தது, (௨௪,) திர்வையைச் செலுத்தினது.

ஆறுநாளுக்குப் பின்பு இயேசுவானவ 1
ர் தனித்திருக்கும்படி பேதுருவையும்,
யாக்கோபையும், அவனுடைய தம்பியா
கிய யோவானையுங் கூட்டிக்கொண்டு உ
யர்ந்த மலையின்மேற்போய்,—அங்கேஅ 2
வர்களுக்குமுன்பாக மறுரூபமானார். அ
வருடைய முகஞ் சூரியனைப்போலப் பி
ரகாசித்தது, அவருடைய வஸ்திரங்கள்
ஒளியைப்போல வெண்மையாயின.—அ 3
ப்பொழுது மோசே எலியா என்பவர்க
ள் அவரோடே பேசிக்கொள்ளுகிறவர்க

ளாய் அவர்களுக்குக்காணப்பட்டார்கள்.
4 —அப்பொழுது பேதுரு இயேசுவை
நோக்கி ஆண்டவரே நாம் இங்கேயிருக்கி
றது நல்லது, உமக்குச்சித்தமானால் இங்
கே உமக்கும், மோசேயுக்கும், எலியாவு
க்கும் ஒவ்வொரு குடிலாக மூன்று குடில்க
5 ளை உண்டாக்குவோமென்றான்.—அப்ப
டி அவன் பேசுகையில் நடந்ததென்ன
வெனில் ஒளியுள்ளமேகம் அவர்கள்மே
ல் நிழலிட்டதுமல்லாமல், இவர் எனக்
கு அன்பாயிருக்கிற என்னுடைய குமார
ன் இவரில் பிரியமாயிருக்கிறேன் இவருக்
குச் செவிகொடுங்களென்று அந்த மே
6 கத்திலிருந்து சத்தமுண்டாயிற்று —சீஷ
ர் அதைக்கேட்டு முகங்குப்புற விழுந்து
7 மிகவும் பயந்தார்கள்.—அப்பொழுது இ
யேசுவானவர் வந்து அவர்களைத் தொட்
டு எழுந்திருங்கள் பயப்படாதிருங்களெ
8 ன்று சொன்னார்,—அவர்கள் தங்கள் க
ண்களை உயர்த்துகிறபொழுது இயேசு
வையேயன்றி மற்றொருவரையுங் காணவி
9 ல்லை,—பின்பு அவர்கள் மலையிலிருந்திற
ங்குகிறபொழுது இயேசுவானவர் அவர்

களைநோக்கி மனிதனுடைய குமாரன் ம
ரித்தோரிலிருந்து எழுந்திருக்கிறவரைக்
கும் நீங்கள் இந்தத் தரிசனையை ஒருவரு
க்குஞ் சொல்லவேண்டாமென்று கட்ட
ளையிட்டார்.—அப்பொழுது அவருடை 10
ய சீஷர்கள் அவரைநோக்கி அப்படியா
னால் முதலாவது எலியா வரவேண்டுமெ
ன்று வேதபாரகர் எப்படிச் சொல்லுகி
றார்களென்றார்கள்.—அதற்கு இயேசுவா 11
னவர் சொன்னது முன்பு எலியா வந்து
யெல்லாவற்றையுஞ் சீர்ப்படுத்த வேண்டு
மென்பது மெய்தான்.—அல்லாமலும் 12
எலியாவந்தாயிற்றென்று உங்களுக்குச்
சொல்லுகிறேன். அவனை அவர்கள் அங்
கிகரித்துக்கொள்ளாமல் அவனுக்குத் த
ங்கள் இஷ்டப்படிசெய்தார்கள். அப்ப
டி மனிதனுடைய குமாரனும் அவர்களா
ற்பாடுபடுவாரென்றார்.—அப்பொழுது 13
அவர் யோவானிஸ்நானனைக் குறித்துத்
தங்களுடனே பேசினாரென்று சீஷர் அ
றிந்தார்கள்.

பின்பு அவர்கள் சனக்கூட்டத்தினிடத் 14
திற் சேர்ந்தபொழுது, ஒரு மனிதன் அ

வரிடத்தில் வந்து அவர் முன்பாக முழ
15 ங்காற்படியிட்டு, — ஆண்டவரே, என் ம
கனுக்கிரங்கும். அவன் சந்திரரோகியாயி
க் கொடிய வேதனைப்படுகிறான். எப்ப
டியென்றால் அடிக்கடி தீயிலேயும் அடி
16 க்கடி சலத்திலேயும் விழுகிறான். — அவ
னை உம்முடைய சீஷர்களிடத்திற் கொ
ண்டுவந்தேன், அவர்களுக்கு அவனை கு
17 ணமாக்கத் திராணியில்லையென்றான். — அ
தற்கு இயேசுவானவர் சொன்னது ஆ!
விசுவாசமில்லாத மாறுபாடுள்ள சந்ததியா
ரே, எதுவரைக்கும் உங்களோடிருப்பே
ன். எதுவரைக்கும் உங்களிற் பொறுமை
யாயிருப்பேன். அவனை என்னிடத்திற்
18 கொண்டுவாருங்கள் என்றார். — அவனைக்
கொண்டுவந்தபொழுது இயேசுவானவர்
அவனிலுள்ள பசாசை அதட்டினார், உட
னே அது அவனை விட்டுப்போயிற்று.
அந்தப் பிள்ளை அந்நேரமே சுகமடைந்
19 தான். - பின்பு சீஷர்கள் மாத்திரம் இயே
சுவினிடத்தில் வந்து நாங்கள் அதைத் து
ரத்தும்படி என் எங்களுக்குத் திராணியி
20 ல்லையென்றார்கள். - அதற்கு இயேசுவான

வர் உங்கள் அவிசுவாசத்தினலே (திராணி யில்லை.) மேலும் ஒரு கடுகுவிதை அவ்வ ளவு விசுவாசம் மாத்திரம் உங்களுக்குண் டானல் நீங்கள் இந்த மலையை நோக்கி இவ்விடம் விட்டு அப்புறம்போவென்று சொல்ல அது போம் அல்லாமலும் உங் களாற் கூடாதகாரியமொன்றுமிருப்பதி ல்லையென்று மெய்யாகவே உங்களுக்கு ச் சொல்லுகிறேன்.— ஆகிலுஞ் செபத் 21 தினலும் உபவாசத்தினலுமேயன்றி (வே முவிதமாய்) இந்தச் சாதியைத் துரத்தப் படாதென்றார்.

அல்லாமலும் அவர்கள் கலிலேயா நா 22 ட்டிலே சஞ்சரித்திருந்த காலத்திலே இ யேசுவானவர் அவர்களை நோக்கி, மனித னுடைய குமாரன் மனிதர்களுடைய கை யில் ஒப்புக்கொடுக்கப்படுவான்.—அவர் 23 கள் அவனைக் கொலைசெய்வார்கள் பின்பு மூன்றுநாளிலேயெழுந்திருப்பானென்றார். அவர்கள் மிகுந்த துக்கமடைந்தார்கள்.

அவர்கள் கப்பர்நாகூமூரில் வந்தபொ 24 ழுது வரிப்பணத்தைச் சேர்க்கிறவர்கள் பேதுருவினிடத்தில் வந்து உங்கள் போத

தகர் வரிப்பணத்தைக் கொடுக்கிறதில்லை
யாவென்றார்கள், கொடுக்கிறாரென்றான். -
25 பின்பு அவன் வீட்டிலே வந்தபொழுது,
அவன் (பேசுகிறதற்கு) முன்னே இயே
சுவானவர் அவனை நோக்கி சீமோனே, பூ
மியின் இராசாக்கள் ஆர் கையிலே தீர்
வை அல்லது வரிவாங்குகிறார்கள். தங்கள்
பிள்ளைகள் கையிலோ அந்நியர்கையிலோ?
இது உனக்கு எப்படித் தோன்றுகின்ற
26 தென்றார். - அந்நியர் கையில் வாங்குகிறார்
களென்று பேதுருசொன்னான். அதற்கு
இயேசுவானவர் அப்படியானாற் பிள்ளை
27 கள் செலுத்தவேண்டுவதில்லையே. — ஆ
னாலும் நாம் அவர்களுக்கு விசனம்வர
ப்பண்ணாதபடிக்கு நீ கடலிடத்துப் போ
ய்த் தூண்டிலைப் போடு, முதலாவது எழு
ம்புகிற மீனை எடுத்து அதின் வாயைத் தி
றந்து பார். அதிலே ஒரு வெள்ளிக்கா
சைக் காண்பாய், அதை எடுத்துவந்து
எனக்காகவும் உனக்காகவும் அவர்களுக்
குக் கொடு என்றார்.

## ௰௮. அதிகாரம்:

[(௧.) சீஷர்கள் மனத்தாழ்மையுள்ளவர்களாயுங் கெடுதி செய்யாதவர்களாயுமிருக்கும்படி புத்தி சொன்னது. (௭) சிறியவர்களை அசட்டைபண்ணாமலிருக்கவேண்டுமென்பது. (௰௫) தப்பிதஞ்செய்தவர்களுக்குச் செய்ய வேண்டியது. (௨௧) ஒருவருக்கு ஒருவர் மன்னிக்கவேண்டியதைக் குறித்து உவமைசொன்னது.]

1 அக்காலத்திலே சீஷர்கள் இயேசுவினிடத்துக்கு வந்து பரலோக இராச்சியத்திலே எவன் பெரியவனாயிருப்பானென்றார்கள்.— 2 அப்பொழுது இயேசுவானவர் ஒருபிள்ளையைத் தம்மிடத்தில் அழைத்து அதை அவர்களுக்குள்ளே நிறுத்திச்சொன்னதாவது,— 3 நீங்கள் மனந்திரும்பிப் பிள்ளைகளைப்போலாகாவிட்டாற் பரலோக இராச்சியத்திற் பிரவேசிக்கமாட்டீர்களென்று மெய்யாக உங்களுக்குச் சொல்லுகிறேன்.— 4 ஆகையால் இந்தப்பிள்ளையைப்போலத் தன்னைத் தாழ்த்துகிறவனே பரலோக இராச்சியத்திற் பெரியவனாயிருப்பான்— 5 அல்லாமலும் இப்படிப்பட்ட ஒருபிள்ளையை என் நாமத்

தினாலே யேற்றுக்கொள்ளுகிறவன் என்
6 னை ஏற்றுக்கொள்ளுகிறான்.-என்மேல் வி
சுவாசமாயிருக்கிற இந்தச் சிறியரிலொரு
வன் குற்றஞ்செய்வதற்குக் காரணமான
வனெவனோ அவனுடைய கழுத்தில் ஏந்
திரக் கல்லைக்கட்டி அவனைச் சமுத்திரத்
துக்குள்ளே யமிழ்த்தினால் அவனுக்கு ந
லமாயிருக்கும்.

7 ஐயோ! கெடுத்தலின் நிமித்தம் உலகத்
துக்கு வேதனைவரும்.கெடுத்தல் அவசிய
மாய் வரவேண்டும். ஆனாலும் ஐயோ!
கெடுத்தலைச் செய்கிறவனுக்கு வேதனை
8 வரும்.—ஆதலால் உன் கையாவது உன்
காலாவது உன்னைக் கெடுக்கிறதற்கு ஏது
வானால் அவைகளைத் தறித்து எறிந்து
போடு' நீ இரண்டு கையை அல்லது இர
ண்டு காலையுடையவனாய் நித்திய அக்கினி
யிலே தள்ளப்படுவதிலுஞ் சப்பாணியாய்
அல்லது ஊனனாய் (நித்திய) சீவனுள்ள
இடத்திற் பிரவேசிக்கிறதே யுனக்கு நன்
9 மையாயிருக்கும்.—மேலும் உன்னுடை
ய கண் உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவா
னால, அதைப் பிடுங்கியெறிந்துபோடு, நீ

இரண்டு கண்ணையுடையவனாய் எரிநரகத்
திலே தள்ளப்படுவதிலும் ஒற்றைக்கண்
ணனாய்(நித்திய)சீவனுள்ள இடத்திற் பிர
வேசிக்கிறதே உனக்குநன்மையாயிருக்கு
ம்.—இந்தச் சிறியரில் ஒருவனையும் அச 10
ட்டைபண்ணாதபடிக்குப் பாருங்கள். எ
ன்னத்தினாலென்றால், அவர்களுக்கேற்ற
தேவ தூதர்கள் பரமண்டலங்களிலே எ
ன் பரமபிதாவிடனுடைய சமுகத்தை எ
ப்பொழுதுந் தரிசிக்கிறார்களென்று உங்
களுக்குச் சொல்லுகிறேன்.—அல்லாம 11
லும் மனிதனுடைய குமாரன் கெட்டுப்
போனதை இரட்சிக்கவந்தான்.- உங்களு
க்கெப்படித் தோன்றுகின்றது. ஒரு ம
னிதனுக்குண்டாயிருக்கிற நூறு ஆடுகளி
ல் ஒன்று சிதறிப்போனால், அவன் தொ
ண்ணூற்றொன்பது ஆடுகளையும்மலைகளி 12
ல் விட்டுப்போய்ச் சிதறிப்போனதைத்
தேடுவானல்லவோ,—இது உங்களுக்கெ 13
ப்படித்தோன்றுகின்றது. அவன் அதை
க்கண்டு பிடித்தாற் சிதறிப்போகாததொ
ண்ணூற்றொன்பதிலும் அதைக் குறித்து
அதிகமாய்ச் சந்தோஷப்படுவானென்று

மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகி
14 றேன். — அந்தப்படி இந்தச் சிறியரில் ஒ
ருவனாகிலுங் கெட்டுப்போகும்படிக்குப்
பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதா
வுக்குச் சித்தமில்லை.

15 உன் சகோதரன் உனக்கு விரோதமா
ய்க் குற்றஞ் செய்தால், நீ போய் அவ
னோடே மாத்திரமிருந்து அவனைக் கடிந்
துகொள். அவன் உனக்குச் செவிகொடு
த்தால் ஆதாயமாக அவனைப் பெற்றுக்
16 கொள்வாய். — அவன் செவிகொடாமலி
ருந்தால், சங்கதியெல்லாம் இரண்டு மூ
ன்று சாட்சிகளுடைய வாக்கினால் நிலவ
ரப்படும்படிக்கு நீ இரண்டொரு பே
17 ரைக் கூட்டிப்போ. — அவன் அவர்களு
க்குங் கீழ்ப்படியாதிருந்தால், நீ அதை
ச் சபைக்கு அறிவிக்கவேண்டும். அவன்
சபையையும் அசட்டைபண்ணினால் நீ அ
வனை அஞ்ஞானியைப்போலவும் ஆயக்
காரனைப் போலவும் எண்ணுவாயாக. —
18 பூமியிலே நீங்கள் எவைகளைக் கட்டுவீர்க
ளோ அவைகள் பரலோகத்திலே கட்ட
ப்பட்டிருக்கும். பூமியிலே எவைகளை அ

விழ்ப்பீர்களோ அவைகள் பரலோகத்தி லே அவிழ்க்கப்பட்டிருக்குமென்று மெ ய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன். —அல்லாமலும் பூமியிலே எந்தக் காரி 19 யத்தைக் குறித்தும் உங்களில் இரண்டு பேர் வேண்டிக்கொள்ள ஒருமைப்பட் டால் அது பரமண்டலங்களிலிருக்கிற எ ன் பிதாவினால் அவர்களுக்குண்டாகு மென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். —என்னத்தினாலென்றால் இரண்டுபேரா 20 வது மூன்றுபேராவது என்னுடைய நா மத்திலே எங்கே கூடி வந்திருக்கிறார்க ளோ அங்கே அவர்களுக்குள்ளே இருக் கிறேனென்றார்.

அப்பொழுது பேதுரு அவரிடத்தில் 21 வந்து ஆண்டவரே, என் சகோதரன் எ னக்கு விரோதஞ் செய்தால் அவனுக்கு நான் எத்தனைதரம் மன்னிக்கவேண்டும். ஏழுதரம் மட்டுமோவென்றான்.—இயே 22 சுவானவர் அவனுக்குச் சொன்னது, ஏழு தரம் மட்டுமல்ல, எழுபதுதரமென் று உனக்குச் சொல்லுகிறேன்.

எப்படியெனிற் பரலோக இராச்சியந் 23

தன் ஊழியக்காரருடனே கணக்குப்பா
ர்க்கச் சித்தமான இராசனுக்கொப்பாயி
24 ருக்கின்றது.-அவன் கணக்குப் பார்க்கத்
தொடங்கினபொழுது பதினாயிரந் தால
ந்து கடன் பட்டவனை அவனுக்குமுன்பா
25 கக் கொண்டுவந்தார்கள். —அவன் கட
னைத் தீர்க்கத் திராணியில்லாதபடியால்
ஆண்டவன் அவனையும் அவனுடைய ம
னைவியையும் பிள்ளைகளையும் அவனுக்கு
ண்டான யாவையும் விற்றுக் கடனைத் தீர்
26 க்கக் கட்டளையிட்டான். —அப்பொழுது
அந்த ஊழியகாரன் விழுந்து வணங்கி,
ஆண்டவனே, எல்லாவற்றையும் உமக்குக்
கொடுத்துத் தீர்க்கிறேன். நீர் எனக்கு இ
ரங்கிப் பொறுக்கவேண்டுமென்று வே
27 ண்டிக்கொண்டான். -அந்தப்படி ஆண்
டவன் அந்த ஊழியகாரனுக்கு இரங்கி,
அவனை விடுதலைபண்ணிக் கடனையும் அவ
28 னுக்கு மன்னித்தான் —பின்பு அந்த ஊ
ழியகாரன் புறப்பட்டுப்போகையில் தன்
னோடே கூட வேலைசெய்து தனக்கு நூ
று தேநாரியபணம் கடன்பட்டிருந்த ஒ
ருவனைக்கண்டு அவனைப்பிடித்துத் தொ

ண்டையை நெரித்து, நீ பட்டகடனை எ
னக்குக் கொடுத்துத்தீரென்றான். — உ 29
டனே அந்த ஊழியக்காரன் அவனுடைய
கால்களினருகே விழுந்து எல்லாவற்றை
யும் உனக்குக் கொடுத்துத் தீர்க்கிறேன்.
எனக்கிரங்கிப் பொறுக்கவேண்டுமென்
று வேண்டிக்கொண்டான். — ஆகிலும் 30
அவன் மனதில்லாமற் போய், அவனை ப
ட்டகடனைத் தீர்க்குமளவும் அவனைக் கா
வலிற் போடுவித்தான். — அந்த நடக்கைக 31
ளை மற்ற ஊழியக்காரர் கண்டு மிகுந்த
துக்கம் அடைந்து, ஆண்டவனிடத்தி
ற்குப்போய் நடந்த எல்லாவற்றையும்
அவனுக்கறிவித்தார்கள். — அப்பொழுது 32
ஆண்டவன் அவனை அழைப்பித்து, அவ
னைநோக்கிப் பொல்லாத ஊழியக்கார
னே, நீ என்னை வேண்டிக்கொண்டபடி
யினாலே நான் அந்தக் கடன் யாவையும்
உனக்கு மன்னித்தேனே. — நான் உனக் 33
கிரங்கினதுபோல நீயும் உன்னோடே கூ
ட ஊழியஞ் செய்கிறவனுக்கு இரங்க
வேண்டுமல்லவோ என்றுசொல்லி, —
கோபம் அடைந்து அவன் பட்ட கடன் 34

யாவையுந் தனக்குக் கொடுத்துத் தீர்க்
குமளவும் அவனை உபாதிக்கிறவர்களுக்
35 கு ஒப்புக் கொடுத்தான். — அவனவன் த
ன் சகோதரன் செய்த தப்பிதங்களை நீங்
கள் மனப்பூருவமாய் மன்னியாமற் போ
னால் இப்படிப்போல உங்கள் பரமபிதா
உங்களுக்குஞ் செய்வாரென்றார்.

---

## ௰௯. அதிகாரம்.

[(௧) கிறிஸ்து வியாதிஸ்தரைச் சொஸ்தமாக்கினது. (௩) விவாகத்தைக் குறித்துப் பரிசேயருக்குஞ் சீஷருக்கும் உத்தரவுசொன்னது. (௰௩) சிறுபிள்ளைகளை ஆசிர்வதித்தது (௰௬) நித்தியசீவனைக் குறித்து ஒருவாலிபனுக்கு உத்தரவுசொன்னது. (௨௩) ஐசுவரியவான்கள் பராபரனுடைய இராச்சியத்தை அடைகிறது அரிதென்பது. (௨௭) தம்மைப் பின்பற்றுகிறவர்களுக்கு வரும்பலன்.]

1 மேற்சொல்லிய உபதேசங்களை இயே
சுவானவர் சொல்லி முடித்தபின்பு அவர்
கலிலேயா நாட்டைவிட்டு யோர்தானுக்
கருகேயிருக்கிற யூதேயா நாட்டின் எல்
2 லைகளுக்குப் போனார். — அநேக சனங்க
ள் அவர் பின் சென்றார்கள். அவ்விடத்தி

லே அவர்களிலுள்ள (பிணியாளிகளை) அ
வர் குணமாக்கினார்.

3 அப்பொழுது சில பரிசேயர் அவரை
ச்சோதிக்கும்படிக்கு அவரிடத்தில் வந்
து புருஷனானவன் தன் மனைவியை எந்
த நிமித்தமானாலுந் தள்ளிவிடலாமாவெ
ன்று கேட்டார்கள் — 4 அதற்சவர் சொ
ன்னது, ஆதியிலே சிருஷ்டிகர் மனிதரை
உண்டாக்கின பொழுது ஒரு ஆணையும் ஒ
ரு பெண்ணையும் உண்டாக்கினாரென்கிற
தையும், — 5 இந்நிமித்தம் ஒருவன் தகப்
பனையுந் தாயையும் விட்டுத் தன்மனைவி
யுடனே இசைந்திருப்பான். அவ்விருவ
ரும் ஒரே சரீரத்தைப் போலிருப்பார்க
ளென்று அவர் சொன்னதையும் நீங்கள்
வாசிக்கவில்லையோ. — 6 அப்படியிருக்கிற
படியினாலே அவர்கள் இருவராயிராமல்
ஒரே சரீரத்தைப் போலிருக்கிறார்கள். ஆ
தலாற் பராபரன் இணைத்ததை மனிதர்
பிரிக்கக் கூடாதென்றார். - 7 அவர்கள் சொ
ன்னது, அப்படியானால் தள்ளுதலின் சீ
ட்டைக் கொடுத்து அவளைத் தள்ளிவிடு
ம்படிக்கு மோசே என்பவர் ஏன் கட்ட

8 ளை விட்டாரென்றார்கள்? — அதற்கு அவர் சொன்னது, உங்களிருதயங் கடினமானபடியால் நீங்கள் உங்கள் மனைவிகளைத் தள்ளிவிடும்படிக்கு மோசே உங்களுக்கிடங் கொடுத்தார். ஆதிமுதலோ அப்ப
9 டியிருந்ததில்லை. — ஆகையால் எவனாகிலும் வேசிமார்க்கமாய் நடவாமல் இருக்கிற மனைவியைத் தள்ளிவிட்டுவேறொருத்தியை விவாகம் பண்ணினால் அவன் விபசாரம் பண்ணுகிறான். தள்ளிவிடப்பட்டவளை விவாகம் பண்ணுகிறவனும் விபசாரம் பண்ணுகிறானென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

10 அவருடைய சீஷர்கள் அவருடனே சொன்னது, விவாகம்பண்ணின புருஷனுடைய காரியம் இப்படியானால் விவாகம்பண்ணுகிறது நன்மையல்லவென்றார்
11 கள். — அதற்கு அவர் சொன்னதாவது, திராணிபெற்றவர்களேயன்றி மற்ற எவர்களாலும் (நீங்கள்சொன்ன) வசனத்தி
12 ன்படி செய்யமாட்டார்கள். — அண்ணகர்களுண்டு சிலர் அப்படிப்பட்டவர்களாய்ப் பிறந்தார்கள். சிலர் மற்ற மனிதர்க

ளாலே அண்ணகர்களாக்கப்பட்டார்கள். சிலர் பரலோகராச்சியத்துக்காகத் தங்களை அண்ணகர்களாக்கினார்கள். அப்படிப் பற்றிக்கொள்ளத் திராணியுள்ளவன் எவனோ அவன் அப்படிப்பற்றிக்கொள்ளக் கடவனென்றார்.

13 அப்பொழுது அவர் பிள்ளைகளின்மேற் கைகளை வைத்து அவர்களுக்காகச் செபம்பண்ணும்படிக்கு அவரிடத்திற் கொண்டுவந்தார்கள் அவர்களைச் சீஷர் அதட்டினார்கள்.—14 இயேசுவானவர் (அதைக் கண்டு) சொன்னதாவது பிள்ளைகள் என்னிடத்திலே வருகிறதற்குத் தடைபண்ணாமல் இடங்கொடுங்கள் பரலோக இராச்சியம் அப்படிப்பட்டவர்களுடையதாயிருக்கின்றதேயென்று சொல்லி,—15 அவர்கள்மேற் கைகளைவைத்துப் பின்பு அவ்விடம்விட்டுப் புறப்பட்டுப்போனார்.

16 அப்பொழுது ஒருவன் வந்து அவரை நோக்கி நல்ல போதகரே நித்தியசீவனை அடையும்படிக்கு நான் எந்த நன்மையைச்செய்யவேண்டுமென்றான்.—17 அவனுடனே அவர் சொன்னது நீ என்னை நல்லவ

னென்றுஎன் சொல்லுகிறாய்? பராபரனா
கிய ஒருவரேதவிர நல்லவன் ஒருவனுமி
ல்லையே. நீ சீவனிற் பிரவேசிக்க விரும்பி
னாற் கற்பனைகளைக் கைக்கொள்ளென்றார்
18 —அவைகள் எவைகளென்று அவன் கே
ட்டான். அதற்கு இயேசுவானவர் சொ
ன்னது, கொலைசெய்யாதிருப்பாயாக,
விபசாரம்பண்ணாதிருப்பாயாக, களவுசெ
ய்யாதிருப்பாயாக, பொய்ச்சாட்சி சொ
19 ல்லாதிருப்பாயாக,—உன் தகப்பனையுந்
தாயையுங் கனம்பண்ணுவாயாக, உன்னை
ப்போலப் பிறனில் அன்புகூருவாயாக எ
20 ன்பவைகளேயென்றார்.—அந்த வாலிப
ன் சொன்னது இவைகளையெல்லாம் நா
ன் சிறுவயதுமுதற் கைக்கொண்டிருக்கி
றேன் நான் இன்னுஞ் செய்யவேண்டுவ
௨௧ தென்ன என்றான்.-இயேசுவானவர் சொ
ன்னது நீ பூரணசற்குணனாயிருக்கவிரும்
பினால் நீ போய் உனக்குண்டாயிருக்கிற
வைகளை விற்றுப் பரலோகத்திலே உனக்
குப் பொக்கிஷமுண்டாயிருக்கும்படிக்
குத் தரித்திரருக்குக் கொடுத்துப் பின்பு
௨௨ வந்து என் பின்னேசெல்லு என்றார்.—

வாலிபன் இந்தவசனத்தைக் கேட்டு மிகுந்த ஆஸ்திகளை உடையவனானபடியினாலே துக்கத்தோடேபோய்விட்டான்.

அப்பொழுது இயேசுவானவர் தமது சீஷரை நோக்கி, ஐசுவரியமுள்ளவன் பரலோக இராச்சியத்திற் பிரவேசிக்கிறது அரிதாயிருக்கின்றதென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.—அ 23 24
ல்லாமலும் ஐசுவரியவான் பராபரனுடைய இராச்சியத்திற் பிரவேசிக்கிறதைப்பார்க்கிலும் ஒரொட்டகம் ஊசியின் காதிலே நுழைகிறதே எளிதாயிருக்கின்றதென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.—அவருடைய சீஷர்கள் அதைக்கே 25
ட்டு மிகவும் பிரமித்து அப்படியானால் இரட்சிக்கப்படுகிறவர்கள் யாரென்றார்கள்.—இயேசுவானவர் அவர்களைப் பார்த் 26
துச் சொன்னதாவது மனிதரால் இது கூடாதகாரியந்தான் பராபரனாலே எந்தக் காரியத்தையுஞ்செய்ய வல்லவரென்றார்.

அப்பொழுது பேதுரு அவருடனே 27
சொன்னதாவது, இதோ நாங்கள் எல்லாவற்றையும் விட்டு உம்மைப் பின்பற்றிவ

ற்றோம் அதற்காக எங்களுக்கென்னபல
28 ன்வருமென்றான்.—இயேசுவானவர்சொ
ன்னது (சகலமும்) புதிதாக்கப்படுங்கா
லத்திலே மனிதனுடைய குமாரன் தன
து மகிமையுள்ள பத்திராசனத்தில் வீற்
றிருக்கும்பொழுது என்னைப் பின்பற்றி
வந்த நீங்களும் இஸ்ரவேலராகிய பன்னி
ரண்டு கோத்திரங்களுக்கு நியாயத்தீர்ப்பு
க் கொடுக்கிறவர்களாகப் பன்னிரண்டு ப
த்திராசனங்களிலிருப்பீர்களென்று மெ
ய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறே
29 ன்.—அல்லாமலும் என் நாமத்தினிமித்தம்
வீட்டையாகிலும், சகோதரரையாகிலு
ஞ் சகோதரிகளையாகிலுந் தகப்பனையா
கிலும், தாயையாகிலும், மனைவியையாகி
லும், பிள்ளைகளையாகிலும், நிலங்களையா
கிலும் விட்டவன் எவனோ அவன் நூற
த்தனையாய்ப் பலன் அடைந்து நித்திய
சீவனையும் சுதந்தரித்துக்கொள்வான்.—
30 ஆகிலும் முந்தினோராகிய அநேகர் பிந்தி
னோராயிருப்பார்கள் பிந்தினோராகிய (அ
நேகர்) முந்தினோராயிருப்பார்கள்.

---

## ௨௰. அதிகாரம்.

[(௧.) திராட்சத்தோட்டத்திலே வேலைசெய்கிறவர்களை உவமையாகக் காட்டியது. (௰௭.) தம்முடைய பாடுகளை முன்னறிவித்தது. (௨௰) செபெதேயுவின்குமாரருக்குச்சொன்ன உத்தரவினாலே மனத்தாழ்மையைப் போதித்தது. (௩௰.) குருடர் இரண்டுபேருக்குப் பார்வையைக்கொடுத்தது.]

அதெப்படியெனிற் பரலோக இராச் 1
சியத்தின் (ஆளுகை) ஒரு வீட்டெசமா
னுடைய (நடக்கைக்) கொப்பாயிருக்கின்
றது: அவன் தன் திராட்சத்தோட்டத்தி
லே வேலைசெய்யக் கூலிக்காரரை அழை
த்துக்கொண்டு வரும்படிக்கு,—அதிகாலை 2
யிலே புறப்பட்டுச் சில கூலிக்காரரைக் க
ண்டு நாளொன்றுக்கொருபணங் கூலிதீர்
மானம்பண்ணி அவர்களைத் தன் திராட்ச
த் தோட்டத்திற்கனுப்பி வந்தான்.—மூ 3
ன்றுமணிவேளையிலேயும் அவன் புறப்
பட்டுக் கடைத்தெருவிலே வீணராய் நி
ற்கிற வேறுசிலரைக் கண்டு,—நீங்களுந் தி 4
ராட்சத்தோட்டத்திற் போங்கள். நியாய
மானபடி உங்களுக்குக் கூலிதருவேனெ

ன்று அவர்களுக்குச் சொன்னான், அவர்க
5 ள் போனார்கள்.—ஆறும் ஒன்பதாம் ம
ணிவேளைகளிலே அவன் திரும்பப் புறப்
பட்டு அப்படிப்போலச் செய்தான்.—
6 பின்பு பதினொராம் மணிவேளையிலே அவ
ன் புறப்பட்டு வீணராய் நிற்கிற வேறே
சிலரைக் கண்டு பகல் முழுவதும் நீங்க
ள் இங்கே ஏன் வீணராய் நிற்கிறீர்களெ
7 ன்று கேட்டான்?—அவர்கள் ஒருவரும்
எங்களை வேலைகொள்ளவில்லையென்றார்க
ள். அவன் சொன்னது நீங்களுந் திராட்
சத் தோட்டத்திற்குப் போங்கள் நியாய
மானபடி கூலியை வாங்கிக்கொள்வீர்கள்
8 என்றான்.—அஸ்தமனமானபொழுது தி
ராட்சத்தோட்டத்திற் கெசமானானவன்
தன் காரியக்காரனுடனே சொன்னது,
நீ கூலிக்காரரையழைத்துப் பின்பு வந்த
வர்களைத்தொடங்கி முன்பு வந்தவர்கள்வ
9 ரைக்குங் கூலியைக்கொடு என்றான்.—அ
ந்தப்படி பதினொராம் மணிவேளையில்
வேலைகொள்ளப்பட்டவர்கள் வந்து ஆ
ளுக்கு ஒவ்வொருபணமாகப் பணத்தை
10 வாங்கிக்கொண்டார்கள்.—காலையில் வே

லைக்குவந்தவர்களுஞ் சேர்ந்து தங்களுக்
கு அதிக கூலி வருமென்றெண்ணினார்
கள்? அவர்களும் ஆளுக்கு ஒவ்வொருப
ணமாகப் பணத்தைவாங்கினார்கள்.—அ 11
தை வாங்குகிறபொழுது அவர்கள் வீட்
டெசமானை நோக்கி,-பின்னேவந்த இவ 12
ர்கள் ஒருமணிநேரமாத்திரம் வேலைசெ
ய்தார்கள். இவர்களைப் பகலின் பாரத்தை
யும் வெயிலையும் சுமந்த எங்களுக்குச் ச
மனாக்கினீரென்று மொறுமொறுத்தார்
கள்.—அவர்களில் ஒருவனுக்கு மாறுத்த 13
ரமாக அவன்சொன்னதாவது, சிநேகித
னே நான் உனக்கு அநியாயஞ்செய்யவி
ல்லை. நீ ஒருபணங் கூலிக்காக என்னோ
டே சம்மதிக்கவில்லையோ?-உன்னுடைய 14
தை நீ வாங்கிக்கொண்டுபோ நான் உனக்
குக்கொடுத்ததுபோலப் பின்னேவந்த இ
வனுக்குங்கொடுக்க மனதாயிருக்கிறேன்.
-என்னுடையதை நான் என் இஷ்டப்ப 15
டியே செய்யக்கூடாதா? நான் தயவாயி
ருக்கிறபடியினாலேயோ நீ வன்கண்ணாயி
ருக்கிறாயென்றான்.—இவ்விதமாகப் பிந் 16
தினோர் முந்தினோராயிருப்பார்கள் முந்

திஞேர் பிந்திஞேராயிருப்பார்கள். மேலும் அழைக்கப்பட்டவர்கள் அநேகர் தெரிந்துகொள்ளப்பட்டவர்களோ சிலர்மாத்திரமிருக்கிறூர்களென்ருர்.

17 இயேசுவானவர் எருசலேம் பட்டினத்திற்குப் பிரயாணமாய்ப் போகிறபொழுது வழியிலே அவர் பன்னிரண்டு சீஷரை மாத்திரம் அழைத்து அவர்களுட

18 னே சொன்னதாவது,— இதோ, எருசலேமுக்குப்போகிறேரும், அங்கே மனிதனுடைய குமாரன் பிரதான ஆசாரியருக்கும் வேதபாரகருக்கும் ஒப்புக்கொடுக்கப்படுவான். அவர்கள் அவனை மரணத்திற்குள்ளாக்கும்படி தீர்ப்புக்கொடுத்து,

19 —அவனைப் பரிகாசம்பண்ணவும் வாரிஞல் அடிக்கவுஞ் சிலுவைமரத்தில் அறையவும் புறத்தேசத்தாருக்கு ஒப்புக்கொடுப்பார்கள். பின்பு மூன்ருநாளிலே அவன் உயிரோடெழுந்திருப்பானென்ருர்.

20 அக்காலத்திலே செபேதேயுவின் குமாரருடைய தாய் தன் குமாரரோடேகூட அவரிடத்தில் வந்து சாஷ்டாங்கமாய் வணங்கி ஒரு விண்ணப்பம்பண்

ணவிரும்பினாள்.— அவர் உனக்கென்ன 21
வேண்டுமென்றார். அவள் அவருடனே
சொன்னதாவது, நீர் இராச்சியபரிபால
னஞ்செய்யும்பொழுது என் குமாரராகி
ய இவ்விரண்டுபேரில் ஒருவன் உமது வ
லப்பாரிசமாகவும் ஒருவன் உம்முடைய
இடப்பாரிசமாகவும் இருக்கும்படி செ
ய்யவேண்டுமென்றாள்.—அதற்கு இயே 22
சுவானவர் சொன்னது, நீங்கள் கேட்
டது உங்களுக்குத்தானே தெரியவில்
லெ. நான் குடிக்கும் பாத்திரத்தில் நீங்க
ள் குடிப்பீர்களா? நான் பெற்றுக்கொள்
ளும் ஸ்நானத்தை நீங்கள் பெற்றுக்கொ
ள்வீர்களாவென்றார். அவர்கள் அப்படி
யேசெய்வோமென்றார்கள்.- அப்பொழு 23
து அவர் சொன்னது என் பாத்திரத்தி
ற் குடிப்பீர்கள். நான் பெற்றுக்கொள்ளு
ம் ஸ்நானத்தையும் பெற்றுக்கொள்வீர்க
ள் அது மெய்தான். ஆனாலும் என் பிதா
விஞலே எவர்கள் குறிக்கப்பட்டிருக்கிறா
ர்களோ அவர்களுக்கேயன்றி (மற்றொரு
வருக்கும்) என் வலதுபாரிசத்திலேயும்
என் இடதுபாரிசத்திலேயும் உளுக்கார்க்

திருக்கிற (சனத்தை) நான் கொடுக்கக்கூ
24 டாதென்றார்.— மற்றப் பத்துப்பேரு
ம் (அந்தச் சங்கதியைக்) கேட்டு அந்தச்
சகோதரர் இருவரைக் குறித்து விசனப்
25 பட்டார்கள்.—அப்பொழுது இயேசுவா
னவர் அவர்களை அழைத்துச் சொன்ன
தாவது, உலகத்தாருக்குள்ளே பிரபுக்கள்
குடிகளை (இறுமாப்பாய்)ஆளுகிறார்கள்.
அல்லாமலும் பெரியோர்கள் அவர்கள்
மேற்(கண்டிப்பான)அதிகாரத்தைச் செ
லுத்துகிறார்களென்று நீங்கள் அறிந்திரு
26 க்கிறீர்கள்.— உங்களுக்குள்ளே அப்படி
யிருக்கக்கூடாது. உங்களில் எவனாகிலு
ம் பெரியவனாயிருக்கவேண்டுமென்றிரு
ந்தால் அவன் உங்கள் ஊழியகாரனாயிரு
27 க்கக்கடவன்.-உங்களில் எவனாகிலும் மு
தலாளியாயிருக்க வேண்டுமென்றிருந்தா
ல் அவன் உங்கள் பணிவிடைகாரனாயிரு
28 க்கக்கடவன்.—மனிதனுடைய குமாரனு
ம் ஊழியங்கொள்ளும்படிக்கு வராமல்
ஊழியஞ் செய்யும்படிக்கும் அநேகரை
மீட்கும்பொருளாகத் தனது சீவனைத் த
29 ரும்படிக்கும் வந்தானேயென்றார். - அ

வர்கள் யெரிகொபட்டினத்திலிருந்துபு றப்பட்டுப்போகையில், அநேக சனங்க ள் அவர் பின்சென்றார்கள்.

அப்பொழுது குருடரான இரண்டு 30 பேர் வழியருகே உளுக்கார்ந்திருந்து இ யேசுவானவர் வழியே வருகிறாரென்று கேள்விப்பட்டு ஆண்டவரே, தாவீதின் குமாரனே எங்களுக்கிரங்குமென்று கூ ப்பிட்டார்கள்.— சனங்கள் (அதைக் கே 31 ட்டு) அவர்கள் பேசாமலிருக்கும்படி அ வர்களை அதட்டினார்கள். அவர்களோ ஆ ண்டவரே! தாவீதின் குமாரனே, எங்களு க்கு இரங்குமென்று அதிகமாய்க் கூப் பிட்டார்கள்.—அப்பொழுது இயேசுவா 32 னவர் நின்று அவர்களை அழைத்து நா ன் உங்களுக்கு என்னசெய்யவேண்டுமெ ன்றிருக்கிறீர்களென்றார்.- அவர்கள் சொ 33 ன்னது ஆண்டவரே, எங்கள் கண்களைத் திறக்கவேண்டுமென்றிருக்கிறோமென்றா ர்கள்.—இயேசுவானவர் உருக்கமாயிரங் 34 கி அவர்களுடைய கண்களைத் தொட்டா ர். உடனே அவர்கள் பார்வையடைந்து அவர் பின்னே சென்றார்கள்.

## உக. அதிகாரம்.

[(க.) இயேசுவானவர் ஒரு கழுதையின்மேல் ஏறி எருசலேமிற்பிரவேசித்தது. (யஉ.) தேவாலயத்தில் இருந்த வியாபாரிகளைத் துரத்தினது. (ய൭.) அத்திமரத்தைச் சபித்தது, (உய.) தமது அதிகாரத்தைக் குறித்து ஆசாரியர் முதலானவர்களுக்கு உத்தரவு சொன்னது. (உஅ) இரண்டு குமாரரை உவமையாய்க் காட்டியது. (௩௩.) எசமானுடைய ஊழியக்காரரைக் கொலைசெய்த தோட்டக்காரரை உவமையாய்க் காட்டியது.]

1. அவர்கள் எருசலேம் பட்டினத்திற்குச் சமீபமாய் ஒலிவமலையின் அருகே இருக்கிற பெத்துபாகே ஊருக்கு வந்தபொழுது இயேசுவானவர் இரண்டு சீஷ
2 ரை நோக்கி,—உங்களுக்கு எதிராயிருக்கிற அந்தக் கிராமத்திலே போங்கள், அங்கே நீங்கள் (போன) உடனே கட்டப்பட்டிருக்கிற ஒரு கழுதையையும் அதினோடேகூட ஒரு குட்டியையுங் காண்பீ
3 ர்கள்.-அவைகளின் கட்டவிழ்த்து எனக்காகக் கொண்டுவாருங்கள், ஒருவன் உங்களுக்கு ஏதாகிலுஞ் சொன்னால் ஆண்ட

வருக்கு இவைகள் வேண்டுமென்று சொ
ல்லுங்கள். உடனே அவன் அவைகளை
அனுப்பிவிடுவானென்று சொல்லியனுப்
பினார்.—(சீயோன் குமாரத்தி என்னும் 4
எருசலேம் பட்டிணமே) இதோ, உன் இ
ராசா மனத்தாழ்மையுள்ளவருமாய் நுக
த்தடிக்குக் கீழ்ப்பட்ட கழுதையின் கு
ட்டியாகிய கழுதையின்மேல் ஏறியிருக்கி
றவருமாய் உன்னிடத்தில் வருகிறாரென்
று சீயோன் குமாரத்தியுடனே சொல்லு
ங்களென்று,—தீர்க்கதரிசியினாலே சொ 5
ல்லப்பட்டது நிறைவேறும்படிக்கு அ
வையெல்லாம் நடந்தன.—இயேசுவான 6
வர் சட்டளையிட்டபடி செய்யச் சீஷர்க
ள்போய்,—கழுதையையும் அதின் குட் 7
டியையுங்கொண்டுவந்து பின்பு தங்கள் வ
ஸ்திரங்களை அவைகளின் மேற்போட்டு
அவரை அவைகளின்மேல் ஏற்றிப்போனா
ர்கள்.—திரளான சனங்களோ தங்கள் வ 8
ஸ்திரங்களை வழியிலே விரித்தார்கள். வே
று சிலர் மரங்களின் கிளைகளைத் தறித்து
வழியிலே தெளித்தார்கள்.—மேலும் மு 9
ன்நடப்பாரும் பின்நடப்பாருமாகிய ச

னங்கள் தாவீதின் குமாரனுக்கு ஓசன்னா*
பராபரனுடைய நாமத்தினாலே வருகி
றவர் தோத்திரிக்கப்படத்தக்கவர். உ
ன்னதமான வானங்களில் ஓசன்னாவென்
10 று ஆர்ப்பரித்தார்கள்.— அப்படி அவர்
எருசலேம் பட்டணத்திற் பிரவேசிக்கை
யிற் பட்டினத்தாரெல்லாருங் கலக்கம
டைந்து இவர் ஆரென்று விசாரித்தார்க
11 ள். —சனங்கள் சொன்னது, இவர் கலி
லேயா நாட்டிலுள்ள நாசரேத்தூரில் இ
ருந்து வந்த தீர்க்கதரிசியாகிய இயேசு எ
ன்றார்கள்.

12 இயேசுவானவர் தேவாலயத்திற் பிர
வேசித்து அதிலே விற்கிறவர்களுங் கொ
ள்ளுகிறவர்களுமாகிய யாவையும் வெளி
யே துரத்திக் காசுக்காரருடைய பலகை
களையும் புறாக்களை விற்கிறவர்களுடைய
ஆசனத்தையுங் கவிழ்த்துப்போட்டு,—
13 என்னுடைய ஆலயஞ் செபத்துக்கான ஆ
லயமென்னப்படுமென்று எழுதியிருக்கி
றது. நீங்களோ அதைக் கள்வர்குகை

* ஓசன்னாவென்பதற்கு இப்பொழுது இரட்ச
ண்ணியத்தைச்செய்வீராக என்பது அருத்தமாம்.

யாக்கினீர்களென்று அவர்களுடனேசொ
ன்னார்.— அல்லாமலுங் குருடருஞ் சப் 14
பாணிகளுந் தேவாலயத்தில் அவரிடத்தி
ற்கு வந்தபோது அவர்களைக்குணமாக்கி
னார்.-அவர்செய்த அதிசயங்களையுந் தா 15
வீதின் குமாரனுக்கு ஓசன்னாவென்று தே
வாலயத்திற் கூப்பிடுகிற பிள்ளைகளையும்,
பிரதான ஆசாரியரும் வேதபாரகருங் க
ண்டு மிகுந்த விசனம் அடைந்து,—அவ 16
ரை நோக்கி, இவர்கள் சொல்லுகிறதை
க் கேட்கிறீரோ என்றார்கள். அதற்கு இ
யேசுவானவர் சொன்னதாவது, கேட்கி
றேன். குழந்தைகள் பாலகருடைய வாயி
னால் துதியை உண்டுபண்ணினீர் என்கிற
தை நீங்கள் ஒருக்காலும் வாசிக்கவில்லை
யோஎன்று சொல்லி,

அவர்களை விட்டுப் பட்டினத்தில் இ 17
ருந்து புறப்பட்டுப் பெத்தானிஊருக்கு
ப்போய் அங்கே இராத்திரி தங்கினார்.—
காலையிலே அவர் மறுபடியும் பட்டின 18
த்துக்குப் போகையில் அவருக்குப் பசி
யுண்டானபொழுது,- வழியருகே ஒரு 19
அத்தி மரத்தை அவர் கண்டு அதினிடத்

திற் போய் அதிலே இலைகளேயன்றிக் க
னிகளைக் காணாமல் இருக்கிறபொழுது அ
வர் அதை நோக்கி, இனிமேலொருக்கா
லும் உன்னிற் கனியுண்டாகாதிருக்கக்கட
வதென்று சொன்னார். உடனே அத்தி
20 மரம் பட்டுப்போயிற்று.—சீஷர்கள் அ
தைக் கண்டு ஐயோ! இந்த அத்திமரம்
எப்படிச் சீக்கிரமாய்ப் பட்டுப்போயிற்
றென்று ஆச்சரியத்தோடே சொன்னார்
21 கள்.— இயேசுவானவர் அவர்களுக்குச்
சொன்னது, நீங்கள் சந்தேகப்படாமல்
விசுவாசித்தால் இந்த அத்தி மரத்திற் சம்
பவித்ததை நீங்கள் செய்வதுமல்லாமல்,
நீங்கள் இந்த மலையை நோக்கி எழும்பிச்
சமுத்திரத்திலே தள்ளப்படுவாயாகவெ
ன்று சொன்னால் உடனே அப்படியாகு
மென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்
22 லுகிறேன்.- அல்லாமலும் செபத்திலே நீ
ங்கள் எதைக் கேட்டாலும் விசுவாசித்தீ
ர்களானால் அதைப்பெறுவீர்களென்றார்.
23 அவர் தேவாலயத்தில் வந்து உபதேச
ம்பண்ணுகிறபொழுது பிரதான ஆசாரி
யருஞ் சனங்களின் மூப்பரும் அவரிடத்

தில் வந்து எந்த அதிகாரத்தினாலே நீர் இவைகளைச்செய்கிறீர். இப்படிப்பட்ட அதிகாரத்தை உமக்குக்கொடுத்தவர்யாரென்றார்கள்.—அதற்கு இயேசுவானவர் 24 சொன்னது, நானும் உங்களிடத்தில் ஒரு காரியத்தைக் கேட்பேன். அதை நீங்கள் எனக்குச் சொன்னீர்களானால் நான் இவைகளைச்செய்கிற அதிகாரமின்னதென்று நானும் உங்களுக்குச் சொல்லுவேன். —யோவான் கொடுத்த ஞானஸ்நானம் 25 ஆராலுண்டாயிருந்தது. பராபரனாலோ மனிதராலோ அதைச் சொல்லுங்களென்றார். அவர்களோ அது பராபரனாலுண்டாயிற்றென்றோமானால் இவர் ஏன் அவனை விசுவாசிக்கவில்லையென்பார்.—அது 26 மனிதராலுண்டாயிற்றென்றோமாகிற் சனங்கள் எல்லாரும் யோவானைத் தீர்க்கதரிசியென்றெண்ணுகிறபடியினாலே அவர்களுக்குப் பயப்படுகிறோமென்று தங்களுக்குள்ளே யோசனைபண்ணி,—பின்பு 27 இயேசுவானவரை நோக்கி எங்களுக்குத் தெரியாதென்றார்கள். அப்பொழுது அவரும் அவர்களுடனே சொன்னது நான்

இவைகளைச் செய்கிற அதிகாரம் இன்ன
தென்று நானும் உங்களுக்குச் சொல்ல
மாட்டேன்.
28 ஆகிலும் உங்களுக்கெப்படித் தோன்
29 றுகின்றது.— ஒரு மனிதனுக்கு இரண்டு
குமாரருண்டு. அவர்களில் மூத்தவனிட
த்தில் அவன் வந்து மகனே, நீ இன்றை
க்கென் திராட்சத் தோட்டத்திற் போ
30 ய் வேலைசெய் என்றான்.—அதற்கவன்
போகமாட்டேனென்றான். பின்பு அவன்
31 மனஸ்தாபப்பட்டுப் போனான்.—தகப்
பன் இளையவனிடத்திலும் வந்து அப்ப
டித்தானே சொன்னான். அதற்கவன் ஐ
யா, உடனே போகிறேனென்று சொல்
32 லியும் போகவில்லை.— இவ்விருவரில் எவ
ன் தகப்பனுடைய சித்தத்தின்படி செய்
தானென்று அவர் கேட்டபொழுது மூ
த்தவனே செய்தானென்றார்கள். அப்
பொழுது இயேசுவானவர் அவர்களுக்கு
ச் சொன்னதாவது, ஆயக்காரரும் வேசி
களும் உங்களுக்கு முன்னே பராபரனு
டைய இராச்சியத்திலே பிரவேசிக்கிறார்
களென்று மெய்யாகவே உங்களுக்குச்

சொல்லுகிறேன். — எப்படியென்றால் 32
யோவான் நீதிமார்க்கமாய் உங்களிடத்தில்
வந்தும், நீங்கள் அவனை விசுவாசிக்கவில்
லை. ஆயக்காரரும் வேசிகளுமோ அவ
னை விசுவாசித்தார்கள். அதை நீங்கள் க
ண்டும் பின்பு அவனை விசுவாசிக்கும்படி
க்கு மனஸ்தாபப்படாமலிருக்கிறீர்கள்.

வேறு உவமையைக் கேளுங்கள், ஒரு 33
வீட்டெசமானுண்டு அவன் ஒரு திரா
ட்சத்தோட்டத்தை யுண்டாக்கி அதைச்
சுற்றி வேலியடைத்து அதில் ஆலையைநா
ட்டிக் கோபுரத்தையுங் கட்டிப் பின்பு
அதைத் தோட்டக்காரர் வசமாய் விட்டு
ப் புறத்தேசத்துக்குப் போனான்.—கனி 34
காலஞ் சமீபமானபொழுது கனிகளைவா
ங்கிக்கொண்டு வரும்படிக்குத் தன் ஊ
ழியக்காரரைத் தோட்டக்காரரிடத்தில்
அனுப்பினான்.—தோட்டக்காரரோ அவ 35
ன் ஊழியக்காரரைப் பிடித்து ஒருவனை
அடித்து ஒருவனை வெட்டி மற்றொருவ
ன்மேற் கல்லெறிந்து கொன்றார்கள்.—
மறுபடியும் எசமான் முந்தினவர்களிலு 36
ம் அதிகமான வேறு ஊழியக்காரரை அ

னுப்பினான். அவர்களையும் அப்படிச்செ
37 ய்தார்கள்.—கடைசியிலே அவன் என்னு
டைய குமாரனுக்கு அஞ்சுவார்களென்
றெண்ணித் தன் குமாரனை அவர்களிடத்
38 தில் அனுப்பினான்.— தோட்டக்காரரோ
குமாரனைக் கண்டபொழுது இவன் சுதந்
தரவாளி, இவனைக்கொன்று இவனுடை
ய சுதந்தரத்தைக் கட்டிக்கொள்வோம்
வாருங்களென்று தங்களுக்குள்ளே சொ
39 ல்லிக்கொண்டு,— அவனைப் பிடித்துத்
திராட்சத் தோட்டத்திற்குப் புறம்
40 பே தள்ளிக்கொலைசெய்தார்கள்.-ஆகை
யால் திராட்சத் தோட்டத்திற்கு எச
மான் வரும் பொழுது அந்தத் தோ
ட்டக்காரரை என்ன செய்வானென்று
41 கேட்டார்.—அதற்கு அவர் சொன்னது
அவன் அந்தப் பொல்லாதவர்களைக்கடின
மாய் அழித்துத் தகுதியான காலங்களி
லே தனக்குக் கனிகளைக் கொடுக்கும். வே
றே தோட்டக்காரர் வசமாய்த் திராட்ச
த்தோட்டத்தை விடுவானென்றார்கள்.—
42 இயேசுவானவர் அவர்களுக்குச்சொன்ன
தாவது, வீடுகட்டுகிறவர்கள் ஆகாதென்

று தள்ளின கல்லே மூலைக்குத் தலையான
கல்லாயிற்று. அது பராபரனாலே ஆயிற்
று. அது நம்முடைய கண்களுக்கு ஆச்சரி
யமாயிருக்கின்றதென்று வேதத்திலே நீங்
கள் ஒருக்காலும் வாசித்ததில்லையா! — அ 43
ப்படியிருக்கப் பராபரனுடைய இராச்சி
யம் உங்களிலிருந்து நீக்கப்பட்டு அதின்
கனிகளைத் தருகிற சனங்களுக்குக் கொ
டுக்கப்படுமென்று உங்களுக்குச் சொல்
லுகிறேன். — அன்றியும் இந்தக் கல்லின் 44
மேல் விழுகிறவன் நொருக்கப்படுவான்.
இதுவோ எவன்மேல் விழுமோ அவனை
நருங்கடிக்குமென்றார். — பிரதான ஆசா 45
ரியரும் பரிசேயரும் அவருடைய உவ
மைகளைக் கேட்டுத் தங்களைக் குறித்துப்
பேசினாரென்று அறிந்து, — அவரைப் பி 46
டிக்க மனதாயிருந்தார்கள். ஆகிலுஞ் ச
னங்கள் அவரைத் தீர்க்கதரிசியென்றெண்
ணினபடியினாலே அவர்கள் சனங்களுக்
குப் பயந்து (அப்படிச் செய்யாமலிருந்
தார்கள்.)

## உஉ. அதிகாரம்.

[(க.) தன் குமாரனுக்குக் கலியாணம்பண்ணின இராசாவைக் காட்டிய உவமை. (யரு) இராசாவுக்குத் தீர்வைகொடுக்கவேண்டுமென்பது. (உக) உயிரோடெழும்புதலைக் குறித்துச் சதுசேயருக்குப் புத்திசொன்னது. (கச) பிரதான கற்பனையைக் குறித்து வேத சாஸ்திரிக்கு உத்தரவு சொன்னது. (சக) மேசியாவைக் குறித்துப் பரிசேயரிடத்தில் விசாரித்தது.]

1 இயேசுவானவர் மறுபடியும் உவமைகளாய் அவர்களுடனே சொன்னதாவது 2 —பரலோக இராச்சியத்தின் (ஆளுகை) தன் குமாரனுக்குக் கலியாணஞ்செய்த இராசனுடைய (நடக்கைக்) கொப்பாயி 3 ருக்கின்றது.— அழைக்கப்பட்டவர்களைக் கலியாணத்திற்கு வரச்சொல்லும்படிக்கு அவன் தன் ஊழியக்காரரை அனுப்பினான். அவர்களோ வரமாட்டோமெ 4 ன்றார்கள்.—மறுபடியும் அவன் வேறே ஊழியக்காரரை நோக்கி அழைக்கப்பட்டவர்களிடத்திற்கு நீங்கள் போய் என் விருந்தை எத்தனம்பண்ணினேன். என் எருதுகளுங் கொழுத்த செந்துக்களும் அடிக்கப்பட்டன. எல்லாம் எத்தனமா

யிருக்கின்றது. கலியாணத்திற்கு வாருங்க
ளென்று அனுப்பினான்.— அவர்களோ 5
அதை யெண்ணாமல் ஒருவன் தன் வயலு
க்கும் ஒருவன் தன் வியாபாரத்திற்கும்
போய்விட்டார்கள்.-மற்றவர்களோ அவ 6
னுடைய ஊழியக்காரரைப்பிடித்து நிந்
தித்துக் கொலைசெய்தார்கள்.— இராசா 7
அதைக்கேட்டுக்கோபமடைந்து தன்சே
னைகளை அனுப்பி (அவர்களால்) அந்தக்
கொலைபாதகரை அழித்து அவர்களுடை
ய பட்டினத்தையுஞ் சுட்டெரித்தான்.-
அப்பொழுது அவன் தன் ஊழியக்கார 8
ரை நோக்கிக் கலியாணவிருந்து எத்தன
மாயிருக்கின்றது. அழைக்கப்பட்டவர்க
ளோ அதற்குப் பாத்திரரல்லாதிருந்தார்க
ள்.—ஆகையால் நீங்கள் வழிச்சந்திகளிற் 9
போய் அகப்படுகிற யாவரையுங் கலியா
ண விருந்துக்கு அழைத்துவாருங்களென்
றான்.-அந்த ஊழியகாரர் வழிகளிற் புற 10
ப்பட்டுப்போய் அகப்பட்ட பொல்லாத
வர்களையும்நல்லவர்களையுங் கூட்டிவந்தா
ர்கள். விருந்துசாலை பந்தியிருக்கிறவர்க
ளால் நிறைந்தது.—பின்பு பந்தியிருக்கி 11

றவர்களைப் பார்க்கும்படிக்கு இராசா பி
ரவேசித்தபொழுது கலியாணவஸ்திரத்
தைத் தரித்திராத ஒருவனை அங்கே கண்
12 டு,—சிநேகிதனே, நீ கலியாணவஸ்திரமி
ல்லாதவனாய் இங்கே எப்படிப் பிரவேசி
த்தாயென்று சொன்னபொழுது அவன்
13 பேசாமலிருந்தான்.—அப்பொழுது இ
ராசா ஊழியக்காரரை நோக்கி, இவனு
டைய கால்களையுங் கைகளையுங் கட்டி இ
வனையெடுத்துப்போய் அழுகையும் பற்
கடிப்புமுண்டாயிருக்கிற மிகுந்த இருளி
லே போடுங்களென்று கட்டளையிட்டா
14 ன்.—அந்தப்படியே அநேகர் அழைக்க
ப்பட்டிருக்கிறார்கள். சிலர்மாத்திரந் தெ
ரிந்துகொள்ளப்பட்டிருக்கிறார்கள் என்
15 றார்.—அப்பொழுது பரிசேயர் போய்
வசனங்களில் அவரை அகப்படுத்தும்ப
16 டிக்கு யோசனைபண்ணி,—தங்கள் சீஷர்
களையும் ஏரோதேயின் மனிதர்களையும்
அவரிடத்திற்கு அனுப்பினார்கள். (அவ
ர்கள் வந்து) போதகரே, நீர் சத்தியமு
ள்ளவருமாய்ப் பராபரனுடைய மார்
க்கத்தைச் சத்தியமாய்ப் போதிக்கிறவரு

மாய் மனிதருடைய முகத்தைப் பாராம
லிருக்கிறபடியால் ஒருவரையுங் குறித்து
க் கவலையில்லாதவருமாயிருக்கிறீரென்
று அறிந்திருக்கிறோம்.—ஆதலால் உமக் 17
கெப்படித் தோன்றுகின்றது. இராயனு
க்கு வரிகொடுக்கிறது நியாயமாயிருக்கி
ன்றதோ இல்லையோ அதை யெங்களுக்கு
ச் சொல்லவேண்டுமென்றார்கள்.- இயே 18
சுவானவர் அவர்களுடைய துற்குணத்
தை அறிந்து வஞ்சகரே, நீங்களென்னை
என் சோதிக்கிறீர்கள்?—வரிக் காசை என் 19
க்குக் காண்பியுங்களென்றார். அவர்கள்
ஒருதெனாரியப் பணத்தை அவருக்குக்
கொடுத்தார்கள்.—அப்பொழுது அவர் 20
சொன்னது, இந்தச் சொரூபமும் மே
லெழுத்தும் ஆருடையதென்றார். இது
இராயனுடையதென்றார்கள்.-அவர் சொ 21
ன்னது, அப்படியானால் இராயனுடைய
தை இராயனுக்கும் பராபரனுடையதை
யோ பராபரனுக்குஞ் செலுத்துங்களெ
ன்றார்.—அவர்கள் அதைக் கேட்டு ஆச்ச 22
ரியப்பட்டு அவரைவிட்டுப் போனார்கள்.
உயிரோடெழுந்திருக்கும் மறுமை இ 23

ல்லையென்று சொல்லுகிற சதுசேயர் அ
24 ந்நாளிலே அவரிடத்தில் வந்து,—போ
தகரே, புருஷனொருவன் பிள்ளைகளில்
லாமல் இறந்துபோனால் அவனுடைய ச
கோதரன் அவனுக்குச் சந்ததியுண்டாகு
ம்படிக்கு அவனுடைய மனைவியை விவா
கம்பண்ணவேண்டுமென்று மோசேசொ
25 ன்னாரே.—அப்படியானால் எங்களிடத்தி
ற் சகோதரர் எழுபேர் இருந்தார்கள். அ
வர்களில் மூத்தவன் விவாகம்பண்ணிச் ச
ந்ததியில்லாமல் மரித்துத் தன் மனைவி
யைத் தன் சகோதரனுக்குவிட்டான். —
26 இப்படி இரண்டாஞ் சகோதரன்முதல் எ
ழாஞ் சகோதரன் வரைக்கும் (அவளையே
விவாகம்பண்ணிப் பிள்ளையில்லாமல் மரி
27 த்தார்கள்).—எல்லாருக்கும் பின்பு அந்த
28 ப்பெண்ணும் இறந்துபோனாள்.— அப்
படி அவ்வேழுபேரும் அவளை விவாகம்
பண்ணினபடியால், உயிரோடெழுந்திரு
க்குங் காலத்திலே அவள் அவர்களில் எ
வனுக்கு மனைவியாயிருப்பாளென்று கே
29 ட்டார்கள்.-இயேசுவானவர் அவர்களுக்
கு மாறுத்தரமாகச் சொன்னதாவது, வே

த எழுத்துக்களையும் பராபரனுடைய ப லத்தையும் நீங்கள் அறியாதிருக்கிறபடி யால் தப்பாய் நினைத்திருக்கிறீர்கள்.- ம 30 றுமையிலே பெண்கொள்வதுங் கொடு பதுமிராது. அவர்கள் பரலோகத்திலே பராபரனுடைய தூதரைப்போல் இருக் கிறார்கள்.—மரித்தோர் உயிரோடெழுந் 31 திருக்குதலைக் குறித்தோவெனில்,நான் ஆ பிரகாமுடைய தேவனுமாய் ஈசாக்கினு டைய தேவனுமாய் யாக்கோபினுடைய தேவனுமாயிருக்கிறேனென்று,-பராபர 32 னால் உங்களுக்கு உரைக்கப்பட்டதைநீங்க ள் வாசிக்கவில்லையோ? அவர் மரித்தோ ருடைய தேவனாயிராமற் சீவனுள்ளோ ருடையதேவனாகவே இருக்கிறாரென்றார். —சனங்கள் அவருடைய உபதேசத்தை 33 க் கேட்டு அதைக் குறித்துப் பிரமித்து க்கொண்டார்கள்.

அவர் சதுசேயர் பேசாமலிருக்கும்ப 34 டிசெய்ததைப் பரிசேயர் கேட்டு அவரி டத்திற் கூடிவந்தார்கள்.—அவர்களில் நி 35 யாயசாஸ்திரி ஒருவன் அவரைச் சோதிக் கும்படிக்கு,-போதகரே, வேதத்தில் எ

து பிரதானமான கற்பனையாய் இருக்கி
36 ன்றதென்று கேட்டான்.—இயேசுவான
வர் சொன்னது, உன் தேவனாகிய பராப
ரனில் உன் முழு இருதயத்தோடும் உ
ன் முழு ஆத்துமாவோடும் உன் முழு
37 மனதோடும் அன்புகூர்வாயாக.—என்ப
து முதலாவது பிரதானமான கற்பனை
38 யாயிருக்கின்றது.—அதற்கொப்பாயிருக்
கிற இரண்டாங் கற்பனையென்னவென்
றால், பிறனிடத்தில் உன்னைப்போல அன்
39 புகூர்வாயாக என்பதே.— இவ்விரண்டு
கற்பனைகளில் நியாயப்பிரமானமுழுமை
யுந் தீர்க்கதரிசனங்களும் அடங்கியிருக்கி
ன்றனவென்றார்.

40 மேலும் பரிசேயர் கூடியிருக்கையில்
41 இயேசுவானவர் அவர்களை நோக்கி,—கி
றிஸ்துவைக் குறித்து உங்களுக்கு எப்ப
டித் தோன்றுகின்றது. அவர் ஆருடை
ய குமாரனென்று கேட்டார்? அவர்கள்
42 தாவீதின் குமாரனென்றார்கள்.- இயேசு
வானவர் சொன்னது,அப்படியானால் நா
ன் உம்முடைய சத்துருக்களை உமது பா
தபடியாக்கிப்போகிறவரைக்கும் நீர் எ

ன்னுடைய வலது பாரிசத்திலே உளுக்காருமென்று பராபரன் என் கத்தருடனே சொன்னாரென்று,—தாவீது (பரிசுத்த) ஆவியினாலே சொல்லி, (இவ்விதமாய்) அவரைக் கத்தரென்று சொல்லியிருக்கிறதெப்படி?—தாவீது அவரைக் கத்தரென்று சொல்லியிருக்க, அவரெப்படி அவனுடைய குமாரனாய் இருப்பாரென்றார்.—அதற்கு மாறுத்தரமாக ஒருவனும் ஒருவார்த்தையையுஞ் சொல்லத் திராணியிருந்ததில்லை. அந்நாள் முதற்கொண்டு ஒருவரும் அவரிடத்தில் வினாக்களைக் கேட்கத் துணிந்ததுமில்லை. 43 44 45

---

## ௨௩. அதிகாரம்.

[(௧.) பரிசேயரைக்குறித்துச் சனங்களுக்குப் புத்திசொன்னது. (௰௩.) பரிசேயருக்கு எட்டுவகை வேதனைகளை அறிவித்தது. (௩௪.) எருசலேம் நகரம் அழிக்கப்படுமென்று முன் அறிவித்தது.

அப்பொழுது இயேசுவானவர் சனங்களுக்குந் தம்முடைய சீஷருக்குஞ் சொன்னதாவது,-வேதபாரகரும் பரிசேயரு 1

ம் மோசேயினுடைய ஆசனத்தில் இருக்
3 கிறவர்கள்.—ஆகையால் நீங்கள் கைக்கொ
ள்ளும்படிக்கு அவர்கள் உங்களுக்குச்
சொல்லுகிற யாவையுங் கைக்கொண்டு ந
டக்கக்கடவீர்கள், அவர்களுடைய கிரியை
களின்படியோ செய்யாமலிருங்கள். என்
னத்தினாலெனில் அவர்கள் சொல்லியுஞ்
4 செய்யாமலிருக்கிறார்கள்.- அல்லாமலும்
அவர்கள் பாரமாயுஞ் சுமப்பதற்கரிதாயு
மிருக்கிற சுமைகளைக் கட்டி மனிதருடை
ய தோட்களின்மேல் வைக்கிறார்கள்.
தாங்கள் தாமே அவைகளை ஒரு விரலி
னாலும் அசைக்க மனமில்லாமலிருக்கி
5 றார்கள்.—தங்கள் கிரியைகள் யாவையு
ம் அவர்கள் மனிதரால் காணப்படும்படி
க்குச் செய்கிறார்கள். கற்பனைகள் எழு
தியிருக்கிற நாடாக்களை அகலமாக்கித் த
ங்கள் வஸ்திரங்களின் தொங்கல்களை வி
6 ஸ்தாரம்பண்ணி,--விருந்துகளில் முதல்
இடத்திலிருக்கவும், செப ஆலயங்களில்
7 முதல் ஆசனங்களில் இருக்கவும்,--சந்
தைகளில் (மற்றவர்களால்) வாழ்த்துதல்
அடையவும், இரபீ, இரபீயென்றழைக்க

ப்படவும் விரும்புகிறார்கள்.-நீங்களோ இ 8
ரபீயென் றழைக்கப்படக்கூடாது. என்ன
த்தினாலெனிற் கிறிஸ்துவென்பவர் ஒரு
வரே உங்களுக்குக் குருவாயிருக்கிறார், நீ
ங்களெல்லாருஞ் சகோதரராயிருக்கிறீர்க
ள்.-மேலும் பரமண்டலத்திலிருக்கிறவர் 9
ஒருவரே உங்களுக்குப் பிதாவாயிருக்கிறா
ர், ஆகையால் நீங்கள் பூமியிலே ஒருவனை
யும் உங்கள் பிதாவென்றழைக்கக் கூடா
து.-அல்லாமலுங் கிறிஸ்துவென்பவர் ஒ 10
ருவரே உங்கள் குருவாயிருக்கிறார். ஆகை
யால் நீங்கள் உங்களைக் குருக்களென்று
அழைக்கப்படக்கூடாது.-தன்னைத்தான் 11
உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான். த
ன்னைத்தான் தாழ்த்துகிறவன் உயர்த்த
ப்படுவான்.-ஆதலால் உங்களிற்பெரியவ 12
ன் உங்கள் ஊழியக்காரனாயிருக்கக்கட
வன்.

வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசே 13
யரே, ஐயோ! உங்களுக்கு வேதனைவரு
ம் என்னத்தினாலென்றால் மனிதர்முன்பா
க நீங்கள் பரலோக இராச்சியத்தைப் பூ
ட்டிப்போடுகிறீர்கள், நீங்களே அதிற் பி

ரவேசிக்கிறதில்லை, பிரவேசிக்க மனதாயி
ருக்கிறவர்கள்பிரவேசியாதபடிக்குஞ்செ
14 ய்கிறீர்கள்.—வஞ்சகராகிய வேதபாரக
ரே, பரிசேயரே ஐயோ! உங்களுக்கு வே
தனை வரும், என்னத்தினாலென்றால் நீங்க
ள் விஸ்தாரமாய்ச் செப மந்திரங்களைச்
சொல்லுகிறோமென்று சொல்லிக் கைம்
பெண்களுடைய பொருள்களைப் பட்சி
க்கிறீர்கள். அதினிமித்தம் அதிக ஆக்கினை
15 உங்களுக்குக் கிடைக்கும்.—வஞ்சகராகி
ய வேதபாரகரே, பரிசேயரே ஐயோ!
உங்களுக்கு வேதனைவரும், என்னத்தினா
லெனில் ஒருவனை (யூத) மார்க்கத்தானாக்
கும்படிக்கு நீங்கள் சமுத்திரத்தையும் பூ
மியையுங் கடந்து திரிகிறீர்கள். அவன் அ
ப்படிப்பட்டவனானபொழுது நீங்கள் உ
ங்களைப் பார்க்கிலும் அவனை இரட்டிப்
பாய் நரகத்துக்குரியவனாக்குகிறீர்கள்.—
16 குருடராய்வழிகாட்டுகிறவர்களேஐயோ!
உங்களுக்கு வேதனைவரும், ஒருவன் தே
வாலயத்தின்மேற் சத்தியம்பண்ணினால்
அதுசெல்லாது ஒருவன் தேவாலயத்தி
லுள்ள பொன்மேற் சத்தியம்பண்ணினா

னாகில் அவன் அந்தப்படியே செய்யவே ண்டுமென்கிறீர்கள்.—மதிகேடரே, கு 17 ருடரே, எது பெரிது? பொன்னோ பொ ன்னைப் பரிசுத்தமாக்குகிற தேவாலய மோ?-அன்றியும் ஒருவன் பீடத்தின்மே 18 ற் சத்தியம்பண்ணினால் அதுசெல்லாது. ஒருவன் அதிலுள்ள காணிக்கையின்மேற் சத்தியம்பண்ணினானாகில் அவன் அதின் படியே செய்யவேண்டுமென்கிறீர்கள்- மதிகேடரே, குருடரே, எதுபெரிது? 19 காணிக்கையோ காணிக்கையைப் பரிசுத் தமாக்குகிற பீடமோ?—ஆகையாற் பீட 20 த்தின்மேற் சத்தியம்பண்ணுகிறவன் அதி ன்மேலும் அதிலிருக்கிற எல்லாப்பொரு ள்களின்மேலுஞ் சத்தியம்பண்ணுகிறான். -தேவாலயத்தின்மேற் சத்தியம்பண்ணு 21 கிறவன் அதின்மேலும் அதில் வாசமாயி ருக்கிறவர்மேலுஞ் சத்தியம்பண்ணுகிறா ன்.—அல்லாமலும் வானத்தின்மேற் சத் 22 தியம் பண்ணுகிறவன் பராபரனுடைய பத்திராசனத்தின்மேலும் அதில் வீற்றி ருக்கிறவர்மேலுஞ் சத்தியம்பண்ணுகிறா ன்.—வஞ்சகராகிய வேதபாரகரே, பரி 23

சேயரே, ஐயோ! உங்களுக்கு வேதனைவ
ரும். என்னத்திலெனில் நீங்கள் துளசி
யிலும், வெந்தயத்திலுஞ், சீரகத்திலும்
பத்தில் ஒருபாகத்தைக் கொடுத்து வே
தத்திற் (சொல்லியிருக்கிற) அதிக கனமா
ன காரியங்களாகிய நீதியையுந், இரக்கத்
தையும், உண்மையையும் விட்டுவிட்டீர்க
ள். இவைகளையே நீங்கள் நடப்பித்து அ
வைகளையும் விட்டுவிடாமலிருக்கவேண்டு
24 ம். - ஆ! குருடராய் வழிகாட்டுகிறவர்களே
கொசுகில்லாதபடிக்குத் (தண்ணீரை) வ
டிக்கட்டி ஒட்டகத்தையோ விழுங்குகிற
25 வர்களாயிருக்கிறீர்கள். — வஞ்சகராகிய
வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ! உ
ங்களுக்கு வேதனைவரும். என்னத்திலு
லெனிற் போசனபான பாத்திரங்களின்
வெளிப்புறத்தை நீங்கள் சுத்தஞ்செய்கி
றீர்கள். அவைகளினுள்ளோ கொள்ளை
26 யும் அநீதியும் நிறைந்திருக்கின்றது. - கு
ருடனான பரிசேயனே முதலாவது போ
சனபானபாத்திரங்களின் உள்ளத்தைச் சுத்
தம்பண்ணுவாயாக. அப்பொழுது அவை
களின் வெளிப்புறமுஞ் சுத்தமாயிருக்கும்

—வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசே 27
யரே, ஐயோ! உங்களுக்குவேதனைவரும்,
என்னத்தினாலெனில் நீங்கள் சாந்துபூசப்
பட்ட கல்லறைகளுக்கொப்பாயிருக்கிறீ
ர்கள், அவைகள் புறம்பே அலங்காரமா
யிருக்கின்றன, உள்ளேயோ மரித்தோரு
டைய எலும்புகளுஞ் சகலவிதமான அ
சுத்தமும் நிறைந்திருக்கின்றன.—அப்ப 28
டிப்போல நீங்களும் புறம்பே மனிதரு
க்கு நீதிமான்களென்று காணப்படுகிறீர்
கள். உங்கள் உள்ளத்திலோ வஞ்சகமும்
அக்கிரமமும் நிறைந்திருக்கின்றன.—வ 29
ஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே
ஐயோ! உங்களுக்கு வேதனைவரும். எ
ன்னத்தினாலெனில் நீங்கள் தீர்க்கதரிசிக
ளுடைய சமாதிகளைக் கட்டி நீதிமான்க
ளின் கல்லறைகளைச் சிங்காரித்து,—எங் 30
கள் பிதாக்களுடைய நாட்களில் இருந்
தோமானால் அவர்களோடே கூட நாங்க
ள் தீர்க்கதரிசிகளுடைய இரத்தத்தைச் சி
ந்தமாட்டோமென்கிறீர்கள்.— ஆகையா 31
ல் நீங்கள் தீர்க்கதரிசிகளைக் கொலைசெய்
தவர்களின் புத்திரரென்று உங்களைக்குறி

த்து நீங்கள்தாமே சாட்சிகொடுக்கிறீர்க
32 ள்.—அப்படியிருக்க நீங்கள் உங்கள் பி
தாக்களின் அக்கிரம அளவை நிரப்புங்க
33 ள்.—சர்ப்பங்களே, விரியன்பாம்புகளின்
(குட்டிகளே) நீங்கள் நரகாக்கினைக்கு எ
34 ப்படித் தப்பிப்போவீர்கள்!—ஆதலாற்
கேளுங்கள் நான் தீர்க்கதரிசிகளையும், ஞா
னிகளையும் வேதபாரகரையும் உங்களிட
த்திற்கு அனுப்புகிறேன். அவர்களிற் சி
லரை நீங்கள் கொன்று சிலுவைகளிலும்
அறைந்து சிலரை உங்கள் ஆலயங்களில்
வாரினால் அடித்து ஊரூருக்குந் துன்பப்
35 படுத்துவீர்கள்.—நீதிமானாகிய ஆபேலி
ன் இரத்தம்முதல் நீங்கள் தேவாலயத்து
க்கும் பீடத்துக்கும் நடுவே கொலைசெ
ய்த பரகியாவின் குமாரனாகிய சகரியாவி
ன் இரத்தம்வரைக்கும் பூமியிலே சிந்தப்
பட்ட நீதியான இரத்தமெல்லாம் உங்க
ள்மேல் வரும்படிக்கு (அப்படிச்செய்
36 வீர்கள்).—அவையெல்லாம் இந்தச் சந்
ததியின்மேலே வருமென்று மெய்யாய்
உங்களுக்குச் சொல்லுகிறேன்.

37 ஆ! எருசலேம்பட்டினத்தாரே, எரு

சலேம்பட்டினத்தாரே! உங்களிடத்தில் அனுப்பப்பட்டவர்கள்மேற் கல்லெறிந்து தீர்க்கதரிசிகளைக் கொலைசெய்கிறவர்களே கோழி தன் குஞ்சுகளைச் சிறகுகளின் கீழே கூட்டிச் சேர்த்துக்கொள்ளும் விதமாய் அநேகந்தரம் உங்களைக்கூட்டிச்சேர்த்துக்கொள்ள விரும்பினேன், நீங்களோ வரமாட்டோமென்கிறீர்கள்.-(ஆ 38 கையால்) உங்கள் வாசஸ்தலம் பாழாக்கப்படும்.—அல்லாமலும் பராபரனுடைய நாமத்தினாலே வருகிறவர் தோத்திரிக்கப்படக்கடவரென்று நீங்கள் சொல்லுமளவும் இதுமுதல் என்னைக் காணாதிருப்பீர்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்று திருவுளம்பற்றினார்.

---

உ௪. அதிகாரம்.

[(க) தேவாலயம் அழிக்கப்படுமென்று அறிவித்தது. (௩) அதற்குமுன்வரு முபத்திரவங்கள். (உ௯.) அவர் வருகைக்கு அடையாளங்கள். (௩௬.) அவர் வருங்காலம் நமக்குத்தெரியாதபடியால் எப்பொழுதும்எச்சரிக்கையாயிருக்கவேண்டுமென்பது

இயேசுவானவர் தேவாலயத்தை விட் 1 டுப் புறப்பட்டுவருகிறபொழுது, அவ

ருடைய சீஷர்கள் சேர்ந்து தேவாலயங் கட்டியிருக்கிற வகைகளை அவருக்குக் கா
2 ண்பித்தார்கள்.—இயேசுவானவர் அவர்களுடனே சொன்னது, இவைகள் எல்லாவற்றையும் பார்க்கிறீர்களல்லவோ? (இவைகளில்) ஒருகல் மற்றொரு கல்லின்மேல் இங்கே வைக்கப்படுவதில்லை. எல்லாம் இடிக்கப்படுமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.
3 பின்பு அவர் ஒலிவமலையின் மேலுளுக்கார்ந்திருக்கையிற் சீஷர் மாத்திரம் அவரிடத்தில் வந்து இவை எப்பொழுது சம்பவிக்கும். மேலும் நீர் வருவதற்கும் உலகத்தின்முடிவுக்கும் அடையாளமேது? இவைகளை நீர் எங்களுக்குச் சொல்லவேண்
4 டுமென்றார்கள். —அவர்களுக்கு மாறுத்தரமாக இயேசுவானவர் சொன்னதாவது, அநேகர்வந்து என் நாமத்தை எடுத்துத் தங்களைக் கிறிஸ்தென்று சொல்லி
5 அநேகம்பேரை வஞ்சிப்பார்கள். —ஆதலால் ஒருவனும் உங்களை வஞ்சியாதப
6 டிக்குப் பாருங்கள்.—அல்லாமலும் யுத்தங்களையும் யுத்தங்களின் நடக்கைகளை

யுங் கேள்விப்படுவீர்கள். அப்பொழுது
நீங்கள் கலங்காதபடிக்குப் பாருங்கள்.
அவை யெல்லாஞ் சம்பவிக்கவேண்டும்.
ஆனாலும் முடிவு உடனேவாராது. — ஆ 7
கையால் ஒரு சனக்கூட்டம் மற்றொருச
னக்கூட்டத்திற்கும் ஒரு இராச்சியம் ம
ற்றொரு இராச்சியத்திற்கும் விரோதமா
ய் எழும்பும். பஞ்சங்களும் பெருவாரிக்
காய்ச்சல்களும்பூமிஅதிர்தல்களும் அங்க
ங்கேயுண்டாகும். — ஆனாலும் அவையெல் 8
லாம் உபாதிகளுக்குஆரம்பமாயிருக்கும்.

அப்பொழுது உபத்திரவப்படும்படி 9
க்கு உங்களை ஒப்புக்கொடுத்து உங்களை
க் கொலைசெய்வார்கள். என்னுடைய நா
மத்தினிமித்தம் நீங்கள் எல்லா உலகத்
தாராலும் பகைக்கப்படுவீர்கள். — அக் 10
காலத்திலே அநேகர் இலச்சை அடைந்
து ஒருவரையொருவர் காட்டிக்கொடுத்
து ஒருவரையொருவர் பகைப்பார்கள்.
— அநேகங் கள்ளத் தீர்க்கதரிசிகளும் எ 11
ழும்பி அநேகம்பேரை வஞ்சிப்பார்கள்
— மேலும் அக்கிரமம் மிகுதியாவதினால் 12
அநேகருடைய அன்பு மாறிப்போம்.

13 —ஆனாலும் முடிவுபரியந்தம் நிலைநிற்ப
14 வனே இரட்சிக்கப்படுவான். —அல்லாமலு
ம் உலகத்தாரெல்லாருக்குஞ் சாட்சியா
க இராச்சியத்தின் சுவிசேஷம் பூமியி
லெங்கும் பிரசங்கிக்கப்படும். அப்பொ
15 ழுது முடிவுவரும். —அப்படியிருக்க, இ
தை வாசிக்கிறவன் சிந்தித்துக்கொள்ளக்
கடவன். பாழாக்குகிற அருவருப்பைக்
குறித்துத் தானியேல்த் தீர்க்கதரிசி சொ
ன்னோர். அதை நீங்கள் பரிசுத்த ஸ்தலத்
16 தில் நிற்கக் காணும்பொழுது, —யூதே
யாவிலுள்ளவர்கள் மலைகளுக்கு ஓடிப்
17 போகக்கடவர்கள். —வீட்டின் மேலிரு
ப்பவன் தன் வீட்டிலுள்ளவைகளை யெடு
த்துக்கொண்டு போகும்படிக்கு, இறங்
18 காமற் (போகக்) கடவன். —அல்லாமலு
ம் வயலிலிருப்பவன் தன் வஸ்திரங்களை
யெடுத்துக்கொண்டு போகும்படிக்குப்
பின்னிட்டுத் திரும்பாமற் (போகக்) கட
19 வன். —ஐயோ! அந்நாட்களிற் கருப்ப
வதிகளுக்கும் முலை கொடுக்கிறவர்களுக்
20 கும் உபத்திரவமிருக்கும். —மேலும் உ
லக முண்டானது முதற்கொண்டு இதுவ

மைக்குஞ் சம்பவியாததுமாய் இனிமே
லுஞ் சம்பவியாததுமாயிருக்கிற மிகுந்த
உபத்திரவம் அக்காலத்திலே உண்டாயி
ருக்கும். —ஆதலால் நீங்கள் ஓடிப்போ 21
வது மாரிகாலத்திலாவது ஓய்வுநாளிலா
வதுஞ் சம்பவியாதபடிக்கு வேண்டுதல்
பண்ணக் கடவீர்கள். —அந்த நாட்கள் 22
குறைக்கப்படாதிருந்தால் ஒருவனுந் த
ப்பிப் போவதில்லை. தெரிந்து கொள்ளப்
பட்டவர்களினிமித்தமோ அந்த நாட்க
ள் குறைக்கப்படும். —அக்காலத்திலே 23
கள்ளக்கிறிஸ்துக்களுங் கள்ளத் தீர்க்கதரி
சிகளும் எழும்பித் தெரிந்துகொள்ளப்
பட்டவர்களை (வஞ்சிக்கக்) கூடுமானால்
அவர்களையும் வஞ்சிக்கத்தக்கதாக மிகுந்
த அதிசயங்களையும் அற்புதங்களையுஞ்
செய்வார்கள். -ஆதலால் அக்காலத்திலே 24
ஒருவன் உங்களை நோக்கி, இதோ, கிறிஸ்
த்து இங்கேயிருக்கிறார். அதோ, அங்கே
யிருக்கிறாரென்றுசொன்னால் நீங்கள் அ
வனை நம்பாமலிருப்பீர்களாக.-அதை நா 25
ன் உங்களுக்கு இப்பொழுதும் முன்னறி
வித்தேன்.-ஆகையால் அதோ வனாந்தர 26

த்திலிருக்கிருரென்று சொன்னல் வெளி
27 யே புறப்படாதிருங்கள்.—இதோ, வீட்
டின் அறைகளுக்குள் இருக்கிருரென்று
ல் அதை நம்பாதிருங்கள். மின்னல் கிழ
க்கிலிருந்து தோன்றி மேற்குவரைக்குஞ்
(சீக்கிரமாய்) பிரகாசிக்கிற விதமாய் ம
28 னிதனுடைய குமாரன்வருவான். -அல்
லாமலும் பிணமெங்கேயோ அங்கே க
ழுக்கள் கூடிவரும்.
29 அந்த நாட்களிலுள்ள உபத்திரவத்திற்
குப் பின்பு உடனே சூரியன் இருள் அ
டையும். சந்திரன் பிரகாசங் கொடாமலி
ருக்கும். நட்சத்திரங்கள் வானத்திலிருந்
துவிழும். வானத்திலுள்ள (மற்ற) வல்ல
30 மைகளும் அசைக்கப்படும். —அப்பொ
ழுது மனிதகுமாரனுடைய அடையாள
ம் வானத்திலே காணப்படும். அல்லாம
லும் மனிதனுடைய குமாரன் வானத்தி
ன் மேகங்கள்மேலே மிகுந்த வல்லமை
யோடும் மகிமையோடும் வருகிறதைப்
பூமியிலுள்ள கோத்திரத்தாரெல்லாருங்
31 கண்டு புலம்புவார்கள்.—அல்லாமலும் அ
வர் தூதரை வலுவாய்த் தொனிக்கும் எக்

காளத்துடனே அனுப்புவார். அவர்கள் வானத்தின் எல்லைகளுக்குள்ளே நாலுதிசைகளிலுமிருந்து அவரால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களைச் சேர்த்துக்கொள்வார்கள்.

32 அத்திமரத்தினால் ஒரு உவமையைக் கற்றுக்கொள்ளுங்கள். அதின் கிளை தளிராகி இலைகளைக் கொடுக்கிறபொழுது வசந்தகாலஞ் சமீபமாயிருக்கின்றதென்று அறிந்திருக்கிறீர்கள்.— 33 அப்படிப் போல நான் சொன்னவைகளெல்லாஞ் சம்பவிக்கிறதை நீங்கள் காணும்பொழுது சமீபமாகவேயிருக்கிறாரென்று அறியக்கடவீர்கள்.— 34 இந்தச் சந்ததியொழிந்து போகுமுன்னமே அவையெல்லாஞ் சம்பவிக்குமென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.— 35 வானமும் பூமியும் ஒழிந்துபோம். என் வசனங்களோ ஒழியாமலிருக்கும்.— 36 அவை சம்பவிக்கும் நாளையும் நாழிகையையும் என் பிதா ஒருவரே தவிர மற்றொருவனும் அறியமாட்டான். பரமண்டலங்களிலுள்ள தேவதூதர்களும் அதையறியார்கள்.— 37 நோவாவின் கால

த்திலே நடந்ததுபோல மனிதனுடைய
குமாரன் வருங்காலத்திலேயும் நடக்கு
38 ம்.—எப்படியென்றாற் சலப்பிரளயத்தி
ற்கு முன்னை நாட்களிலே நோவா பே
ழைக்குட் பிரவேசித்த நாள்வரைக்குஞ்
39 சனங்கள் போசனபானம்பண்ணி,-பெ
ண்கொண்டு பெண்கொடுத்து (தங்களுக்
கு மோசம்வருமென்று) நினையாமலிருந்
தார்கள். அப்பொழுதே சலப்பிரளயம்
வந்து அனைவரையுங் கொண்டுபோயிற்
று. அதுபோல மனிதனுடைய குமார
40 ன் வரும்பொழுதும் நடக்கும்.—அக்கா
லத்திலே இரண்டு புருஷர் வயலிலிருப்
பார்கள். அவர்களில் ஒருவன் பிடித்துக்
கொள்ளப்படுவான், ஒருவன் தப்பிப்போ
41 வான்.—இரண்டு பெண்கள் திரிகைதிரித்
துக்கொண்டிருப்பார்கள். அவர்களில்
ஒருத்தி பிடித்துக்கொள்ளப்படுவாள் ஒரு
42 த்தி தப்பிப்போவாள். - அப்படியிருக்க,
உங்கள் எசமான் வரும் நாழிகையை நீங்
கள் அறியாதபடியினாலே விழித்திருக்கக்
43 கடவீர்கள்.—திருடன் வந்த சாமத்தை
வீட்டெசமான் அறிந்தானானால் அவன் வி

றித்துக்கொண்டு தன் வீடு கன்னமிடப்
படாதபடிக்குச் செய்திருப்பானென்று
அறிந்திருக்கிறீர்கள்.— அப்படியிருக்க, 44
நீங்கள் நினையாத நாழிகையிலே மனிதனு
டைய குமாரன் வருவதால் நீங்களும் எ
த்தனமாயிருக்கக்கடவீர்கள்.—எசமான் 45
தன் வேலைக்காரருக்குத் திட்டமாய்ப்
போசனங் கொடுக்கும்படிக்கு அவர்கள்
மேல் விசாரணைக்காரனாக வைத்த உண்
மையும் புத்தியுமுள்ள ஊழியக்காரன்
யாவன்?—எசமான் வந்து எந்த ஊழிய 46
க்காரனை அப்படிச்செய்யக் காண்பா
னோ அவனே பாக்கியவானாயிருப்பான்.
—தன் ஆஸ்திகளெல்லாவற்றின் மேலும் 47
அவனை வைப்பானென்று மெய்யாய் உங்
களுக்குச் சொல்லுகிறேன்.—அந்த ஊ 48
ழியக்காரனோ பொல்லாதவனாய் என் எச
மான் திரும்பி வரத் தாமதமாயிருப்பா
னென்று எண்ணி,—தன்னோடே கூட 49
ஊழியஞ்செய்கிறவர்களை அடிக்கத்தொ
டங்கி வெறியரோடே புசித்துக் குடி
க்கிறவனானால்,—அந்த ஊழியக்காரன் நி 50
னையாதிருக்கிற நாளிலேயும் அவனுக்கு

த் தெரியாத நேரத்திலேயும் அவனுடை
51 ய எசமான் வந்து,—அவனைக் கடினமா
ய் அடித்து அழுகையும் பற்கடிப்புமு
ள்ள இடத்திலே வஞ்சகரோடே அவனு
டைய பங்கை யேற்படுத்துவான்.

---

## ௨௫. அதிகாரம்.

[(௧) பத்துக்கன்னிகளை உவமையாகக் காட்
டியது. (௰௪)தாலந்துகளை உவமையாகக் காட்டி
யது. (௩௧) கடைசி நியாயத்தீர்ப்பைக் குறித்து
ச் சொல்லியது.]

1 அப்பொழுது பரலோக இராச்சியத்
தார் தங்கள் தீவத்திகளைப் பிடித்து ம
ணவாளனுக்கு எதிர்கொண்டுபோகப் பு
றப்படுகிற பத்துக்கன்னிகளுக்கொப்பா
2 யிருப்பார்கள்.—அவர்களில் ஐந்துபேர்
புத்தியுள்ளவர்களாயும் ஐந்துபேர் புத்தி
3 யீனராயுமிருந்தார்கள்.—புத்தியீனமுள்
ளவர்கள் தங்கள் தீவத்திகளை யெடுத்த
பொழுது எண்ணெயைக்கூடக்கொண்
4 டுபோகவில்லை. புத்தியுள்ளவர்களோ
தீவத்திகளோடுங் கூடத் தங்கள் பாத்தி
ரங்களில் எண்ணெயையுங் கொண்டு

போனார்கள்.— மணவாளன் தாமதித்த 5 பொழுது எல்லாரும் நித்திரை மயக்கம் அடைந்து தூங்கினார்கள் —அப்படியிரு 6 க்குங்காலத்திலே பாதியிராத்திரியிலே இதோ, மணவாளன் வருகிறார். அவருக்கெதிர்கொண்டுபோகப் புறப்படுங்களென்று கூக்குரலுண்டாயிற்று.—உடனே அ 7 ந்தக்கன்னிகளெல்லாரும் எழுந்திருந்து தங்கள் தீவட்டிகளை விளக்கினார்கள்.-(அ 8 ப்பொழுது) புத்தியீனமுள்ளவர்கள் புத்தியுள்ளவர்களை நோக்கி,எங்கள் தீவட்டிகள் அணைந்துபோகின்றன. ஆகையால் உங்கள் எண்ணெயிற் கொஞ்சம் எங்களுக்குத் தாருங்களென்றார்கள்.—அதற்குப் 9 புத்தியுள்ளவர்கள் சொன்னது, நாங்கள் கொடுத்தால் எங்களுக்கும் உங்களுக்குங் குறைச்சலுண்டாகும். அப்படியாகாதபடிக்கு நீங்கள் கடைக்காரரிடத்திற்போய் உங்களுக்காக (எண்ணெயைக்) கொள்ளுங்களென்றார்கள்.-அந்தப்படி அவர்க 10 ள்கொள்ளப்போகிற பொழுது மணவாளன்வந்தார். எத்தனமாயிருந்தவர்கள் அவரோடேகூடக் கலியாணத்திற்குப்போ

11 ய் (வீட்டிற்) பிரவேசித்தார்கள்.—உட னே கதவு பூட்டப்பட்டது. பின்பு மற் றக்கன்னிகளும் வந்து, ஆண்டவரே, ஆ ண்டவரே, எங்களுக்குத் திறக்கவேண்டு
12 மென்றார்கள்.—அதற்கு அவர் சொன்ன து, உங்களை அறியமாட்டேனென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகி
13 றேனென்றார்.—அப்படியிருக்க, மனித னுடைய குமாரன் வரும் நாளையாவது நாழிகையையாவது நீங்கள் அறியாம லிருக்கிறபடியினாலே விழித்துக்கொண் டிருக்கக்கடவீர்கள்.
14 அன்றியும் (பரலோக இராச்சியம்) பு றத்தேசத்திற்குப் பிரயாணமாய்ப் போ க மனதுள்ளமனிதன் தன் ஊழியக்கார ரை அழைத்துத் தன் ஆஸ்திகளை அவர் களுக்கொப்புக்கொடுத்ததுபோலிருக்கு
15 ம்.—அவனுடைய திராணிக்குத் தக்கதா க ஒருவனுக்கு ஐந்துதாலந்து*நிறைபொ ன்னும் ஒருவனுக்கு இரண்டுதாலந்து நி

*யூதர்களுக்குள்ளே வழங்கின தாலந்து நிறை பொன் ஒன்றிற்கு ஏறக்குறையப் பதின்மூவாயிரத் தறுநூற்றெண்பது வராகன் ஒப்பாயிருக்கும்.

றைபொன்னும் பின்னொருவனுக்கு ஒரு தாலந்து (நிறைபொன்னும்) கொடுத்துப்பின்பு உடனே பறத்தேசத்திற்குப் போனான்.—ஐந்து தாலந்தைப் பெற்றவன் போய் அவைகளால் வியாபாரம்பண்ணி, வேறைந்து தாலந்தைச் சம்பாதித்தான்.-அப்படிப் போல இரண்டுதாலந்தைப் பெற்றவனும் வேறிரண்டு தாலந்தைச் சம்பாதித்தான்.—ஒரு தாலந்தைப்பெற்றவனோபோய் நிலத்திலே ஒரு குழியைத் தோண்டித் தன் எசமானுடைய திரவியத்தை அதிலே புதைத்து வைத்தான்.—அநேககாலமான பின்பு, அந்த ஊழியக்காரருடைய எசமான் திரும்பி வந்து அவர்களோடே கணக்குப் பாரத்தான்.—அப்பொழுது ஐந்துதாலந்தைப்பெற்றவன் சேர்ந்து, வேறு ஐந்துதாலந்தைக்கொண்டுவந்து, ஆண்டவனே, ஐந்துதாலந்தை எனக் கொப்புவித்தீரே, இதோ, அவைகளால் வேறைந்து தாலந்தைச் சம்பாதித்தேனென்றான். 16 17 18 19 20

அப்பொழுது எசமானனவன் அவனை நோக்கி நல்லது உத்தமமும் உண்மை 21

யுமுள்ள ஊழியக்காரனே, கொஞ்சத்தி
லுண்மையாயிருந்தாய். அநேகத்தின்மே
ல் உன்னை அதிகாரியாக வைப்பேன். உ
ன் எசமானுடைய சந்தோஷத்திற்குட்
22 பிரவேசித்துவாவென்றான்.- இரண்டுதா
லந்தைப் பெற்றவனுஞ் சேர்ந்து ஆண்ட
வனே,நீர் இரண்டுதாலந்தை யெனக்கொ
ப்புவித்தீரே, இதோ அவைகளால் வேறி
ரண்டுதாலந்தைச் சம்பாதித்தேனென்று
23 ன்.—அவனுடனே எசமான் சொன்னது
நல்லது உத்தமமும் உண்மையுமுள்ள
ஊழியக்காரனே, கொஞ்சத்திலுண்மை
யாயிருந்தாய், அநேகத்தின்மேல் உன்னை
அதிகாரியாகவைப்பேன். உன் எசமானு
டைய சந்தோஷத்திற்குட் பிரவேசித்து
24 வாவென்றான்.—பின்பு ஒரு தாலந்தைப்
பெற்றவனும் வந்து ஆண்டவனே,நீர் வி
தையாத இடத்திலே அறுக்கிறவருமாய்த்
தெளியாத இடத்திலே சேர்க்கிறவருமா
ய் இருக்கிற கடினமான மனிதனாயிருக்கி
25 றீரென்று அறிந்தேன்.—ஆகையால் நா
ன் பயந்துபோய் உமது தாலந்தை நில
த்தில் புதைத்துவைத்தேன். இதோ, உ

மீமுடையதைத் திருப்ப எடுத்துக்கொள் ளுமென்றான்.—அவனுக்கு மாறுத்தா 26 மாக எசமான் சொன்னதாவது, பொல் லாதவனுஞ் சோம்பனுமான ஊழியக் காரனே, நான் விதையாத இடத்தில் அ றுக்கிறவனென்றுந் தெளியாத இடத்திற் சேர்க்கிறவனென்றும் நீ அறிந்தாயா?— அப்படியானால் நீ யென் திரவியத்தை 27 வியாபாரிகளிடத்தில் வைக்கவேண்டிய தாயிருந்தது. அப்பொழுது நான் வந்து என்னுடையதை வட்டியோடே கூட எ டுத்துக்கொள்வேனேயென்று சொல்லி, —பின்பு உள்ளவனெவனோ அவனுக்குக் 28 கொடுக்கப்படும். சம்பூரணமும் அவனு க்குண்டாகும். உள்ளவனல்லாதவனிடத் தில், இருக்கிறதையும் எடுத்துக்கொள்ள ப்படும்.-ஆகையால் இவனுடைய கையி 29 லிருக்கிற தாலந்தை நீங்கள் வாங்கிப் பத் துத் தாலந்தை யுடையவனுக்குக் கொடு ங்கள்.—அல்லாமலும் அப்பிரயோசனமா 30 ன இந்த ஊழியக்காரனை அழுகையும் ப ற்கடிப்புமுள்ள மிகவுந் தூரமான இருளி லே தள்ளிப்போடுங்களென்றான்.

31 அன்றியும் மனிதனுடைய குமாரன் தமது மகிமையோடே தம்முடைய சகல பரிசுத்த தூதருடனேயுங் கூட வரும்பொழுது, அவர் தமது மகிமையுள்ள பத்திராசனத்தின்மேல் வீற்றிருப்பார். 32 —அப்பொழுது உலகத்தார் எல்லாரும் அவருக்கு முன்பாகக் கூட்டப்படுவார்கள். மேய்ப்பனானவன் ஆடுகளையுங் கடாக்களையும் பிரிக்கிறதுபோல அவர் அவர்களை வெவ்வேறாகப் பிரித்து, 33 -ஆடுகளுக்கொப்பானவர்களைத் தமது வலப் பக்கத்திலேயுங் கடாக்களுக்கொப்பானவர்களைத் தமது இடப் பக்கத்திலேயும் நிறுத்துவார்.

34 அப்பொழுது இராசாவானவர் தம்முடைய வலப்பக்கத்தில் நிற்பவர்களை நோக்கி நான் பசியாயிருந்தபொழுது நீங்கள் எனக்குச் சாப்பாடு கொடுத்தீர்கள். நான் தாகமாயிருந்தபொழுது என் தாகத்தைத் தீர்த்தீர்கள். நான் அந்நியனாயிருந்தபொழுது என்னைச் சேர்த்துக்கொண்டீர்கள், 35 —எனக்கு வஸ்திரம் இல்லாதபொழுது எனக்கு வஸ்திரங் கொடுத்தீர்

கள். தான் வியாதியாயிருந்தபொழுது எனக்கு உதவிசெய்யவந்தீர்கள். நான் காவலிலிருந்தபொழுது என்னைப்பார்க்கவந்தீர்கள்.-ஆகையால் என் பிதாவினால் ஆசீர்வ 36 திக்கப்பட்டவர்களே உலகமுண்டானது முதல் உங்களுக்காக எத்தனம்பண்ணப்பட்டிருக்கிற இராச்சியத்தைச் சுதந்தரித்துக்கொள்ள வாருங்களென்பார்.—அப் 37 பொழுது நீதிமான்கள் அவருக்கு மாறுத்தரமாகச்சொல்வது ஆண்டவரே, நாங்களும்மைப் பசியுந் தாகமுமுள்ளவரென்று எப்பொழுதுகண்டு உமக்குப்போசன பானங் கொடுத்தோம்.—நாங்கள் 38 உம்மை அந்நியனென்றும் வஸ்திரமில்லாதவரென்றும் எப்பொழுதுகண்டுஉம்மைச் சேர்த்துக்கொண்டு உமக்கு வஸ்திரங்கொடுத்தோம்.—நாங்கள் உம்மை வி 39 யாதியுள்ளவரென்றுங் காவலிலிருக்கிறவரென்றும் எப்பொழுது கண்டு உம்மிடத்தில் வந்தோமென்பார்கள்.

அதற்கு இராசாசொல்வது மிகவுஞ் சி 40 றியரான என் சகோதரராகிய இவர்களில் ஒருவனுக்கு நீங்கள் எதைச்செய்தீர்க

ளோ அதை எனக்கேசெய்தீர்களென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறே
41 னென்பார்.—பின்பு அவர் தமது இடப் பக்கத்தில் நிற்பவர்களை நோக்கி நான் ப சியாயிருந்தபொழுது நீங்கள் எனக்குச் சாப்பாடுகொடுக்கவில்லை, நான் தாகமா யிருந்தபொழுது நீங்கள் என் தாகத்தை
42 த்தீர்க்கவில்லை.—நான் அந்நியனுயிருந்த பொழுது நீங்கள் என்னைச் சேர்த்துக் கொள்ளவில்லை, எனக்கு வஸ்திரமில்லா தபொழுது நீங்கள் எனக்கு வஸ்திரங் கொடுக்கவில்லை. நான் வியாதியுள்ளவனு யாய்க் காவலில் வைக்கப்பட்டவனுமாயி ருந்தபொழுது நீங்கள் எனக்கு உதவி
43 செய்யவரவில்லை.—ஆகையாற் சபிக்கப் பட்டவர்களே நீங்கள் என்னைவிட்டுச் சா த்தானுக்காகவும் அவனுடைய தூதர்களு க்காகவும் எத்தனம் பண்ணப்பட்டிருக் கிற நித்திய அக்கினிக்குப் போங்களென்
44 பார்.—அப்பொழுது அவர்களும் அவ ருக்கு மாறுத்தரமாகச் சொல்வது ஆண் டவரே, உம்மைப் பசித்தாகமுள்ளவரெ ன்றும், அந்நியனென்றும்,வஸ்திரமில்லா

தவரென்றும், வியாதியுள்ளவரென்றும்,
காவலிலிருக்கிறவரென்றும் நாங்கள் எப்
பொழுது கண்டு உமக்கு ஊழியஞ்செ
ய்யாதிருந்தோமென்பார்கள். -அதற்கு 45
அவர் சொல்வது மிகவுஞ் சிறியரான இ
வர்களில் ஒருவனுக்கு நீங்கள் எதைச்செ
ய்யாதிருந்தீர்களோ அதை எனக்குஞ்
செய்யாதிருந்தீர்களென்பார்.—அப்படி 46
யே அவர்கள் நித்தியவேதனையை அடை
யவும் நீதிமான்களோ நித்திய சீவனைய
டையவும் போவார்களென்றார்.

---

## ௨௬. அதிகாரம்.

[(௧.) பிரதான ஆசாரியர் முதலானவர்கள் இ
யேசுவைக் கொலைசெய்யும்படி யோசனைப
ண்ணினது. (௭.) ஒரு ஸ்திரீ அவருடைய சி
ரசின்மேல் அபிஷேகம்பண்ணினது. (௰௪.) யூ
தாஸ் அவரைக் காட்டிக்கொடுக்கும்படி பண
த்தை வாங்கினது. (௰௭.) கிறிஸ்து பஸ்காவை
ச் சாப்பிட்டது. (௨௬.) இராப்போசனத்
தை ஏற்படுத்தினது. (௩௬.) அவர் கெத்சே
மனே தோட்டத்திற்குப் போய் வேதனைபட்
டது. (௪௭.) யூதாசினாலே அவர் காட்டிக்
கொடுக்கப்பட்டது. (௫௭.) அவர் காயிபா
வினிடத்துக்குக் கொண்டுபோகப்பட்டது.
(௬௯.) பேதுருவினாலே மறுதலிக்கப்பட்டது.

இந்த வசனங்கள் யாவையும் இயேசு 1

வானவர் சொல்லிமுடித்தபின்பு அவர் த
ம்முடைய சீஷருடனேசொன்னதாவது
2 —இரண்டு நாளைக்குப் பின்பு பஸ்காப்
பண்டிகை வருமென்றறிந்திருக்கிறீர்கள்,
அப்பொழுது மனிதனுடைய குமாரன்
சிலுவைமரத்திலே அறையப்படுவதற்கு
ஒப்புக்கொடுக்கப்படுவானென்றார்.
3 அக்காலத்திலே பிரதான ஆசாரியரு
ம், வேதபாரகருஞ் சனங்களிலுள்ள மூ
ப்பருங்காயிபாவென்னப்பட்ட பிரதான
ஆசாரியனுடைய அரண்மனையிற் கூடிவ
4 ந்து,—தந்திரமாய் இயேசுவானவரைப்
பிடித்துக் கொலைசெய்யும்படிக்கு யோ
5 சனைபண்ணியிருக்கிற பொழுது,—பண்
டிகை நாட்களில் அப்படிச் செய்யக்கூ
டாது. செய்தாற் சனங்களுக்குள்ளே க
லகமுண்டாகுமென்று(நிறுத்தினார்கள்.)
6 அன்றியும் இயேசுவானவர் பெத்தானி
யூரிற் குஷ்டரோகியாயிருந்த சீமோனு
7 டைய வீட்டிலிருக்கையில்,—ஒரு ஸ்திரி
விலையேறப்பெற்ற தயிலமுள்ள பாணி
யை எடுத்துக்கொண்டுவந்து அவர் பந்
தியிருக்கிறபொழுது அதை அவருடைய

சிரசின்மேலூற்றினாள்.—அவருடைய சீ 8
ஷர் அதைக்கண்டு விசனமடைந்து இந்
தக்கேடு என்னத்திற்கு? -இந்தத் தயிலத் 9
தை உயர்ந்த கிரயத்துக்கு விற்றுத் தரி
த்திரருக்குக்கொடுத்தால் (இலாபமிருக்
குமே) என்றார்கள். -இயேசுவானவர் அ 10
தை அறிந்து அவர்களுக்குச் சொன்ன
து, நீங்கள் இந்த ஸ்திரியை ஏன் வருத்த
ப்படுத்துகிறீர்கள்? என்னிடத்தில் நற்கிரி
யையைச்செய்தாளே,-தரித்திரர் எக்கா 11
லத்திலும் உங்களுடனே இருக்கிறார்கள்.
நானோ எக்காலத்திலேயும் உங்களோடே
இருப்பதில்லை,-இவள் இந்தத் தயிலத் 12
தை என் சரீரத்தின்மேலூற்றினது என்
னை அடக்கம்பண்ணுவதற்கு ஏத்தனமா
ன செய்கையாயிருக்கின்றது.-- உலகத் 13
தில் எவ்விடத்திலே இந்தச் சுவிசேஷம்
பிரசங்கிக்கப்படுமோ அவ்விடத்திலே இ
வளை நினைப்பதற்காக இவள்செய்ததுஞ்
சொல்லப்படுமென்று மெய்யாகவே உங்
களுக்குச் சொல்லுகிறேனென்றார்.

அப்பொழுது பன்னிரண்டு சீஷரில் 14
ஒருவனாகிய யூதாஸ்காரியோத்தென்னப்

பட்டவன் பிரதான ஆசாரியரிடத்துக்கு
15 ப்போய், -நான் அவரை உங்களுக்குக் கா
ட்டிக்கொடுப்பேன். நீங்கள் எனக்கு எ
ன்ன கொடுக்கிறீர்களென்றான். அவர்கள்
அவனுக்கு முப்பது வெள்ளிக்காசை *எ
16 ற்படுத்துக் கொடுத்தார்கள்.--அதுமுதல்
அவன் அவரைக் காட்டிக் கொடுக்கும்ப
டிக்குத் தகுதியானகாலத்தைத் தேடிக்
கொண்டான்.

17 பின்பு அவர்கள் புளியாத அப்பஞ் சா
ப்பிடுகிற நாட்களில் முதல்நாளிலே சீஷ
ர்கள் இயேசுவினிடத்திற்குவந்து நீர் ப
ஸ்காப்பண்டிகையின் இராப்போசனம்
பண்ணும்படிக்கு நாங்கள் எங்கே எத்த
னம்பண்ணச் சித்தமாயிருக்கிறீரென்று
18 கேட்டார்கள்,--அதற்கு அவர் சொன்ன
து நீங்கள் பட்டினத்திலே ஒருவனிடத்
திற்போய் என்காலஞ் சமீபமாயிருக்கின்
றது, உன்னிடத்திலே என் சீஷரோடுங்
கூடப் பஸ்காப்பண்டிகை கொண்டாடு
வேனென்று போதகர் சொல்லுகிறாரெ

* யூதர்களுடைய வெள்ளிக்காசு ஒன்றிற்கு ஏற
க்குறைய ஒரு ரூபா ஒப்பாயிருக்கும்.

று அவனுடனே சொல்லுங்களென்று
—இயேசுவானவர் கட்டளையிட்டபடி 19
ப சீஷர்கள்போய்ப் பஸ்காப்போசன
ைத எத்தனம்பண்ணினார்கள்.
அந்தியானபொழுது அவர் பன் 20
ிருவரோடுங் கூடப் பந்தியிருந்தார்.——
வர்கள் போசனம்பண்ணுகையில் அவ 21
உங்களிலொருவன் என்னைக் காட்டிக்
ாடுப்பானென்று மெய்யாய்உங்களுக்
சொல்லுகிறேனென்றார்.—அப்பொ 22
ு அவர்கள் மிகவுந் துக்கப்பட்டு அவ
ரநோக்கி, ஆண்டவரே! நானோ அப்படி
செய்வேனென்று ஒவ்வொருவர் சொ
லத்தொடங்கினார்கள்.—அதற்கு அவர் 23
சான்னது, என்னோடேகூடத்தாலத்தி
லேகையைத்தோய்க்கிறவனே என்னைக் காட்
க்கொடுப்பான்.-மனிதனுடைய குமா 24
ன் தன்னைக் குறித்து எழுதியிருக்கிறவி
மாய்ப்போகிறான், அப்படியிருந்தும்
ியோ! மனிதனுடைய குமாரன் எந்த
னிதனாலே காட்டிக்கொடுக்கப்படுவா
ு அம்மனிதனுக்கு வேதனைவரும். அ
மனிதன் பிறவாதிருந்தானானால் அவனு

25 க்கு நலமாயிருக்குமென்றார்.—(பின்பு அவரைக் காட்டிக்கொடுத்த யூதா வும் அவரை நோக்கி இரபீ, நானோ அப்ப டிச்செய்வேனென்றான். நீ சொன்னபடி யே இருக்குமென்றார்.

26 அன்றியும் அவர்கள் போசனம்பண் ணுகையில் இயேசுவானவர் அப்பத்தை எடுத்துக்கொண்டு ஆசீர்வதித்து அதைப் பிட்டுச் சிஷர்களுக்குக் கொடுத்து இது என்னுடைய சரீரமாயிருக்கின்றது நீங்க

27 ளெடுத்துப் புசியுங்களென்றார்.—பின்பு அவர் பாத்திரத்தையும் எடுத்துக்கொண் டு தோத்திரம்பண்ணி அதை அவர்களுக் குக்கொடுத்து நீங்களெல்லாரும் அதிற்

28 பானம்பண்ணுங்கள்.—இது அநேகருக் குப் பாவமன்னிப்புண்டாகும்படிக்குப் புதிய உடம்படிக்கைக்கேற்றதாய்ச் சிந் தப்படுகிற என் இரத்தமாயிருக்கின்றது.

29 —இதுமுதற்கொண்டு நான் உங்களோ டே கூட என் பிதாவின் இராச்சியத்திலே நவமாய்ப் பானம்பண்ணும் நாள்வரைக் கும் இந்தத் திராட்சாசத்தைநான் பான ம்பண்ணுவதில்லையென்று உங்களுக்குச்

சொல்லுகிறேனென்றார்.

அவர்கள் தோத்திரப்பாட்டைப் பா 30
டினபின்பு ஒலிவமலைக்குப் புறப்பட்டுப்
போனார்கள்.—அப்பொழுது இயேசுவா 31
னவர் அவர்களை நோக்கி,நான் மேய்ப்ப
னை உபத்திரவப்படுத்தும்பொழுது ஆ
டுகள் சிதறிப்போமென்று எழுதியிருக்
கின்றது. ஆகையால் இந்த இராத்திரியி
லே நீங்களெல்லாரும் என்னைக் குறித்து
க் கலகமடைந்துபோவீர்கள்.—நானோ 32
எழுந்திருந்தபின்பு உங்களுக்கு முன்னேக
லிலேயாநாட்டுக்குப் போவேனென்றார்.
—அதற்குப் பேதுருசொன்னது, எல் 33
லாரும் உம்மைக்குறித்துக் கலக்கம் அ
டைந்துபோனாலும் நான் ஒருக்காலுங் க
கலக்கம் அடைந்துபோக மாட்டேனெ
ன்றான்.—அவனுடனே இயேசுவானவர் 34
சொன்னது, இந்த இராத்திரியிலே சேவ
ல் கூவுகிறதற்கு முன்னமே நீ யென்னை
மூன்றுதரம் மறுதலிப்பாயென்று மெய்
யாய் உனக்குச் சொல்லுகிறேனென்றார்.
அதற்குப் பேதுரு சொன்னது, நான் உ 35
ம்மோடே மரணம் அடையவேண்டிய

தாயிருந்தாலும் உம்மை மறுதலிக்கமா
ட்டேனென்றான். மற்றச்சீஷரெல்லாரு
ம் அப்படியே சொன்னார்கள்.

36 அப்பொழுது இயேசுவானவர் அவர்
களோடேகூடக் கெதசேமனேயென்
னும் இடத்திற்கு வந்து சீஷரைநோக்கி,
நான் அங்கே போய்ச்செபம்பண்ணும
ளவும் நீங்கள் இவ்விடத்தில் உழுக்கார்ந்தி
37 ருங்களென்று சொல்லி,—பேதுருவையு
ஞ் செபேதேயுவின் குமாரரிருவரையுங்
கூட்டிக்கொண்டுபோய்த் துக்கமடைய
வும் மிகவும் வியாகுலப்படவுந் தொடங்
38 கி,—பின்பு அவர்களை நோக்கி, என் ஆத்
துமா மரணபரியந்தம் மிகுந்த துக்கப்
பட்டிருக்கின்றது. நீங்களிங்கே தரித்திரு
ந்து என்னோடேகூட விழித்திருங்களெ
39 ன்றுசொல்லி,-சற்றப்புறம்போய்ச் சாஷ்
டாங்கமாய் விழுந்து, என்பிதாவே இந்த
ப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கக்கூடுமா
னால் அப்படிச்செய்யும். இல்லாவிட்டா
ல் என்னுடைய சித்தத்தின்படியல்ல, உ
ம்முடைய சித்தத்தின்படியேயாகக்கட
40 வதென்று செபம்பண்ணினார். —பின்பு

அவர் சீஷரிடத்தில்வந்து அவர்களை நித்
திரைபண்ணக்கண்டு பேதுருவை நோக்
கி, இப்படி நீங்கள் ஒருமணிநேரமாகி
லும் என்னோடேகூட விழித்திருக்கத் தி
ராணியில்லையோ.—நீங்கள் குற்றஞ் செ 41
ய்வதற்கான காரணத்திற் பிரவேசியாத
படிக்கு விழித்திருந்து செபம்பண்ணுங்
கள். ஆவியானது மனதுள்ளதுதான. ச
ரீரமோ பலவீனமுள்ளதென்று சொல்
லி,—இரண்டாந்தரம் போய் என் பிதா 42
வே, இந்தப் பாத்திரத்திலுள்ளதை நான்
பானம்பண்ணாவிட்டால் இது என்னைவி
ட்டு நீங்காதா. நீங்கக் கூடாதிருந்தால் உ
ம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கட
வதென்று செபம்பண்ணினார்.—சீஷர்க 43
ளோ மிகுந்த நித்திரைமயக்கமுள்ளவர்
களானபடியால் அவர் திரும்பிவந்தபொ
ழுது அவர்களை மறுபடியும் நித்திரைப
ண்ணக்கண்டார்.—அவர் மறுபடியும் அ 44
வர்களைவிட்டுப்போய் மூன்றாந்தரம் அ
ந்த விண்ணப்பவார்த்தைகளைத்தானே
செபம்பண்ணிப்பின்பு தமது சீஷரிடத்
தில் வந்து,—நீங்கள் பின்னும் நித்திரை 45

பண்ணி இளைப்பாறுவீர்களா. இதோ ம
னிதனுடைய குமாரன் பாவிகளுடைய
கைகளில் ஒப்புக்கொடுக்கப்படுகிற நே
46 ரஞ் சமீபித்தது.—அதோ, என்னைக் கா
ட்டிக்கொடுக்கிறவன் சமீபமாய் வருகி
றான். எழுந்திருங்கள் போவோமென்றார்.
47 அவர் பேசுகையிற் பன்னிருவரில் ஒரு
வனாகிய யூதா வந்தான். அவனோடே கூ
டப் பிரதான ஆசாரியருஞ் சனத்தின் மூ
ப்பரும் அனுப்பின திரளான சனங்களு
ங் கத்திகளையுந் தடிகளையும் பிடித்துவந்
48 தார்கள்.—அவர்களுக்கு அந்தத் துரோ
கியானவன் எவனை நான் முத்தஞ் செய்
வேனோ அவன்தானே இயேசு, அவனைப்
பிடித்துக்கொள்ளுங்களென்று அடையா
49 ளமாகச் சொல்லியிருந்தான். -அந்தப்ப
டி அவன் உடனே யேசுவினிடத்தில் வந்
து இரபீ, நீர் வாழ்க என்று அவரை முத்
50 தஞ்செய்தான்.—இயேசுவானவரோ அ
வனைநோக்கிச் சினேகிதனே, என்னத்தி
ற்காக வந்திருக்கிறாயென்றார். உடனே
(மற்ற)வர்கள் சேர்ந்து இயேசுவானவர்
மேற் கைகளை வைத்து அவரைப் பிடித்

தார்கள்.-அப்பொழுது இயேசுவுடனே 51 யிருக்கிறவர்களில் ஒருவன் தன் கத்தியை ப்பிடித்து உருவிப் பிரதான ஆசாரியனு டைய வேலைக்காரனைக் காதறவெட்டினு ன். --இயேசுவானவரோ அவனுடனே 52 சொன்னது, கத்தியை (இப்படி) எடுக் கிறவர்களெல்லாருங் கத்தியினலே அழி ந்துபோவார்கள், ஆகையால் உன் கத்தி யைத் திரும்ப அதினிடத்திலே போடு.- (என்னைக்காப்பாற்றும்படிக்கு) என்பிதா 53 அரைலட்சத்திற்கு அதிகமான தூதரை என்னிடத்தில் அனுப்ப வேண்டுமென் று நான் இப்பொழுதே அவரை வேண் டிக்கொள்ளக் கூடாதென்று நினைக்கி றாயா. —(நானே அபபடிச் செய்தால்) 54 வேத எழுத்துக்கள் எப்படிநிறைவேறு ம்.—இப்படியே சம்பவிக்கவேண்டுமெ 55 ன்று சொல்லிப் பின்பு சனக்கூட்டத்தை நோக்கி, நீங்கள் ஒரு கள்ளனைப் பிடிக்கு ம் படிக்குப் புறப்படுகிறதுபோலக் கத் திகளோடுந் தடிகளோடும் என்னைப் பிடி க்க வந்தீர்கள். தினந்தோறும் நான் தே வாலயத்திலே உங்களுக்குள்ளே யிருந்து

உபதேசம்பண்ணினேன் அப்பொழுது
56 நீங்கள் என்னைப் பிடிக்கவில்லையே.—தீர்க்கதரிசிகளின் எழுத்துக்கள் நிறைவேறும்படிக்கு இவையெல்லாம் நடந்துவருகின்றனவென்றார். அப்பொழுது சீஷர் எல்லாரும் அவரை விட்டு ஓடிப்போனார்கள்.

57 இயேசுவைப்பிடித்தவர்களோ அவரைப் பிரதான ஆசாரியனாகிய காய்பாவினிடத்துக்குக்கொண்டுபோனார்கள். அங்கே வேதபாரகரும் மூப்பருங்கூடிவந்தி
58 ருந்தார்கள். -அப்படியிருக்கப் பேதுரு தூரத்திலே பிரதான ஆசாரியனுடைய அரண்மனை வரைக்கும் அவர் பின்சென்று பின்பு அதிற் பிரவேசித்துச் சங்கதியின் முடிவைப் பார்க்கிறதற்குச் சேவகரிடத்தில்
59 உட்கார்ந்தான். - அத்தருணத்திலே பிரதான ஆசாரியரும் மூப்பரும் மற்றப் பெரிய சங்கத்தார் யாவரும் யேசுவைக் கொலைசெய்யும்படிக்கு அவருக்குவிரோதமாய்ப் பொய்ச்சாட்சியைத்தேடினார்க
60 ள். அகப்படவில்லை -அநேகம்பேர் வந்து பொய்ச்சாட்சியைச்சொல்லியும் ஒவ்வவி

ல்லை.—பின்பு இரண்டுபேர் வந்து இவன் 61
தேவாலயத்தை இடித்துப்போடவும் மூ
ன்றுநாளைக்குள்ளே அதைக் கட்டவும் வ
ல்லமையுள்ளவனாய் இருக்கிறேனென்று
சொன்னானென்று பொய்ச்சாட்சி சொ
ன்னார்கள்.—அப்பொழுது பிரதான ஆ 62
சாரியன் எழுந்திருந்து அவரைநோக்கி
இவர்கள் உனக்கு விரோதமாய்ச் சாட்சி
சொன்னதை நீ கேட்டாயா? இதற்கு மா
றுத்தரமாக எதையாகிலுஞ் சொல்லுகி
றதில்லையா என்றான்?-இயேசுவானவரோ 63
பேசாமலிருந்தார். அப்பொழுது பிரதா
ன ஆசாரியன் அவருடனே சொன்னது
பராபரனுடைய குமாரனாகிய கிறிஸ்து
நீதானோ, அதை நீ எங்களுக்குச் சொல்ல
வேண்டுமென்று சீவனுடைய தேவன்மே
ல் உன்னை ஆணையிட்டுக் கேட்கிறேனென்
றான்.— இயேசுவானவர் சொன்னது நீ 64
ர்சொன்னபடியேயிருக்கின்றது. அல்லா
மலும் இதுமுதற்கொண்டு நீங்கள் மனி
தனுடையகுமாரனைச் சர்வ வல்லமையுள்
ளவருடைய வலதுபாரிசத்திலே வீற்றிரு
க்கவும் வானத்தின் மேகங்கள்மேல் வரவு

ங் காண்பீர்களென்று உங்களுக்குச்சொ
65 ல்லுகிறேனென்றார்.—பிரதான ஆசாரிய
ன் அதைக்கேட்டவுடனே தன் வஸ்திரங்
களைக்கிழித்துக்கொண்டு இவன் தேவதூ
ஷணஞ்சொன்னான். இனிச் சாட்சிகள் ந
மக்குவேண்டுவதென்ன? இப்பொழுதே
இவன் தூஷணத்தைக் கேட்டீர்களே,—
66 உங்களுக்கெப்படித் தோன்றுகின்றதெ
ன்றான். அதற்கு மற்றவர்கள் சொன்னது
இவன் மரணத்திற்குப் பாத்திரனாயிருக்
67 கிறானென்றார்கள்.—அப்பொழுது சில
ர் அவருடைய முகத்திலே துப்பிச் சிலர்
அவரைக் கையினாற் குட்டிச் சிலர் அவரு
68 டைய கன்னத்திலறைந்து,-கிறிஸ்துவே,
உம்மையடித்தவன் யாவன்? அதை ஞான
திருஷ்டியாய் எங்களுக்குச்சொல்லுமெ
ன்று இழிவாய்ச்சொன்னார்கள்.

69 அத்தருணத்திலே பேதுரு அரண்ம
னையின் பிரகாரத்திலே உழுக்கார்ந்திருந்
தான். அப்பொழுது வேலைகாரியொரு
த்தி அவனிடத்தில்வந்து நீயுங் கலிலேய
னாகிய இயேசுவுடனேயிருந்தாயென்றாள்.
70 —அதற்கு அவன் சொன்னது நீ பேசுகி

றது எனக்குத் தெரியாதென்று எல்லா
ருக்கும்முன்பாக மறுதலித்துப்பின்பு ம
ண்டபத்திற்குப்போனான்.

அங்கேவேறொருபெண் அவனைக்கண் 71
டு இவனும் நாசரேத்தூரானாகிய இயே
சுவுடனே இருந்தானென்று அங்கேயிரு
ந்தவர்களுக்குச் சொன்னாள்.—அவனோ 72
சொன்னது அம்மனிதனையறியமாட்டே
னென்று மறுபடியும் ஆணையோடே ம
றுதலித்தான்.

சற்றுநேரத்துக்குப் பின்பு அங்கே நி 73
ன்றவர்கள் பேதுருவினிடத்தில் வந்து
மெய்யாய் நீயும் அவர்களிலொருவன், உ
ன் பேச்சு அதைவெளிப்படுத்துகின்றதெ
ன்றார்கள்.-அப்பொழுது பேதுரு சொ 74
ன்னது நான் அந்த மனிதனை அறியவேயி
ல்லையென்று சபித்துக்கொண்டு சத்திய
ம்பண்ணினான்.—உடனே சேவல் கூவிற் 75
று, பேதுரு (அதைக்கேட்டு) சேவல் கூ
வுமுன்னே நீயென்னை மூன்றுதரம் மறு
தலிப்பாயென்று இயேசுவானவர் சொ
ன்ன வசனத்தை நினைத்துக்கொண்டு வெ
ளியேபோய் மிகவும் அழுதான்.

## உஎ. அதிகாரம்.

(ச) இயேசுவானவர் பிலாத்துவுக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டது. (ரு) யூதா நான்றுகொண்டுசெத்தது. (யக) அவர் பிலாத்துவினாலே பரிசோதிக்கப்பட்டது. (யகூ) பிலாத்து தன் மனைவியினாலே எச்சரிக்கப்பட்டது. (உய) அவன் பரபாசை விடுதலையாக்கி இயேசுவை அடிப்பித்தது. (உகூ) இயேசுவானவர் முள்முடியைத் தரிக்கப்பட்டது. (ஙச) சிலுவையிலறையப்பட்டது. (சய) நிந்திக்கப்பட்டது. (ருய) மரித்து அடக்கம்பண்ணப்பட்டது. (சுகூ) அவருடைய கல்லறை முத்திரிக்கப்பட்டது.

1 விடியற்காலமானபொழுது சகலபிரதான ஆசாரியருஞ் சனங்களின் மூப்பருமே இயேசுவைக் கொலைசெய்யும்படிக்கான வகையைக் குறித்து யோசனைபண்ணி,—

2 அவரைக் கட்டிக்கொண்டு போய்ப் போந்தியுப்பிலாத்தென்னுந் துரைக்கு அவரை ஒப்புக்கொடுத்தார்கள்.

3 அப்பொழுது அவரைக் காட்டிக்கொடுத்த யூதாவென்பவன் அவர் மரண ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்பட்டதைக் கண்டு மனஸ்தாபமடைந்து அந்த முப்பது வெள்ளிக்காசைப் பிரதான ஆசாரியரிட

த்திற்கும் மூப்பரிடத்துக்குந் திரும்பக் கொண்டுவந்து குற்றமில்லாதவரை நான் காட்டிக்கொடுத்ததினால்,-எனக்குப் பா 4 வம்வந்ததென்றான். அதற்கவர்கள் சொன்னது, அது எங்களுக்கென்ன! நீயே பாரென்றார்கள்.—அப்பொழுது அவன் அ 5 ந்த வெள்ளிக்காசைத் தேவாலயத்தில் எறிந்துபுறப்பட்டுப்போய் நான்றுகொண்டுசெத்தான்.-பிரதான ஆசாரியர் அந்தப் 6 பணத்தையெடுத்து இது இரத்தக்கிரயமாகையால் இதைக் காணிக்கைப்பெட்டியிலேபோடக்கூடாதென்று சொல்லி,—ஆலோசனைபண்ணின பின்பு அதினாலே 7 அந்நியரை அடக்கம்பண்ணும்படி ஒரு குயவனுடையநிலத்தைக்கொண்டார்கள். —ஆதலால் இந்நாள்வரைக்கும் அந்த நி 8 லம் இரத்தநிலமென்னப்பட்டிருக்கின்றது.—அப்பொழுது இஸ்ரவேற் சனங்க 9 ளால் அவர் மதிக்கப்பட்ட கிரயமாகிய முப்பதுவெள்ளிக்காசை அவர்கள் எடுத்து,—பராபரன் எனக்குக் கட்டளையி 10 ட்டபடியே அதை ஒரு குயவனுடையநிலத்திற்காகக் கொடுத்தார்களென்று எ

ரேமியாத் தீர்க்கதரிசி சொன்ன வசனம் நிறைவேறிற்று.

11 இயேசுவானவர் துரைக்கு முன்பாக நின்றபொழுது, அந்தத் துரை அவரை நோக்கி, நீ யூதருடைய இராசாவா என்று கேட்டான். அதற்கு இயேசு சொன்னது, நீர் சொல்லுகிறபடியே இருக்கின்
12 றதென்றார். — பின்பு பிரதான ஆசாரியரும் மூப்பரும் அவர் மேற் குற்றஞ் சாற்றிவருகிறபொழுது அவர் மாறுத்தரம்
13 ஒன்றுஞ் சொன்னதில்லை. - அப்பொழுது பிலாத்து அவரை நோக்கி இவர்கள் உன்னைக் குறித்துச் சொல்லுகிற குற்றங்களை
14 நீ கேட்கிறதில்லையோ என்றான். — அவரோ துரைக்கு மிகுந்த ஆச்சரியமுண்டாகத்தக்கதாக ஒன்றுக்கும் மாறுத்தரமாக ஒரு வார்த்தையையுஞ் சொல்லாமல்
15 இருந்தார். — காவற்பண்ணப்பட்டவர்களில் எவனைச் சனங்கள் கேட்கிறார்களோ அவனைத் துரை விடுதலையாக்குகிறது பண்டிகைதோறும் வழக்கமாயிருந்தது. -
16 அல்லாமலும் அக்காலத்திலே கீர்த்தியடைந்த பாதகனாகிய பரபாசென்னப்பட்ட

ஒருவன் காவலில் வைக்கப்பட்டிருந்தா
ன்.—ஆகையாற் சனங்கள் கூடியிருக்கை 17
யிற் பிலாத்து அவர்களை நோக்கி,பரபா
சென்பவனுங் கிறிஸ்து என்னப்பட்ட
இயேசு என்பவனுமிருக்கிறார்களே. இ
வர்களில் எவனை நான் உங்களுக்காக வி
டுதலையாக்கவிரும்புகிறீர்களென்று கேட்
டான் —அவர்கள் அவரைப் பொறாமை 18
யினாலே ஒப்புக்கொடுத்தார்களென்று பி
லாத்து அறிந்தபடியினாலே (அவன் அப்
படியே கேட்டான்.)

அல்லாமலும் அவன் நியாயாசனத்தில் 19
உளுக்கார்ந்திருக்கையில், அவனுடைய ம
னைவியினால் அனுப்பப்பட்ட ஒருவன் வ
ந்து நான் இன்றைக்குச் சொப்பனத்தி
லே இந்த நீதிமானைக் குறித்து மிகவும்
பாடுபட்டேன். ஆகையால் நீர் அவரைக்
குறித்து ஒன்றுஞ் செய்யாதிருப்பீராக
வென்று அம்மாள் அறிவிக்கச் சொன்னா
ளென்றான்.-அத்தருணத்திலே பிரதான 20
ஆசாரியரும்மூப்பரும்பரபாவைச்கேட்
கும்படிக்கும் இயேசுவைக் கொலைசெய்
யப்பண்ணும்படிக்குஞ் சனங்களை (வசன

21 ங்களினாலே) ஏவினார்கள்.—ஆதலால் இ
வ்விரண்டுபேரில் எவனை நான் உங்களுக்
கு விடுதலைபண்ணவேண்டுமென்று து
ரை சனங்களை நோக்கிக் கேட்டபொழு
து அவர்கள் பரபாசை விடுதலையாக்க
22 வேண்டுமென்று கூப்பிட்டார்கள்.—அ
தற்குப் பிலாத்து சொன்னது, அப்படி
யானால் கிறிஸ்து என்னப்படுகிற இயேசு
வை நான் என்ன செய்யலாமென்றார்.
அவனைச் சிலுவை மரத்தில் அறையப்ப
ண்ணவேண்டுமென்று எல்லாருங் கூப்பி
23 ட்டார்கள்.—அதற்குத் துரை சொன்ன
து, என் எந்தப் பொலாங்கைச் செய்தா
னென்றான். அப்பொழுது அவர்கள் அவ
னைச் சிலுவை மரத்தில் அறையப்பண்ண
வேண்டுமென்று அதிகமதிகமாய்க் கூப்
24 பிட்டார்கள்.— பிலாத்து (தன் பிரயாச
ம்) வீணாயிருக்கிறதென்றுங் கலகம் அதி
கமாகிறதென்றுங் கண்டு சனங்களுக்கு மு
ன்பாகத் தண்ணீர் அள்ளிக் கைகளைக் க
ழுவி இந்த நீதிமானின் இரத்தத்தைச்சிந்
துகிறதற்கு நான் குற்றமில்லாதவன்: நீங்
25 களே பாருங்களென்றான்.—அதற்குச் ச

ணங்கள் எல்லாருஞ் சொன்னது, இவனு டைய இரத்தம் எங்கள் மேலும் எங்கள் பிள்ளைகள் மேலும் இருப்பதாகவென்றா ர்கள்.-அப்பொழுது அவன் பரபாசை 26 அவர்களுக்காக விடுதலையாக்கி இயேசு வையோ வாரினாலடிப்பித்துப் பின்பு சிலுவையில் அறையப்படும்படிக்கு ஒப் புக்கொடுத்தான்.

பின்பு துரையினுடைய போர்ச்சேவ 27 கர் இயேசுவை அதிகாரச்சாலையிலே கொ ண்டுபோய்ப் போர்ச்சேவகராகிய கூட் டமெல்லாம் அவர் மேற் கூடிவரப்பண் ணி,- அவருடைய வஸ்திரங்களைக் களை ந் 28 து சிவப்பான மெலங்கியை அவருக்கு உ டுத்தி,-முள்ளுக்களால் ஒரு முடியைப் பி 29 ன்னி அவருடைய சிரசின் மேல் வைத்து அவருடைய வலதுகையில் ஒரு கோலை க் கொடுத்துப் பின்பு அவர் முன்பாக முழங்காற்படியிட்டு யூதரின் இராசாவே வாழ்க என்று அவரைப் பரிகாசம்பண் ணி,—அவர் மேலே துப்பி அந்தக் கோ 30 லையெடுத்து அவருடைய சிரசில் அடித் தார்கள்.- அவரைப் பரிகாசம்பண்ணின 31

பின்பு அவர்கள் அவருக்கு உடுத்தின மே
லங்கியைக் கழற்றி அவருடைய வஸ்திர
ங்களை அவருக்கு உடுத்தி அவரைச் சிலு
வைமரத்தில் அறையும்படிக்குக் கொண்
32 டுபோனார்கள்.
போகையில் அவர்கள்சிரேனேயூரானா
கிய சீமோனென்பவனைக் கண்டு, அவன்
அவருடைய சிலுவைமரத்தைச் சுமக்கு
ம்படிக்குப் பலபந்தம் பண்ணினார்கள்.
33 பின்பு அவர்கள் தலையோட்டிடமென்
று அருத்தங்கொள்ளுங் கொல்கதா என்
34 னும் இடத்துக்கு வந்தபொழுது,— க
சப்பான கீரை கலந்த காடியை அவருக்
குக் குடிக்கக் கொடுத்தார்கள். அவர் அ
தை ருசிபார்த்துக் குடிக்க மனதில்லா
35 திருந்தார்.—அவரைச் சிலுவை மரத்தில்
அறைந்த பின்பு அவர்கள் அவருடையவ
ஸ்திரங்களைக் குறித்துச் சீட்டுப்போட்
டு அவைகளைப் பங்கிட்டார்கள். அதினா
லே என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்
ளே பங்கிட்டு என் உடையின் மேற் சீட்
டுப் போட்டார்களென்று தீர்க்கதரிசியா
36 லுரைக்கப்பட்டது நிறைவேறிற்று.—பி

ன்பு அவர்கள் அங்கே உளுக்கார்ந்து அ வரைக் காத்துக்கொண்டிருந்தார்கள்.— அல்லாமலும் அவருடைய மரண ஆக்கி 37 னையின் காரணத்தை அறிவிக்கும்படிக்கு இவன் யூதருடைய இராசாவாகிய இயே சுவென்றெழுதிஅவருடைய சிரசுக்கு மே லிடத்தில் வைத்தார்கள்.—அன்றியும் அ 38 வருடைய வலப் புறத்தில் ஒரு கள்வனு ம் அவருடைய இடப் புறத்தில் ஒரு க ள்வனுமாக இரண்டு கள்வரும் அவருட னேகூடச் சிலுவை மரங்களில் அறையப் பட்டார்கள்.

அப்படியிருக்க அவ்வழி நடந்துபோ 39 கிறவர்கள் தங்கள் தலைகளை அசைத்து, - ஆ! தேவாலயத்தை இடித்து மூன்று நா 40 ளைக்குள்ளே கட்டுகிறவனே, நீதானே உ ன்னை இரட்சித்துக்கொள். நீ பராபர னுடைய குமாரனானாற் சிலுவை மரத்திலி ருந்திறங்கிவாவென்று அவரைத் தூஷணி த்தார்கள்.-அப்படிப் பிரதான ஆசாரிய 41 ரும் வேதபாரகரும் மூப்பருஞ் சொன் னது,—இவன் மற்றவர்களை இரட்சித்தா ன், தன்னைத்தானோ இரட்சிக்கத் திராணி

யில்லே. இவன் இஸ்ரவேலரின்இராசாவா
ஞல் இப்பொழுதே சிலுவையிலிருந்திற
ங்கி வரட்டும், அப்பொழுது இவனே வி
43 சுவாசிப்போம்.—இவன் தன்னேப் பரா
பாணுடைய குமாரனென்று சொல்லிப்
பராபரன் மேல் நம்பிக்கையாயிருந்தா
னே. அவர் இவன் மேற் பிரியமாயிருந்
தால் இப்பொழுது இவனே மீட்டுவிடட்
டுமென்று அவரைப் பரிகாசம்பண்ணுஞ்
44 ர்கள்.- இவ்விதமாய் அவரோடே கூடச்
சிலு மரங்களில் அறைப்பட்ட கள்வரு
45 ம் அவரை நிந்தித்தார்கள் -அன்றியும் ஆ
ருமணி நேரந் தொடங்கி ஒன்பதாம
ணி நேரம் வரைக்கும் அத்தேசமெங்கும்
46 அந்தகாரமுண்டாயிற்று.—பின்பு ஒன்ப
தா மணிநேரத் திலே இயேசுவானவர்
ஏலி,ஏலி, லாமா சபகுத்தானியென்று பி
குந்த சத்தத்தோடே கூப்பிட்டார். அத
ற்கு என் தேவனே, என் தேவனே,என்
என்னேக் கைவிட்டீரென்று அருத்தமாம்
47 —அவ்விடத்தில் நின்றவர்களிற் சிலர் அ
தைக் கேட்டு இவன் எலியாவை அழைக்கி
ருனென்ருர்கள்.- அவர்களிலொருவனே

ஓடிக் கடற்காளானை எடுத்துக் காடியால் நிரப்பி அதை ஒரு கம்பின் மேற் பூட்டி அவருக்குக் குடிக்கக்கொடுத்தான்.—மற் 49 றவர்களோ சொன்னது, பொறுத்துக் கொள் எலியா இவனை இரட்சிக்க வருவானோ அதைப் பார்ப்போமென்றார்கள்.

பின்பு இயேசுவானவர் மறுபடியும் 50 மிகுந்த சத்தமிட்டு ஆவியைவிட்டார்.— அப்பொழுது சம்பவித்ததென்னவென் 51 றால் தேவாலயத்திலுள்ள திரைச்சீலை மேலேதொடங்கிக்கீழேமட்டும் இரண்டாகக் கிழிந்தது பூமியும் அதிர்ந்தது, கல்மலைகளும் பிளந்தன. கல்லறைகளுந் திறந்தன. —நித்திரையடைந்திருந்த பரிசுத்தவான் 52 களுடைய அநேகஞ்சரீரங்கள் அவர் எழுந்திருந்த பின்பு எழுப்பப்பட்டு,—கல்ல 53 றைகளைவிட்டுப் புறப்பட்டுப் பரிசுத்தபட்டினத்திற் பிரவேசித்து அநேகருக்குத் தரிசனையானார்கள்.—போர்ச்சேவகரி 54 ன் தலைவனும் அவனோடே கூட இயேசுவைக் காத்திருந்தவர்களும் பூமியதிர்ச்சியும் மற்ற நடக்கைகளையுங் கண்டபொழுது மிகுந்த பயம் அடைந்து, மெ

ய்யாய் இவர் தேவகுமாரனாயிருந்தாரெ
55 ன்று சொல்லிக்கொண்டார்கள். - அல்லா
மலும் இயேசுவுக்கு ஊழியஞ்செய்து, கலி
லேயாவிலிருந்து அவர் பின்சென்றுவந்த
ஸ்திரிகளாகியமகதலாவூர் மரியாளும், —
56 யாக்கோபுக்கும் யோசேப்புக்குந் தா
யாகிய மரியாளுஞ் செபெதேயுவின் கு
மாரருடைய தாயும் மற்ற அப்படிப்பட்
ட அநேக ஸ்திரிகளும் அங்கே தூரத்தி
லே பார்த்துக்கொண்டிருந்தார்கள்.
57 அஸ்தமனமானபொழுது அரிமத்தி
யாவூரானாகிய ஐசுவரியமுள்ளவனுமாய்
யேசுவுக்குச் சீஷனுமாயிருந்த யோசே
ப்பென்பவன் பிலாத்துவினிடத்திற்போ
ய் யேசுவின் சரீரத்தைக் கேட்டான்.
58 — அதை அவனுக்குக் கொடுக்கும்படிக்
குப்பிலாத்து கட்டளையிட்டான். — அந்
தப்படி யோசேப்பு அவருடைய சரீரத்
தை யெடுத்துத் துய்யதான மெல்லிய
59 புடவையிலேசுற்றி, - தான் கல்மலையில்
வெட்டுவித்திருந்த தன்னுடைய புதிய க
ல்லறையில் அதை வைத்து அக்கல்லறை
யின் வாசலில் ஒரு பெரிய கல்லைப் புரட்

டி வைத்துப் போனான்.—அத்தருணத்தி 61
லே மகுதலாவூராளாகிய மரியாளும் மற்
றமரியாளுங் கல்லறைக்கெதிராக உட்
கார்ந்திருந்தார்கள்.

எத்தன நாளுக்குப் பின்னான மறுநாளி 62
லோ பிரதான ஆசாரியரும் பரிசேயரும்
பிலாத்துவினிடத்திற் கூடிவந்து சொன்
னதாவது,—துரையே, அந்த எத்தன் 63
உயிரோடிருந்த பொழுது தான் மூன்று
நாளைக்குள்ளே எழுந்திருப்பேனென்று
அவன் சொன்னதை நினைத்திருக்கிறோம்.
—ஆகையால் அவனுடைய சிஷீர் இராத் 64
திரியிலே வந்து அவனைக் களவாய்க் கொ
ண்டுபோய்ப் பின்பு மரித்தோரிலிருந்
தெழுந்தானென்று சனங்களுக்குச் சொ
ல்லாதபடிக்கும் முந்தின வஞ்சனையைப்
பார்க்கிலும் பிந்தின வஞ்சனை கொடிதா
காதபடிக்கும்நீர் மூன்றுநாள்வரைக்குங்
கல்லறையைப் பத்திரம்பண்ணக் கட்ட
ளையிட வேண்டுமென்றார்கள்.—அதற்கு 65
ப் பிலாத்து சொன்னது, காவற்பண்ணு
கிற போர்ச்சேவகர் உங்களிடத்திலுண்
டே, அவர்களாலே நீங்கள் உங்களிஷ்ட

ட்படிபோய்க் கல்லறையைப்பத்திரம்ப
66 ண்ணுங்களென்றான்.—அந்தப்படி அவ
ர்கள் போய்க் கல்லில் முத்திரைபோட்
டுக் காவலுக்காகப் போர்ச்சேவகரைவை
த்துக் கல்லறையைப் பத்திரப்படுத்தினு
ர்கள்.

---

## உஅ. அதிகாரம்.

[(க) இயேசுவானவர் உயிரோடெழுந்திருந்தாரென்று ஒரு தூதன் அறிவித்தது. (கூ) இயேசுவானவர் சில ஸ்திரிகளுக்குக் காணப்பட்டது (யக) பிரதான ஆசாரியர் வஞ்சனைசெய்தது. (யகூ) இயேசுவானவர் சீஷர்களுக்குக் காணப்பட்டது. (யகூ) அவர்களை உலகத்தாரிடத்துக்கு அனுப்பினது.]

1 ஓய்வுநாள் முடிந்து கிழமையின் முதலா நாள் பிறக்கையில் மகுதலா ஊர் மரியாளும் மற்ற மரியாளுங் கல்லறையைப் பார்க்கப் புறப்பட்டார்கள்.

2 அப்பொழுது பூமி மிகவும் அதிரத்தக்கதாகப் பராபரனுடைய தூதன் வானத்திலிருந்திறங்கி வந்து வாசலிலிருந்த கல்லைப் புரட்டித் தள்ளி அதின்மேல் உருக்கார்ந்தான்.—3 அவனுடைய முகம் மின்

னலைப்போலவும் அவனுடைய உடை உறை
ந்த மழையைப்போல வெண்மையாகவுமி
ருந்தது.—காவற்பண்ணுகிற போர்ச்சே 4
வகர் அவனைக் கண்டு பயத்தினால் அதிர்
ந்து செத்தவர்களைப்போலானார்கள் —
தூதன் அந்த ஸ்திரிகளை நோக்கி, நீங்க 5
ள் பயப்படாதிருங்கள் சிலுவைமரத்தி
ல் அறையப்பட்ட இயேசுவைத் தேடிவ
ந்தீர்களென்று அறிந்திருக்கிறேன்.— அ 6
வர் சொன்னபடியே எழுந்திருக்கிறார், ஆ
கையால் அவர் இங்கே இல்லை. நீங்கள் வ
ந்து கர்த்தரை வைக்கப்பட்ட இடத்தைப்
பார்த்து,—பின்பு சீக்கிரமாய்ப் போய் 7
அவர் மரித்தோரிலிருந்தெழுந்திருக்கிறார்.
உங்களுக்கு முன்னே கலிலேயாவுக்குப்
போவார். அங்கே அவரைக் காண்பீர்க
ளென்று அவருடைய சீஷருக்கு அறிவியு
ங்கள். நான் உங்களுக்குச் சொன்னதை
நினைத்துக்கொள்ளுங்களென்றான்.

உடனே அவர்கள் பயத்தோடும் மிகு 8
ந்த சந்தோஷத்தோடுங் கல்லறையைவிட்
டு அவருடைய சீஷருக்கு அறிவிக்கும்ப
டிக்கு ஓடிப்போனார்கள்.—அப்படி அவ 9

ர்கள் அவருடைய சீஷருக்கு அறிவிக்கப் போகையில் நடந்ததென்னவென்றால் இயேசுவானவர் தாமே அவர்களுக்கு எதிர்ப்பட்டு நீங்கள் வாழ்கவென்றார். உடனே அவர்கள் சேர்ந்து சாஷ்டாங்கமாய் அவரை வணங்கி அவருடைய பாதங்களைக் க
10 ட்டிக்கொண்டார்கள் — அப்பொழுது இயேசுவானவர் அவர்களுடனே சொன்னதாவது, பயப்படாதிருங்கள். என் சகோதரர் கலிலேயாநாட்டிலே என்னைக் காண்பார்கள். ஆகையால் அவர்கள் அவ்விடத்திற்குப் போகும்படிக்கு நீங்கள் போய்ச் சொல்லுங்களென்றார்.

11 அவர்கள் போகையிற் காவற்பண்ணின சேவகரிற் சிலர் பட்டணத்திலே வந்து எல்லா நடக்கைகளையும் பிரதான ஆ
12 சாரியருக்கு அறிவித்தார்கள்.—அப்பொழுது அவர்களும் மூப்பர்களுங் கூடிவந்து யோசனைபண்ணின பின்பு, அவர்கள் அந்தப் போர்ச்சேவகருக்கு மிகுந்த ப
13 ணத்தைக் கொடுத்து,— நீங்கள் எப்படிச் சொல்லவேண்டுமென்றால் நாங்கள் நித்திரைபண்ணுகையில் அவனுடைய சீஷர்

ன் அவனைக் களவாய்க் கொண்டுபோனா
ர்களென்று சொல்லுங்கள்.—துரை இ 14
தைக்கேள்விப்பட்டால் நாங்கள் அவரை
ச் சமாதானப்படுத்தி உங்களுக்குக் கலதி
வாராதபடிக்குச் செய்வோமென்றார்க
ள்.—போர்ச்சேவகர் அந்தப்பணத்தை 15
எடுத்துக்கொண்டு தாங்கள் அடைந்த
போதிப்பின்படியேசெய்தார்கள்.அப்ப
டி இந்தச் சங்கதி யூதருக்குள்ளே இந்நா
ள்வரைக்கும் பிரசித்தமாயிருக்கின்றது.

பதினொரு சீஷர்கள் கலிலேயாநாட்டி 16
ல் இயேசுவானவர் தங்களுக்குக் குறித்தி
ருந்த மலையின்மேற் போனார்கள் —அங் 17
கே அவர்கள் அவரைக் கண்டு சாஷ்டாங்
கமாய் வணங்கினார்கள். சிலரோ சந்தே
கப்பட்டார்கள்.—அப்பொழுது இயே 18
சுவானவர் சேர்ந்து அவர்களுடனே திரு
வுளம்பற்றினதாவது, பரமண்டலத்திற்
கும் பூமண்டலத்திற்குஞ் சகல அதிகார
மும் எனக்குக் கொடுக்கப்படிருக்கின்ற
து.—ஆகையால் நீங்கள் புறப்பட்டு உல 19
கத்தாரெல்லாரையுஞ் சீஷராக்கிப் பிதா
க் குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்தி

ஞாலே அவர்களுக்கு ஞானஸ்நானங்கொ
20 டுத்து,—நான் உங்களுக்குக் கட்டளையி
ட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளு
ம்படி அவர்களுக்கு உபதேசம்பண்ணு
ங்கள். கேளுங்கள் இம்மையின் முடிவுவ
ரைக்கும் நான் எப்பொழுதும் உங்களு
டனேகூடவிருக்கிறேனென்றார். ஆமென்.

இப்புத்தகம் கிறிஸ்துநாதர் தெரிந்துகொண்ட சீஷருக்கு வேண்டிய உபதேசம்பண்ணித் தாம் சொன்னயாவையும், சகல தேசத்தாருக்குச் சுவிசேஷமாய் அறிவியுங்களென்றுகட்டளையிட்டு எழுந்தருளின பின்பு சீஷர்கள்அந்தந்த ஊருக்குப்போய்ச்சுவிசேஷவசனத்தை அறிவித்த விபரத்தைக் காண்பிக்கின்றது.

---

இந்தப்புத்தகத்திலே காணப்படும் 1, 2, 3. 4, 5, 6, 7, 8, 9, 10, என்னுமிலக்கம்— க, உ, ௩, ௪, ௫, ௬, எ, அ, ௯, ௰, என்னுந்தமிழிலக்கத்துக்குச் சரியாயிருக்குமென்பது விளங்கவேண்டியது.

# அப்போஸ்தலருடைய

## நடக்கைகள்,

---

### க. அதிகாரம்.

1 தேயோப்பிலுவே! இயேசுவானவர் தாந்
தெரிந்து கொண்ட அப்போஸ்தலருக்கு
ப் பரிசுத்த ஆவியினாலே கட்டளை யிட்ட
2 பின்பு,—அவர் உயர்த்தப்பட்ட நாள்வ
ரைக்குஞ் செய்தும் உபதேசித்து மிரு
ந்த யாவையுங் குறித்து முதலாம் பிரபந்
3 தத்தைப் பண்ணினேன்.—அவர் பாடுப
ட்ட பின்பு, நாற்பது நாளளவும் அவர்க
ளுக்குத் தரிசனையாகிப், பராபரனுடைய
இராச்சியத்தைக்குறித்து அவர்களுடனே
பேசிக்கொண்டு, இவ்விதமாய் அவர்களு
க்கு அனேகந் திருட்டாந்தரங்களினாலே
தம்மை உயிரோடிருக்கிறவர் என்று காண்
பித்தார்.—அன்றியும், அவர் அவர்களைக்
4 கூடிவரச் செய்து, அவர்களை நோக்கி இ

யோவான் சலத்தினாலே ஞானஸ்நானங் கொடுத்தான். நீங்களோ சில நாட்களுக்குப் பின்பு பரிசுத்த ஆவியினாலே ஞானஸ்
5 நானம் பெற்றுக் கொள்வீர்கள்.—ஆகையால், நீங்கள் எருசலேம் பட்டினத்தை விட்டுப் போகாமல், என்னிடத்திற் கேள்விப்பட்ட பிதாவின் வாக்குத்தத்தம் நிறைவேறக் காத்திருங்களென்று கட்டளை
6 யிட்டார்.—அப்பொழுது கூடி வந்திருந்தவர்கள் அவரை நோக்கி, ஆண்டவரே! இராச்சிய பரிபாலனத்தை இஸ்ரவேலருக்கு நீர் இக்காலத்திலோ திரும்பக் கொடு
7 ப்பீரென்று கேட்டார்கள்.—அதற்கு அவர் சொன்னது, பிதாவானவர் தம்முடைய அதிகாரத்திலே வைத்திருக்கிற காலங்களையாகிலும் வேளைகளையாகிலும் அறிகி
8 றது உங்களுக்குத் தகாது.—பரிசுத்த ஆவி உங்களிடத்தில் வரும்பொழுது, நீங்கள் பலன் அடைந்து, எருசலேமிலும், யூதேயா, சமாரியாத் தேசங்களில் எங்கும் பூமியின் எல்லை வரைக்கும் எனக்குச் சா
9 ட்சிகளாயிருப்பீர்கள் என்றார்.—இவைகளைச் சொன்ன பின்பு, அவர் அவர்களு

டைய கண்களுக்கு முன்பாக உயர்த்தப்
பட்டார். அவர்கள் அவரைக் காணுதபடி
க்கு, ஒரு மேகம் அவரை யெடுத்துக்கொ
10 ண்டு போயிற்று.—அவர் போனபொழு
து, அவர்கள் வானத்தை யண்ணுந்து பா
ர்த்திருக்கையில், வெண்மையான வஸ்திர
முள்ள மனிதர் இரண்டு பேர் அவர்களின்
11 அருகே நின்று, —கலிலேயராகிய மனித
ரே! நீங்கள் என்னத்துக்காக வானத்தை
யண்ணுந்து பார்த்து நிற்கிறீர்கள்? உங்க
ளை விட்டு வானத்துக்கு எடுத்துக்கொள்
ளப்பட்ட அந்த இயேசுவானவர் உங்கள்
கண்களுக்கு முன்பாகவானத்துக்கு எழு
ந்து போனவிதமாய்த் திரும்பி வருவார்
என்றார்கள்.

12 அப்பொழுது அவர்கள் ஒலிவ என்ன
ப்பட்ட மலையை விட்டு, எருசலேம் பட்
டினத்துக்குத் திரும்பினுர்கள். அந்தமலை
ஒரு ஓய்வுநாட் பிரயாண தூரமாய் எரு
சலேமுக்குச் சமீபமாய் இருக்கின்றது.-
13 அவர்கள் அங்கே வந்தபொழுது, மேல்
வீட்டில் ஏறினுர்கள். அங்கே பேதுருவு
ம், யாக்கோபும், யோவானும், அந்திரே

யாவும், பிலிப்புவுந், தோமாவும் பருத்
தோலோமேயுப், மத்தேயும், அல்பேயு
வின் குமாரனாகிய யாக்கோபுஞ், செலோ
த்தே யென்னப்பட்ட சீமோனும், யாக்
கோபின் சகோதரனாகிய யூதாவுந் தங்கியி
14 ருந்தார்கள்.—இவர்கள் எல்லாரும் இயே
சுவின் தாயாகிய மரியாள் முதலான ஸ்
திரிகளோடும் அவருடைய சகோதரரோ
டுங் கூட ஒருமனப்பட்டு விண்ணப்பத்தி
லேயும் வேண்டுதலிலேயும் உறுதியாய்த்
தரித்திருந்தார்கள்.

15 அந்நாட்களில் ஒரு நாள் ஏறக்குறைய
நூற்றிருபது பேர் கூடி வந்து இருந்த
பொழுது, பேதுரு என்பவன் சீஷருக்கு
ள்ளே எழுந்திருந்து சொன்னது,—
16 சகோதரர்களே! இயேசுவைப் பிடித்தவ
ர்களுக்கு வழி காட்டின யூதாவைக் குறி
த்துப் பரிசுத்த ஆவி தாவீதின் வாக்கினா
லே முன் சொன்ன வேத வாக்கியம் நிறை
17 வேற வேண்டியதாய் இருந்தது.—அவன்
நமக்குள்ளே ஒருவனாக எண்ணப்பட்டு,
இந்த ஊழியத்திற் பங்கைப் பெற்றவனா
ய் இருந்தானே;-அன்றியும் அவனே அநி

யாயமான கூலியினாலே ஒரு நிலத்தைச்
சம்பாதித்துக்கொள்ள ஏதுவாயிருந்து,
பின்பு தலைகீழாக விழுந்து, நடுவாய் வெ
டிக்கப்பட்டான். அவனுடைய குடல்கள்
19 எல்லாஞ் சரிந்து போயின.—அதை எ
ருசலேமிலுள்ள குடிகள் யாவரும் அறிந்
திருக்கிறார்கள். அதனாலே அந்த நிலம்
அவர்களுடைய பாஷையிலே இரத்த நில
மென்று அருத்தங்கொள்ளுகிற அக்கேல்
20 தாமா என்னப் பட்டிருக்கின்றது.—சங்
கீதப் புத்தகத்திலே எப்படி எழுதியிரு
க்கிறதென்றால், அவனுடைய வாசஸ்தலம்
பாழாகக்கடவது, ஒருவனும் அதில் வாச
ம் பண்ணாதிருப்பதாக வென்றும் அவ
னுடைய கண்காணிப்பை வேறொருவன்
பெறக்கடவன் என்றும், எழுதியிருக்கின்
21 றது.—ஆதலாற் கர்த்தராகிய இயேசுவான
வர் யோவான்ஞானஸ்நானங் கொடுத்தகா
லம் முதற்கொண்டு, தாம் நம்மை விட்
டு எடுத்துக் கொள்ளப்பட்ட நாள்வரை
22 க்கும்,—நமக்குள்ளே வருகிறவராயும்
போகிறவராயும் இருநத காலங்களிலே ந
ம்முடனே கூட விருந்த மனிதர்களில் ஒரு

வன் அவர் உயிரோடெழுந்திருக்கிறதை
க் குறித்து நம்முடனே கூடச் சாட்சியா
23 க வேண்டும் என்றான்.—அப்பொழுது
அவர்கள் யுஸ்து என்று மறு நாமமுள்ள
பருசபா என்னப்பட்ட யோசேப்பு, ம
த்தியா, இவ்விரண்டுபேரையுந் தெரிந்தெ
24 டுத்து வேண்டுதல் பண்ணினது.—எல்
லாருடைய இருதயங்களையும் அறிந்திரு
25 க்கிற கருத்தாவே!—யூதாவானவன் தன
க்கேற்ற இடத்துக்குப் போகும்படிக்
கு, அப்போஸ்தல ஊழியத்தின் பங்கை
விட்டு விலகினானே; அந்தப் பங்கைப்பெ
ற்றுக் கொள்ளும் படிக்கு, இவ்விரண்
டுபேரில் எவனைத் தேவரீர் தெரிந்து
கொண்டீரோ அவனை எங்களுக்குக் கா
26 ண்பிப்பீராக வென்று சொல்லி,—பி
ன்பு அவர்களைக் குறித்துச் சீட்டுப்போ
ட்டார்கள். சீட்டானது மத்தியாவின் பே
ருக்கு விழுந்தது. அப்பொழுது அவன்
பதினொரு அப்போஸ்தலருடனே அப்
போஸ்தலனாகச் சேர்த்துக் கொள்ளப்
பட்டான்.

## உ. அதிகாரம்.

1 பெந்தேக்கோஸ்தெனனும் நாள் வந்திருக்கையில், அவர்களெல்லாரும் அவ்விடத்திலே ஒரு மனப்பட்டிருந்தார்கள்.- 2 அப்பொழுது சடுதியாய்ப் பலத்தகாற்று அடிக்கிற முழக்கம்போல வானத்திலிருந்து முழக்கமுண்டாகி, அவர்கள் உளுக்காந்திருந்த வீட்டை முழுவதும் நிரப்பிற்று.—3 அல்லாமலும் அக்கினியுள்ள நாவுகள்போலப் பிரிக்கப்பட்ட நாவுகள் அவர்களுக்குக் காணப்பட்டு, அவர்கள் யாவர் 4 மேலும் வந்திருந்தன.—அவர்கள் எல்லாரும் பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டுத் தங்களுக்கு ஆவியானவர் கொடுத்த திராணியின்படி வேறு பாஷைகளிலே 5 பேசத் தொடங்கினார்கள்.—(அக்காலத்திலே) வானத்தின் கீழிருக்கிற சகலவிதமான தேசத்தாரிலும் இருந்து வந்த தேவபத்தியுள்ள யூதர்கள் எருசலேமிலே வாசம் 6 பண்ணினார்கள்.—அந்தச் சத்தம் உண்டானபொழுது, திரளான சனங்கள கூடிவந்து, யாவருந் தங்கள் தங்கள் பாஷையிலே

அவர்கள் பேசுகிறதைக் கேட்ட படியினு
7 லே, கலக்கம் அடைந்தார்கள்.—எல்லா
ரும் பிரமித்து ஆச்சரியப்பட்டு, ஒருவ
ரை ஒருவர் நோக்கிப், பேசுகிற இவர்
8 கள எல்லாருங் கலிலேயரல்லவா?—நம
து சென்ம பாஷைகளிலே அவர்கள்பே
ச, நாம் யாவருங் கேட்கிறோமே; அதெ
9 ப்படியாயிற்று.-பருத்தரும், மேதரும்,
எலாமீத்தரும், மேசோப்பொத்தாமியா
யூதேயா, கப்பதோக்கியா, பொந்து, ஆ
10 சியா, பிரிகியா, பம்பிலியா,—எகிப்பத்
து என்னுந் தேசங்களிலேயுங் கிரேனே
பட்டினத்தைச் சுற்றியிருக்கிற இலீபியா
வின் திசைக்ளிலேயுங் குடியிருப்பவர்களு
ம், இங்கே சஞ்சரிக்கிற உரோமைப்பட்டி
11 னத்தாரும்,—யூதரும், யூத மார்க்கத்திற்
சேர்க்கப்பட்டவர்களுங், கிரேத்தைதீவா
ரும்,அரபிதேசத்தாருமாகிய நம்முடைய
பாஷைகளிலே அவர்கள் பராபரனுடைய
மகிமைகளைப் பேசிக்கொள்ளக் கேட்கி
12 றோமே, என்றார்கள்.—பின்னும் எல்லா
ரும் பிரமித்து மிகவுஞ் சந்தேகப்பட்டு,
இதென்னவாம்? என்று ஒருவரோடொ

13 ருவர் சொல்லிக்கொண்டார்கள்.—மற்
ப்பேரோ மதுபானத்தினுலே நிறைந்
ருக்கிருர்கள், என்று ஆகடியம் பண்ணின
ர்கள்.

14 அப்பொழுது பேதுரு என்பவன்
பதினொருவரோடுங் கூட நின்று, உரத்
சத்தத்தோடே அவர்களுடனே சொன்
னது, யூதரும் எருசலேமிற் குடியிரு
க்கிற மற்றவர்களுமாகிய நீங்களெல்லா
ரும் அறிந்துகொள்வீர்களாக, என்வார்த்
தைகளுக்குச் செவிகொடுப்பீர்களாக.—
15 என்னவெனில், நீங்கள் நினைக்கிறதுபோ
ல இவர்கள் வெறிகொண்டவர்களல்லப்
பொழுது விடிந்து மூன்றும் மணிவேளை
16 யாய் இருக்கின்றதே;—தீர்க்கதரிசியாகிய
யோவேலினுல் உரைக்கப்பட்டபடி இது
17 வே நடந்து வருகின்றது.—(அவரைக்
கொண்டு) பராபரன் உரைத்தது, கடை
சி நாட்களில் நான் சகல மனிதருக்
கும் என்னுடைய ஆவியை யூற்றுவேன்,
அப்பொழுது உங்கள் குமாரரும் உங்கள்
குமாரத்திகளுந் தீர்க்கதரிசனஞ் சொல்
லுவார்கள். உங்கள் வாலிபர் தரிசனகளை

க் காண்பார்கள். உங்கள் மூப்பர் சொப்
18 பனங்களை அடைவார்கள்.—என்னுடைய ஊ
ழியக்காரர் மேலும் என்னுடைய ஊ
ழியக்காரிகள் மேலும் அந்நாட்களில் என்
னுடைய ஆவியை யூற்றுவேன். அப்பொ
ழுது தீர்க்கதரிசனஞ் சொல்லுவார்கள்.
19 —அல்லாமலுங் கருத்தருடைய பெரு
மையும் பிரகாசமுமான நாள் வருமுன்
னே, உயர்ந்த வானத்தில் அற்புதங்களையு
ந் தாழ்ந்த பூமியில் அதிசயங்களையும் உண்
20 டாக்குவேன்.—இரத்தமும் அக்கினியும்
புகைக்காடும் உண்டாகும்படி செய்வே
ன். சூரியன் இருளாகவுஞ் சந்திரன் இரத்
21 தமாகவும் மாற்றப்படும்.—அப்பொழு
து பராபரனுடைய நாமத்தைத் தொழு
து கூப்பிடுபவன் எவனோ, அவன் இரட்
22 சிக்கப்படுவான் என்பதே;—இஸ்ரவேல
ரே! நான் சொல்லும் வார்த்தைகளைக்
கேளுங்கள். நீங்களே அறிந்திருக்கிறபடி,
நாசரேத் தூராராகிய இயேசுவானவரா
லே பராபரன் உங்களுக்குள்ளே பலத்த
செய்கைகளையும் அற்புதங்களையும் அதி
சயங்களையுஞ் செய்து, அவைகளினாலே

23 அவரை உங்களுக்கு வெளிப்படுத்தினர்.–
ஆகிலும்,பராபரன்நியமித்திருந்தஆலோ
சனையின்படியேயும் அவர் முன் அறிந்தறி
ன்படியேயும் ஒப்புக் கொடுக்கப்பட்ட
அந்த இயேசுவை நீங்கள் பிடித்து, அக்கி
ரமக்காரருடைய கைகளினலே சிலுவை
மரத்தில் அறைந்து கொலை செய்தீர்கள்.
24 —அவரைக் குறித்துத் தாவீது சொல்லு
கிறது, நான் அசைக்கப் படாதபடிக்கு
ப் பராபரன் என் வலது பாரிசத்திலே
யிருக்கிறபடியினலே, நான் எப்பொழு
தும் அவரை எனக்கு முன்பாக வைத்துக்
25 கொள்ளுகிறேன்.—அதினலே என் இரு
தயம் மகிழ்ச்சியாய் இருக்கின்றது. என்
26 நாவு சந்தோஷமாய்இருக்கின்றது.—மே
லும் நீர் என் ஆத்துமாவை மரித்தோர்
இஸ்தலத்திலே விடவும் உம்முடைய பரி
சுத்தவான் அழிவைக் காணும்படி செய்ய
27 வுமாட்டீர்.—சீவமார்க்கங்களை எனக்குத்
தெரியப்படுத்தினீர். உம்முடைய சன்னி
தானத்திலே என்னைச் சந்தோஷத்தா
லே நிரப்புவீர். ஆதலால் என்னுடைய சரீ
ரமும் நம்பிக்கையோடே படுத்துக்கொ

28 ள்ளுமென்று சொல்லி யிருக்கிறார்.—அ
ணபடியினாலே மரணமானது இயேசுவை
அடக்கிக்கொள்ளக் கூடாதிருக்கப் பரா
பரன் அதின் உபாதிகளின் கட்டவிழ்த்து
29 அவரை எழுப்பினார்.—சகோதரர்களே
நமது கோத்திரத் தலைவனாகிய தாவீதை
க்குறித்து, நான் உங்களுடனே தயிரிய
மாய்ப் பேசுகிறேன், கேட்பீர்களாக. அ
வர் மரணம் அடைந்து, அடக்கம் பண்ண
ப்பட்டார். அவருடைய சவக்குழி இந்நா
ள்வரைக்கும் நம்மிடத்தில் இருக்கின்ற
30 து.—ஆதலால் அவர் தீர்க்கதரிசியாயிரு
ந்து, உன் ஆசனத்தில் வீற்றிருக்கும்படிக்
கு, மாமிசத்தின்படி உன்னுடைய சந்த
தியிற் கிறிஸ்துவை எழும்பப் பண்ணு
வேனென்று, பராபரன் தனக்கு ஆணை
31 கொடுத்ததை யறிந்து,—அவர் கிறிஸ்துவி
னுடைய ஆத்துமா மரித்தோர் ஸ்தலத்தி
லே விடப்படுவதில்லை என்றும், அவரு
டைய சரீரம் அழிவை அடைவதில்லையெ
ன்றும் முன் அறிந்து, அவர் உயிரோடெ
32 ழுந்திருப்பதைக் குறித்துப் பேசினார்.—
இந்த இயேசுவையே பராபரன எழுப்பி

னார். அதற்கு நாங்கள் எல்லாருஞ்சாட்சிக
ளாயிருக்கிறோம். மேலுந் தாவீது பரம
33 ண்டலத்திற்கு எழுந்து போகவில்லை.—
அதுவுமல்லாமல் அவர் சொன்னது, உம்
முடைய சத்துருக்களை நான் உமது பாத
படியாக்கிப்போடுமளவும், எனது வலது
பாரிசத்திலே உளுக்காருமென்று, பரா
பரன் என் ஆண்டவருடனேசொன்னாரெ
34 ன்றான்.—ஆதலால் இயேசுவானவர் பரா
பரனுடைய வலதுபாரிசத்திலே உயர்த்த
ப்பட்ட பின்பு பரிசுத்த ஆவியைக் குறித்
துப் பிதாவினாலே வாக்குத்தத்தத்தைப்
பெற்ற படியால் நீங்கள் இப்பொழுது
கண்டு கேட்கிறபடி அதை யூற்றினார்.—
35 ஆனபடியினாலே நீங்கள் சிலுவை மரத்தி
ல் அறைந்த அந்த இயேசுவையே பராப
ரன் ஆண்டவருங் கிறிஸ்துவுமாக்கினாரெ
ன்று இஸ்றவேற் குடும்பத்தார் யாவரும்
நிச்சயமாய் அறியக்கடவர்களென்றான்.

36 அதையவர்கள் கேட்டபொழுது இரு
தயத்திற் குற்றப்பட்டவர்களாகிப் பேது
ருவையும் மற்ற அப்போஸ்தலரையும்
நோக்கிச் சகோதரரே நாங்கள் என்ன

37 செய்யவேண்டும் என்றார்கள்.—அதற்கு
ப் பேதுரு சொன்னது, உங்களுக்குப்
பாவ மன்னிப்பு உண்டாகும் படிக்கு
நீங்கள் குணப்பட்டு, ஒருவனொருவனாய்
இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலே ஞா
னஸ்நானம் பெற்றுக்கொள்ளுங்கள். அப்
பொழுது பரிசுத்த ஆவியாகிய ஈவையும்
38 பெறுவீர்கள்.—(அதைக் குறித்து) வாக்
குத்தத்தமானது உங்களுக்கும் உங்கள்
பிள்ளைகளுக்கும் நமது தேவனாகிய பரா
பரன் வரவழைக்குந் தூரத்திலுள்ள யாவ
ருக்கும் உண்டாயிற்றேயென்று சொல்
39 லி,—மற்ற அநேக வார்த்தைகளாலும்
(அதைக் குறித்துச்) சாட்சியிட்டுத் தாறு
மாறுள்ள இந்தச் சந்ததியை விட்டு இரட்
சிக்கப்படுவீர்களாகவென்று புத்திசொன்
40 னான்.—அந்தப்படியே எவர்கள் அவனு
டைய வார்த்தையைச் சந்தோஷமாய் ஏற்
றுக்கொண்டார்களோ, அவர்கள் ஞானஸ்
நானம் பெற்றார்கள். அந்நாளிலே ஏறக்
குறைய மூவாயிரம் பேர் சேர்த்துக்கொ
41 ள்ளப் பட்டார்கள்.-அவர்கள் அப்போ
ஸ்தலருடைய உபதேசத்திலேயும் ஒருவ

42 ரோடொருவர் ஐக்கியப்படுதலிலேயும் அப்பம் பிட்குதலிலேயுஞ் செபம் பண்ணுதலிலேயும் உறுதியாய்த் தரித்திருந்தார்கள்.—ஆத்துமா யாவுக்கும் பயபத்தியுண்டாயிற்று. அன்றியும், அப்போஸ்தலர்களாலே அநேக அற்புதங்களும் அதிசயங்களுஞ் செய்யப்பட்டன.—எல்லா விசுவாசிகளும் ஒருமித்திருந்து, சகலத்தையும் பொதுவாய் வைத்தனுபவித்து.—ஆஸ்திகளையும் உடைமைகளையும் விற்று, அவைகளில் ஒவ்வொருவனுக்கு எவ்வளவு வேண்டுமோ, அவ்வளவு பகிர்ந்து கொடுத்தார்கள்.—தினந்தோறும் அவர்கள் ஒருமனப்பட்டுத் தேவாலயத்திலே தரித்திருந்து, வீடுகள்தோறும் அப்பம் பிட்டு, மகிழ்ச்சியுங் கபடம் இல்லாமையுமுள்ள இருதயத்தோடு போசனம் பண்ணிப் பராபரனைப் புகழ்ந்து கொண்டு.—(மற்றச்)சனங்கள் எல்லாரிடத்திலுங் கிருபை பெறறிருந்தார்கள், அன்றியும் இரட்சிகக்ப்படுகிற (மற்றப்)பேர்களைக்கருத்தர் தினந்தோறுஞ் சபையோடே சேர்த்தார்.

43

44

45

46

47

## ௩. அதிகாரம்.

1 அக்காலத்தில் ஒருநாட் செபவேளை
யாகிய ஒன்பதாம் மணி நேரத்திலே பே
துருவும யோவானுந் தேவாலயத்துக்கு
2 ப்போனார்கள்.—அப்பொழுது தன் தா
யின் கருப்பத்திலிருந்து சப்பாணியாய்ப்
பிறந்த ஒருமனிதன் சுமந்துவரப்பட்டா
ன் தேவாலயத்திற் பிரவேசிப்பவர்களிட
த்திற் பிச்சை கேட்குமபடிக்கு நாடோ
றும் அவனை அலங்காரவாசல் என்னப்ப
ட்ட தேவாலய வாசலினிடத்திலே வைப்
3 பார்கள்.—தேவாலயத்திற் பிரவேசிக்கவ
ருகிற பேதுருவையும், யோவானையும், அ
4 வன் கண்டுபிச்சைகேட்டான்.—அப்பொ
ழுது யோவானுடனே கூடப் பேதுரு
அவனை யுற்றுப்பார்த்து, எங்களை நோக்
5 கிப் பாரென்றான்.—அவன் அவர்களுடை
ய கையில் ஏதாகிலும் பெற்றுக் கொள்ள
லாமெமென்றெண்ணி அவர்களை நோக்கிப் பா
6 ர்த்தான்.—அப்பொழுது பேதுரு சொ
ன்னது, வெள்ளியும் பொன்னும் என்னி
டத்திலில்லை எனக்குண்டானதை யுனக்
குத் தருகிறேன். நாசரேத்தூராராகிய இ

யேசுக்கிறிஸ்துவின் நாமத்தினுலே நீ யெ
7 ழுந்து நடவென்று சொல்லி,—வலதுகை
யினுலே அவனைப் பிடித்துத் தூக்கியெடு
த்தான். உடனே அவனுடைய கால்களுங்,
8 கரடுகளும், ஸ்திரம் அடைந்தன.—அவ
ன் குதித்தெழுந்து நின்று நடந்து, அவ
ர்களுடனே கூடத் தேவாலயத்திற் பிர
வேசித்து, நடந்து, குதித்துப். பராபரனை
9 த் துதி செய்தான்.—அவன் நடக்கிறதை
யும் பராபரனைத் துதிக்கிறதையுஞ் சனங்
10 கள் எல்லாருங் கண்டார்கள்.—அல்லாம
லுந் தேவாலயத்தின் அலங்கார வாசலினி
டத்திலே பிச்சை கேட்க உழுக்கார்ந்திரு
ந்தவன் இவன்தானென்று அவர்கள் அறிந்
து, அவனுக்குச் சம்பவித்ததைக்குறித்து
மிகவும் பிர்மித்து, அதிசயப்பட்டார்கள்
11 —குணமாக்கப்பட்டசப்பாணியோ, பே
துருவையும், யோவானையும், அடுத்துக்
கொண்டிருந்தபடியாற், சனங்களெல்லா
ரும் பிர்மிப்புள்ளவர்களாய்ச் சாலமோ
ன் மண்டபம் என்னப்பட்ட மண்டபத்
திலே அவர்களிடத்தில் ஓடிவந்து கூடிஞு
12 ர்கள்.—பேதுரு அதைக் கண்டு சனங்

ளுடனே சொன்னது, இஸ்ரவேலரே! இதைக்குறித்து நீங்கள் ஆச்சரியப்படுகி றது என்ன! அல்லது நாங்கள் எங்கள் சுய வல்லமையினாலாவது, பத்தியினாலா வது, இவனை நடக்கப் பண்ணினவர்களா க நீங்கள் எங்களை நோக்கிப் பார்க்கி
13 றதென்ன!—நம்முடைய முன்னோர்களா கிய ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபென் பவர்களுடைய தேவனாயிருக்கிறவர் தம து குமாரனாகிய இயேசுவை மகிமைப்படு த்தினார். அந்த இயேசுவைப் பிலாத்து வி டுதலையாக்க எண்ணினபொழுது, நீங்கள் அவனுக்கு முன்பாக அவரை ஒப்பக்
14 கொடுத்துத் தள்ளினீர்கள்.—பரிசுத்தமு ம் நீதியும் உள்ளவரை நீங்கள் தள்ளிக் கொலைபாதகனான மனிதனை யுங்களுக்கா க விடுதலையாக்க வேண்டுமென்று கேட் டீர்கள். சீவனையுடைய அதிபதியையே
15 கொலை செய்தீர்கள்.—அவரைப் பராபர ன் மரித்தோரிலிருந்தெழுப்பினார். அதற் கு நாங்கள் சாட்சிகளாயிருக்கிறோம்.—
16 மேலும் அவருடைய நாமத்தின்மேலுள் ள விசுவாசத்தினாலே அவருடைய நாமமே

நீங்கள் பார்த்தறிந்திருக்கிற இவனை ஸ்திரப்படுத்திற்று. அவரைப் பற்றிக்கொண்ட விசுவாசமே உங்கள் எல்லாருக்கு முன்பாகவும் இந்தச் சருவாங்க சுகத்தை இவ
17 னுக்குக்கொடுத்தது.—சகோதரரே! நீங்களும் உங்கள் தலைவரும் அதை அறியாமையினாலே செய்தீர்களென்று அறிந்தி
18 ருக்கிறேன்.—பராபரனானவர் கிறிஸ்து பாடுபட வேண்டுமென்று தம்முடைய தீர்க்கதரிசிகள் எல்லாருடைய வாக்கினாலும் முன்னறிவித்தவைகளை இவ்விதமா
19 ய் நிறைவேற்றினார்.—ஆனபடியினாலே பராபரனுடைய சன்னிதானத்திலிருந்து சவுக்கியமுண்டாகுங் காலங்கள் வரவும், முன்னே குறிக்கப்பட்ட இயேசுக்கிறிஸ்துவை அவர் உங்களிடத்தில் அனுப்பவுந் தக்கதாக, உங்கள் பாவங்கள் நிவிர்த்திசெ
20 ய்யப்படும் படிக்கு,-நீங்கள் குணப்பட்
21 டு, மனந்திரும்புங்கள்.—உலகமுண்டானது முதற் பராபரன் தமது பரிசுத்த தீர்க்கதரிசிகள் எல்லாருடைய வாக்கினாலும் உரைத்தவைகளெல்லாம் நிறைவேறுங் காலம்வரும்பரியந்தம், இயேசுவானவர் பரம

22 ண்டலத்திலேயிருக்கவேண்டும்.—(அந்தத் தீர்க்கதரிசிகளில்) மோசேயானவர்(நமது முன்னோர்களுடனே சொன்னது, உங்கள் தேவனுகிய பராபரன் என்னைப் போல்த் தீர்க்கதரிசி ஒருவரை உங்களுக்காக உங்கள் சகோதரரிலிருந்து தோன்றப் பண்ணுவார். அவர் உங்களுக்குச் சொல்லும் யாவற்றிற்குஞ் செவிகொடுப்
23 பீர்களாக.—அந்தத் தீர்க்கதரிசியின் சொற் கேளாதவனெவனே அவன் தன் சனத்திலிராதபடிக்கு நிருமூலமாக்கப் படுவா
24 னென்று சொன்னர்.—சாமுவேலும் அவனுக்குப் பின் வந்து பேசின தீர்க்கதரிசிகளெல்லாரும் இந்தநாட்களை முன்னறிவித்
25 தார்கள்.—நீங்களே அந்தத் தீர்க்கதரிசிகளுடைய சந்ததியாருமாய்ப், பூமியிலுள்ள வமிசத்தார் எல்லாரும் உன் சந்ததியினலே ஆசீர்வதிக்கப்படுவார்களென்று பராபரன் ஆபிரகாமுக்குச் சொல்லி இவ்விதமாய் நம்முடைய முன்னோர்களோடே பண்ணின உடம்படிக்கைக்குள்ளானவர்
26 களுமாய் இருக்கிறீர்கள்.—ஆதலால் முதலாவது, உங்களுக்காகவே பராபரன் தம்

மூடைய குமாரனாகிய இயேசுவை யெழு ப்பி, உங்களிலெவர்கள் தங்கள் பொல்லா ங்குகளை விட்டுத் திரும்புவார்களோ அவ ர்களெல்லாரையும் அவர் ஆசீர்வதிக்கும் படிக்கு அவரை அனுப்பினாரென்றான்.

---

## ச. அதிகாரம்.

1 இப்படி அவனும் யோவானுஞ் சனங் களுடனே பேசிக்கொண்டிருக்கையில்,-
2 அவர்கள் சனங்களுக்கு உபதேசிப்பதினா லும் இயேசுவானவர் மரித்தோரிலிருந்து உயிரோ டெழுந்திருக்கிறாரென்று அறிவி த்ததினாலும் ஆசாரியரானவர்களுந் தே வாலயத்தைக்காக்கிற சேனைத் தலைவனுஞ்
3 சதுசேயரானவர்களும் விசனப்பட்டு,— அவர்களிடத்தில் வந்து, அவர்களைப் பிடி த்துச், சாயங்காலமானபடியினாலே மறு நாள்வரைக்குங் காவலில் வைத்தார்கள்.-
4 ஆகிலும் அப்போஸ்தலருடைய வசனத் தைக் கேட்டவர்களில் அனேகர் விசுவாசி த்தார்கள். அவர்களுடைய தொகை ஏறக்

5 குறைய ஐயாயிரம் பேராய் இருந்தது.
மறுநாளிலே சனங்களுடைய தலைவரு
6 ம் மூப்பரும் வேதபாரகரும்,- பிரதான
ஆசாரியனாகிய அன்னாவுங் காய்பாவும் இ
யோவானும் அலெக்கு சந்தரும் பிரதான
ஆசாரியக்குடும்பத்தாராகிய மற்றயாவரு
7 ம் எருசலேமிலே கூடிவந்து,—அவர்களை
நடுவே நிற்கப்பண்ணி, நீங்கள் எந்த வல்
லமையினாலே எந்த நாமத்தினாலே இதை
8 ச் செய்தீர்களென்று கேட்டார்கள்.—அ
ப்பொழுது பேதுரு பரிசுத்த ஆவியினா
லே நிறைந்து, அவர்களுடனே சொன்
னது, சனத்தலைவரும் இஸ்ரவேலரின்
9 மூப்பருமானவர்களே! - உபகாரத்தைப்
பெற்றுக்கொண்ட வியாதிக்காரனை இவ
ன் எதினாலே சொஸ்தம் அடைந்தானெ
ன்று நாங்கள் இன்றைக்கு விசாரிக்கப்படு
10 கிறபடியால்—உங்களாலே சிலுவை மரத்
தில் அறையப்பட்டவருமாய்ப் பராபர
னாலே மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்
டவருமாயிருக்கிற நாசரேத் தூராராகிய
இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலே இவ
ன் உங்களுக்கு முன்பாகச் சொஸ்தமாய்

நிற்கிறானென்று நீங்களும் இஸ்றவேற்ச
னங்களெல்லாரும் அறிந்திருப்பீர்களாக.-
11 வீடு கட்டுகிறவர்களாகிய உங்களால் அச
ட்டைபண்ணப்பட்டகல்லு அவரே, அவ
12 ரே கோடிக்குத் தலைக்கல்லானவர்.—அல்
லாமலும் அவராலேயன்றி வேறொருவ
ராலும் இரட்சிப்புக் கிடையாது. நாம்
இரட்சிப்பை யடையும்படிக்கு வானத்தி
ன் கீழெங்கும் மனிதர்களுக்குள்ளே வே
றொரு நாமங் கட்டளை யிடப்பட்டதுமி
13 ல்லையென்றான்.—பேதுருவும் இயோவா
னுங் காண்பித்த தயிரியத்தை அவர்கள்
பார்த்து, அவர்கள் படியாதவர்களென்
றுந் தாழ்மையானவர்களென்றும் அறிந்
தபடியினாலே ஆச்சரியப்பட்டார்கள். அ
வர்கள் இயேசுவுடனேகூட விருந்தவர்க
14 ளென்றும் அறிந்தார்கள்.—மேலுங் குண
மாக்கப்பட்ட மனிதனை அவர்கள் அருகே
நிற்கக் கண்டபடியால், அவர்கள் எதிர்ப்
15 பேசுகிறதற்கு இடம் இருந்ததில்லை.-அப்
பொழுது அவர்கள் சங்கத்தை விட்டுவெ
ளியே போகும்படி கட்டளையிட்டுப், பி
ன்பு தங்களுக்குள்ளே யோசனை பண்ணி

16 க்கொண்டு சொன்னது,—எருசலேமில் வாசம் பண்ணுகிற யாவருக்குந் தெரிந் திருக்கிற வெளியரங்கமான அற்புதம் அந்த மனிதர்களாற் செய்யப்பட்டது. அதை நாம் இல்லையென்று சொல்லக் கூ டாது ஆகையால் நாம் அவர்களை யென்ன
17 செய்யலாம்.—சனங்களுக் குள்ளே அது அதிகமாய்ப் பிரசித்தமாகாதபடிக்கு, இ துமுதல் அவர்கள் அந்த நாமத்தைக் கு றித்து ஒரு மனிதனோடும் பேசக் கூடா தென்று நாம் அவர்களைப் பயப்படுத்திக் கட்டளை யிட வேண்டுமென்று சொல்லி
18 க்கொண்டு,—அவர்களை யழைத்து, இ யேசுவின் நாமத்தைக் குறித்து எவ்வளவு ம் பேசாமலும் போதியாமலும் இருக்கு ம்படி, அவர்களுக்குக் கட்டளையிட்டார்
19 கள்.—அதற்கு மாறுத்தரமாகப் பேதுரு வும் யோவானுஞ் சொன்னது, நாங்கள் ப ராபரனுக்குக் கீழ்ப்படிகிறதைப் பார்க்கி லும் உங்களுக்குக் கீழ்ப்படிகிறது பராப ரனுக்கு முன்பாக நியாயமா யிருக்குமா. இதை நீங்கள் நிதானித்துப் பாருங்கள்.—
20 நாங்கள் கண்டவைகளையுங் கேட்டவைக

ளையும் பேசாமலிருக்கக் கூடாதே யென்
21 றார்கள்.-ஆனாலும் அற்புதமாய்ச் சொஸ்த
மாக்கப்பட்ட மனிதன் நாற்பது வயசுக்க
22 திக வயசுள்ளவனானபடியால், -நடந்ததை
க்குறித்துச் சனங்கள் எல்லாரும் பராபர
னைப் புகழ்ந்தபடியினாலே, அப்போஸ்தல
ர்களைத் தண்டிக்கும்படிக்குச் சனங்களின்
நிமித்தஞ் சங்கத்தார் வகையொன்றுங் கா
ணாமல் அவர்களைப் பின்னும் பயப்படுத்தி
23 விட்டுவிட்டார்கள்.-அவர்கள் விடப்பட்ட
பின்பு தங்களுடையவர்களிடத்துக்கு வந்
து பிரதான ஆசாரியரும் மூப்பருந் தங்க
ளுக்குச் சொன்ன யாவையும் அறிவித்தா
24 ர்கள்.-அவர்கள் அதைக் கேட்டு ஒருமன
ப்பட்டுப் பராபரனை நோக்கிச் சொன்ன
து, ஆண்டவரே! நீர் வானத்தையும் பூ
மியையுஞ் சமுத்திரத்தையும் அவைகளிலு
ள்ள யாவையுமுண்டாக்கின தேவனாயிரு
25 க்கிறீர்.—உம்முடைய தாசனாகிய தாவீதை
க்கொண்டு தேவரீர் சொன்னது, உலகத்
தார் ஏன் கலகம் பண்ணுகிறார்கள். சனக்
கூட்டங்கள் ஏன் வீணான காரியங்களைச்
26 சிந்திக்கிறார்கள்.-பூமியிலுள்ள இராசாக்க

ளுங் காரியத்தலைவரும் பராபரனுக்கும் அவருடைய கிறிஸ்துவுக்கும் விரோதமாய எழும்பி ஏகமாய்க் கூடினார்களென்கிறீ
27 ர்.—அதின்படி இந்தப் பட்டணத்திலே ஏரோதும்பொந்தியுப் பிலாத்துவும் அஞ்ஞானிகளோடும் இஸ்ரவேற் சனங்களோடுங் கூடத் தேவரீருடைய கையும் ஆலோசனையும் முன்னே குறித்தவைகள் யாவை
28 யுஞ் செய்வதற்குத்,—தேவரீர் அபிஷேகம் பண்ணி வைத்த உம்முடைய பரிசுத்த குமாரனாகிய இயேசுவுக்கு விரோதமாக
29 மெய்யாய்க் கூடினார்கள்.—அப்படியிருக்கக் கத்தாவே அவர்கள் (எங்களைப்) பயப்படுத்துகிறதைத் தேவரீர் நோக்கிப்பா
30 ர்த்துப்,—பிணியாளிகளைக் குணமாக்குதற்கு உம்முடைய வல்லமை வெளிப்படும்படியாயும் உம்முடைய பரிசுத்த குமாரனாகிய இயேசுவின் நாமத்தினாலே அதிசயங்களும் அற்புதங்களும் நடக்கும்படியாயுஞ் செய்து உம்முடைய ஊழியகாரர் உம்முடைய வசனத்தை மிகுந்த தயிரியத்தோடு சொல்லும்படி அவர்களுக்கு அனுக்கிரக
31 ஞ்செய்யும், என்றார்கள்.-அவர்கள் வேண்

முதல்பண்ணினபொழுது அவர்கள் கூடிவ
ந்திருந்த இடம் அசைந்தது. அல்லாமலும்
அவர்கள் எல்லாரும் பரிசுத்த ஆவியினு
லே நிரப்பப் பட்டுப் பராபரனுடைய
வசனத்தைத் தயிரியத்தோடே சொன்
னார்கள்.

32 அன்றியுந் திரளான விசுவாசிகளுக்கு
ஒரே இருதயமும் ஒரே ஆத்துமாவுமிரு
ந்தன. ஒருவனாகிலுந் தனக்குள்ளவைகள்
ஒன்றையுந் தன்னுடையதென்று சொல்
லவில்லை. சகலமும் அவர்களுக்குப் பொ
33 துவாயிருந்தது.—கருத்தராகிய இயேசு
உயிரோ டெழுந்ததைக் குறித்து அப்
போஸ்தலர்கள் மிகுந்த பலத்தோடே
34 சாட்சி கொடுத்தார்கள்.—மேலும் நிலங்
களையும்வீடுகளையுமுடையயாவரும் அவை
களைவிற்று, விற்கப்பட்ட பொருள்களி
ன் விலைக்கிரயத்தை அப்போஸ்தலரிடத்
திற் கொண்டு வந்து அவர்களுடைய பாத
35 த்திலே வைத்தார்கள்.-(அதில்) அவனவ
னுக்கு வேண்டி யிருந்தபடி பகிர்ந்து
கொடுக்கப்பட்டது. ஆதலால் அவர்களி
லொருவனுங் குறைவுபடவில்லை. ஆனப

டியிலே மிகுந்தகிருபை அவர்களெ
36 லாருக்கு முண்டாயிருந்தது.—இலேவிய
னுமாய்ச் சிப்புரு தீவிற் பிறந்தவனுமாய்
ஆறுதலின் மகனென்று அருத்தங் சொல்
லுகிற பருணபாவென்று பேரை அப்போ
ஸ்தலராலே பெற்றுக்கொண்டவனுமாயி
ருந்த யோசேப்பென்பவனுந் தனக்குண்
37 டான நிலத்தை விற்றுத்,—திரவியத்தை
க்கொண்டு வந்து அப்போஸ்தலருடைய
பாதத்திலே வைத்தான்.

---

## ரு. அதிகாரம்.

1 அல்லாமலும் அனனியா என்னப்பட்
டவனும் அவனுடைய மனைவியாகிய
ப்பீராளுந் (தங்கள்) காணியைவிற்றார்கள்
2 —பின்பு அவன் தன் மனைவியும் அறிய
அந்தக் கிரயத்திலே சில பணத்தை
ளிசித்துவைத்து, ஒரு பங்கை மாத்திரங்
கொண்டுவந்து, அப்போஸ்தலருடைய
3 பாதத்திலே வைத்தான்.—அப்பொழுது
பேதுரு சொன்னது, அனனியாவே! நீ

லத்தின் விலைக்கிரயத்திலே சில பணத்தை
நீ மறைத்துவைத்துப், பரிசுத்த ஆவியி
னிடத்திற் பொய் சொல்லும்படிக்குச்,
சாத்தான் உன் இருதயத்தை நிரப்பின
4. தென்னெ?—அது விற்கப்படாமல் இருந்த
பொழுது, உன்னுடையதாயிருந்ததில்லை
யோ? அதை விற்றபின்பு, (அதின்கிரயம்)
உன் அதிகாரத்திலிருந்ததில்லையோ? அப்
படியிருக்க, ஏன் நீ இந்தக்காரியத்தை உ
ன் இருதயத்திலே வைத்தாய்? நீ மனிதரி
டத்திலல்லப், பராபரனிடத்திலே பொ
5 ய் சொன்னாய் என்றான்.—இந்த வார்த்
தைகளை அனனியா கேட்டபொழுது, அ
வன் விழுந்து, சீவனை விட்டான். இந்தச்
சங்கதியைக் கேட்டயாவருக்கும் மிகுந்த
6 பயமுண்டாயிற்று—சில வாலிபர் எழுந்
து, அவனை ஒரு சீலையிற் கட்டி வெளியே
கொண்டுபோய், அடக்கம் பண்ணினார்
7 கள்.—ஏறக்குறைய மூன்று மணி நேரத்
துக்குப் பின்பு, அவனுடைய மனைவி அ
ந்த நடக்கையை அறியாமல், உள்ளே வ
8 ந்தாள்.—அவளுடனே பேதுரு (உங்கள்)
நிலத்தை யிவ்வளவு கிரயத்துக்கோ விற்றீ

ர்கள்? அதை எனக்குச் சொல்லென்றான், அவள் இவ்வளவுக்கே அதை விற்றோமென்றாள்.—9 அப்பொழுது பேதுரு சொன்னது பராபரனுடைய ஆவியைச் சோதிக்கிறதற்கு நீங்கள் ஏன் ஒருமைப்பட்டீர்கள்? உன் புருஷனை அடக்கம் பண்ணினவர்களுடைய கால்கள் உன்னையும் வெளியே கொண்டுபோகும்படி, அதோ வாசற்படியிலே வந்திருக்கின்றனவென்றான்.—10 உடனே அவள் அவனுடைய பாதத்தில் விழுந்து, சீவனை விட்டாள். வாலிபர் உள்ளே வந்து, அவள் மரித்ததைக் கண்டு, அவளை வெளியே கொண்டுபோய், அவளுடைய புருஷனிடத்தில் அடக்கம் 11 பண்ணினார்கள்.—அதினாலே சபையாரெல்லாருக்கும் அதைக் கேட்ட மற்றயாவருக்கும் மிகுந்த பயமுண்டாயிற்று.

12 பின்னும் அப்போஸ்தலருடைய கைகளினாலே அனேக அதிசயங்களும் அற்புதங்களுஞ் சனங்களுக்குள்ளே செய்யப்பட்டன. எல்லாரும் ஒரு மனப்பட்டுச் சாலோமோனுடைய மண்டபத்திலிருந்தார்கள். 13 —மற்றவர்களில் ஒருவரும் அவர்களுட

14 னே சேரத் துணிந்ததில்லை.—ஆனாலுந் தி
ரளான புருஷரும் ஸ்திரிகளுங் கருத்தாவி
னிடத்தில் விசுவாசமுள்ளவர்களாகிச், சே
15 ர்த்துக் கொள்ளப்பட்டார்கள்.—அல்லா
மலுஞ் சனங்கள் அப்போஸ்தலரை மே
ன்மைப் படுத்தினார்கள். அதினாலே அவர்
கள் பிணியாளிகளைப்படுக்கைகளின்மேலு
ங் கட்டில்களின்மேலுங் கிடத்திப், பேது
ரு நடந்துபோகையில், அவனுடைய நி
ழலாகிலுஞ் சிலரிற் படும்படிக்கு அவர்க
ளை வெளியே வீதிகளிற் கொண்டுவந்தார்
16 கள்.—சுற்றுக் கிராமங்களிலு மிருந்து, தி
ரளான சனங்கள் பிணியாளிகளையும் அசு
த்த ஆவிகளால் வாதிக்கப் பட்டவர்களையு
ம் எருசலேமுக்குக் கொண்டுவந்தார்கள்,
அவர்களெல்லாருங் குணமாக்கப் பட்டா
ர்கள்.

17 அப்பொழுது பிரதான ஆசாரியனும் அ
வனுடனே கூடவிருந்த சதுசேயர் வகுப்
பைச் சேர்ந்த அனைவரும் எழும்பி, வயி
18 ராக்கியத்தால் நிரப்பப்பட்டு,—அப்போ
ஸ்தலர்களைப் பிடித்துப், பட்டணத்தின்
19 சிறைச்சாலையிலே வைத்தார்கள்.—இராத்

திரியிலே பராபரனுடைய தூதன் சிறைச்
சாலையின் கதவுகளைத் திறந்து, அவர்களை
20 வெளியே கொண்டுவந்து,—நீங்கள் போ
ய்த், தேவாலயத்திலே நின்று, இந்தச் சீ
வ வார்த்தைகள் எல்லாவற்றையுஞ் சனங்
21 களுக்குச் சொல்லுங்களென்றான்.—அந்
தப்படி அவர்கள் கேட்டு, அதிகாலையிலே
தேவாலயத்துக்குப் போய்ப், போதகம்
பண்ணினார்கள். அத்தருணத்திலே பிர
தான ஆசாரியனும் அவனுடனே கூடவிரு
ந்தவர்களும் வந்து, பெரிய சங்கத்தாரை
யும் இஸ்ரவேற் சனங்களின் மூப்பரெல்
லாரையுங் கூடி வர அழைத்து, அப்போ
ஸ்தலரைக் கொண்டுவரும்படி சிறைச்
சாலைக்குச் (சேவகரை) யனுப்பினார்கள்.
22 —அந்தப்படி சேவகர் காவல் வீட்டுக்கு
ப் போய், அங்கே அவர்களைக் காணாமல்
23 திரும்பி வந்து,—சிறைச்சாலை மிகவும் ப
த்திரமாய்ப் பூட்டப்பட்டிருக்கவுங் காவ
ற்காரர் கதவுகளின் முன்னே நிற்கவுங் க
ண்டோம். அவைகளைத் திறந்தபொழு
து உள்ளே ஒருவரையுங் காணோமென்று
24 அறிவித்தார்கள். — இந்தச் செய்தியை

ஆசாரியனுந் தேவாலயத்தைக் காக்கிற
சேனைத் தலைவனும் பிரதான ஆசாரிய
ருங் கேட்டு, இதென்னமாயிருக்கிறதென்
று அவர்களைக் குறித்துச் சந்தேகப்பட்
25 டார்கள்.—அப்பொழுது ஒருவன் வந்து
நீங்கள் காவலில்வைத்த மனிதர் தேவாலய
த்திலே நின்று, சனங்களுக்கு உபதேசம்
26 பண்ணுகிறார்களென்று அறிவித்தான்.—உ
டனே சேனைத் தலைவன் சேவகரோடுங் கூ
டப் போய்ச், சனங்கள்மேல் கல்லெறியப்
படாதபடிக்கு, அவர்களுக்குப் பயந்ததி
னாலே, பலபந்தம் பண்ணாமல் அப்போ
27 ஸ்தலரை யழைத்துக் கொண்டான்.—அ
ப்படி அவர்கள் அவர்களை அழைத்துவந்
து, பெரிய சங்கத்தாருக்கு முன்பாக நி
றுத்தினார்கள். அப்பொழுது பிரதான ஆ
28 சாரியன் அவர்களை நோக்கி,—நீங்கள் அ
ந்த நாமத்தைக் குறித்து உபதேசம் ப
ண்ணக்கூடாதென்று நாங்கள் உங்களுக்கு
க் கெட்டியாய்க் கட்டளை யிட்டதில்லை
யோ? அப்படி யிருந்தும், நீங்கள் உங்
கள் உபதேசத்தினாலே எருசலேமை நிர
ப்பி, அந்த மனிதனுடைய இரத்தப்பழி

யெங்கள் மேல் வரப்பண்ண விரும்புகிறீ
29 ர்களென்று சொன்னான்.—அதற்குப் பே
துருவும் (மற்ற) அப்போஸ்தலருஞ் சொ
ன்னது, நாங்கள் மனிதருக்குக் கீழ்ப்படி
கிறதைப் பார்க்கிலும் பராபரனுக்கே கீ
30 ழ்ப்படிய வேண்டும்.—நீங்கள் மரத்திலே
தூக்கிக் கொலைசெய்த இயேசுவை நமது
முன்னோர்களுடைய தேவன் எழுப்பி,—
31 இஸ்ரவேலருக்குக் குணப்படுதலையும் பா
வமன்னிப்பையுங் கொடுக்கிறதற்கு அவ
ரையதிபதியாகவும் இரட்சகராகவுந் தமது
32 வலதுகையினாலே உயர்த்தினார்,—இந்தச்
சங்கதிகளைக்குறித்து நாங்களும் பராபர
ன் தமக்குக் கீழ்ப்படிகிற அவர்களுக்குக்
கொடுத்த பரிசுத்த ஆவியும் அவருடைய
சாட்சிகளாயிருக்கிறோம் என்றார்கள்.—
33 அதை அவர்கள் கேட்டு, மிகுந்த மூர்க்க
மடைந்து அவர்களைக் கொலைசெய்யும்ப
34 டிக்கு யோசனை பண்ணினார்கள்.—அப்
பொழுது எல்லாச் சனங்களாலுங் கனம்
பெற்றுக்கொண்ட வேதசாஸ்திரியாகிய
கமாலியேல் என்னப்பட்ட பரிசேயனான
வன் பெரிய சங்கத்தாருக்குள்ளே யெழு

ந்திருந்து, அப்போஸ்தலரைச் சற்றுநே
ரம் வெளியே கொண்டு போகச்சொல்
லிச், சங்கத்தாருடனே சொன்னது,—
35 இஸ்ரவேலரே! நீங்கள் அந்த மனிதருக்
குச் செய்ய நினைக்கிறதைக் குறித்து எச்
36 சரிக்கையாய் இருப்பீர்களாக.—இந்த நா
ட்களுக்கு முன்னே, தெயுதாவென்பவன்
எழும்பித் தன்னைப் பெரியவன் என்று
சொல்லி, ஏறக்குறைய நானூறு பேர் த
ன்னை அடுத்துக்கொள்ளும்படி செய்து,
பின்பு அழிக்கப்பட்டான். அவனை நம்பி
யிருந்த அனைவருங் கலைந்து வீணாய்ப்போ
37 ய்விட்டார்கள்.—அவனுக்குப்பின்பு குடி
மதிப்புச் செய்யப்பட்ட நாட்களிலே க
லிலேயனாகிய யூதா எழும்பி, அநேக சன
ங்களைத் தன் வசமாக்கினான். அவனும் அ
ழிந்து போனான். அவனை நம்பியிருந்த
அனைவருஞ் சிதறடிக்கப் பட்டார்கள்.—
38 ஆனபடியினாலே நான் உங்களுக்குச் சொ
ல்லுகிறதென்னவென்றால், இந்த மனித
ர்களுடைய யோசனை அல்லது இவர்களு
டைய கிரியை மனிதரால் உண்டானதானா
39 ல், அது ஒழிந்துபோம்.—அது பராபர

னாலுண்டானாலோ, அதை நீங்கள் ஒழித்
துப்போடமாட்டீர்கள். ஆதலால் நீங்
கள் பராபரனோடே போர்செய்கிறவர்க
ளாய்க் காணப்படாதபடிக்கு இவர்களுக்
கு ஒன்றுஞ் செய்யாமல் இவர்களை விடுங்
40 களென்றான். — அவனோடே மற்றவர்கள்
பொருந்தி அப்போஸ்தலரை வரவழைத்
து, அடித்து, இயேசுவின் நாமத்தைக் கு
றித்து அவர்கள் பேசாதிருக்கும்படிக்கு
க் கட்டளையிட்டு, அவர்களை விட்டுவிட்
டார்கள்.

41 அவர்களோ தாங்கள் அவருடைய நாம
த்துக்காகக் கனவீனப்படுகிறதற்குப் பா
த்திரர் என்று எண்ணப்பட்டபடியின
லே, சந்தோஷமாய்ப் பெரிய சங்கத்தை
42 விட்டுப் புறப்பட்டுப் போய், — தினந்
தோறுந் தேவாலயத்திலேயும் வீடுகளிலே
யும் ஓயாமல் உபதேசம் பண்ணி, இயே
சுவைக் கிறிஸ்து என்று சுவிசேஷமாய் அ
றிவித்து வந்தார்கள்.

## ௬. அதிகாரம்.

1 அந்நாட்களிற் சீஷர்கள் பெருகினபொழுது, கிரேக்கரானவர்களி லுள்ள கைம்பெண்களை நாடோறுமுள்ள விசாரணையிலே நன்றாய் எண்ணிக்கொள்ளாதபடியினாலே, கிரேக்கரானவர்கள்எபிரேயருக்கு விரோதமாய் மொறு மொறுத்தார்கள்.- 2 அப்போழுது பன்னிருவருஞ் சீஷர்களாகிய திரளைக் கூடி வர அழைத்துச் சொன்னது, நாங்கள் பராபரனுடைய வசனம் போதிக்கிறதை விட்டுப் பந்திகளுக்கு 3 நித்து விசாரிக்கிறது தகாது.—ஆகையாற் சகோதரரே! நீங்கள் உங்களுக்குள்ளே பரிசுத்த ஆவியுஞ் ஞானமும் நிறைந்து நற்சாட்சி பெற்றிருக்கிற எழுபேரைத் தெரிந்துகொள்ளுங்கள், அவர்களை இந்த 4 வேலைக்காக ஏற்படுத்துவோம்.—நாங்களோ வேண்டுதல்பண்ணுதலிலுந் (தேவ) வசனத்தைப் போதிக்கிற ஊழியத்திலும் இடைவிடாமல் தரித்திருப்போம் என்றா 5 ர்கள்.—இந்த யோசனை சபையார் எல்லாருக்கும் பிரியமாயிருந்தது. ஆதலால் அவர்கள் விசுவாசமும் பரிசுத்த ஆவியும் நி

றைந்தவனுகிய இஸ்தேவானையும், பிலிப்
பையும், பிரோகோரையும், நிக்கானரை
யுந், தீமோனையும், பருமேனுவையும்,
யூதமார்க்கத்தானுன அந்தியோகியப்பட்
டினத்தானுகிய நிக்கோலாவையுந் தெரிந்
6 துகொண்டு,—அவர்களை அப்போஸ்தல
ருக்கு முன்பாக நிறுத்தினர்கள். இவர்கள்
வேண்டுதல்பண்ணி, அவர்கள்மேலே தங்
7 கள் கைகளை வைத்தார்கள்.—பின்பு பரா
பரனுடைய வசனம் வளர்ந்து சீஷருடை
ய இலக்கம் எருசலேமிலே மிகவும் பெரு
கிற்று. ஆசாரியர்களில் அனேகரும் விசு
வாசித்துக் கீழ்ப்படிந்தார்கள்.

8 அன்றியும், இஸ்தேவானென்பவன் கி
ருபையினுலும் பலத்தினுலும் நிறைந்து,
சனங்களுக்குள்ளே பெரிய அற்புதங்
களையும் அதிசயங்களையுஞ் செய்தான்.-
9 அப்பொழுது லிபருத்தீனர் என்னப்ப
ட்வர்களின் ஆலயத்தைச் சேர்ந்தவர்க
ளிலுங் கிரேனேப் பட்டினத்தாரிலும்
அலெக்சந்தரியப் பட்டினத்தாரிலுங்
கிலிகியாத் தேசத்தாரிலும் ஆசியாத் தேச
த்தாரிலுஞ் சிலர் எழும்பி இஸ்தேவானுட

னே தருக்கம்பண்ணிக் கொண்டார்கள்.-
10 அவன் பேசின ஞானத்தோடும் ஆவியோ
டும் அவர்கள் எதிர்த்து நிற்கவல்லமையில்
11 லை.-அப்பொழுது அவர்கள் இரகசியமா
யிச் சில மனிதரைச் சம்பாதித்து, இவன்
மோசேயுக்கும் பராபரனுக்கும் விரோ
தமாகத் தூஷணமான வசனங்களைப்
பேசக் கேட்டோம் என்று சொல்லும்ப
12 டி செய்து.—பின்பு சனங்களையும் மூப்
பரையும் வேதபாரகரையும் எழுப்பி அவ
ன்மேற் பாய்ந்து, அவனைப் பெரிய சங்க
த்தாருக்கு முன்பாக இழுத்துக்கொண்டு
13 போய்,—பொய்ச் சாட்சிகளையும் ஏற்
படுத்தினார்கள். அவர்கள் சொன்னது இவ
ன் பரிசுத்த ஸ்தலத்துக்கும் வேதநூலுக்
குந் தூஷணமான வசனங்களை ஓயாமற்
14 பேசுகிறான்.-நாசரேத்தூராராகிய அந்த
இயேசுவென்பவர் இந்த ஸ்தலத்தை அழி
த்து மோசே நமக்குக் கொடுத்த முறை
மைகளை மாற்றுவாரென்று இவன் சொல்
15 லக் கேட்டோமென்றார்கள்.—பெரியசங்
கத்தில் உட்கார்ந்திருந்த யாவரும் அவ
ன்மேற் கண்ணோட்டமான பொழுது.

அவனுடைய முகந் தேவதூதன் முகம் போல் இருக்கக் கண்டார்கள்.

---

எ. அதிகாரம்.

1 பிரதான ஆசாரியன் அவனை நோக்கி
2 இப்படியா நடந்தது! என்றான்.—அதற்கு அவன் சொன்னது சகோதரரும் பிதாக்களுமானவர்களே! கேட்பீர்களாக. நம்முடைய பிதாவாகிய ஆபிரகாம் காரான் ஊரிலே குடியிருந்ததற்கு முன்னே மெசொப்பொத்தாமியா நாட்டிலே இருந்தபொழுது, மகிமை பொருந்திய பராப
3 ரன் அவனுக்குத் தரிசனையாகி,—அவனுடனே, நீ உன் தேசத்தையும் இனத்தாரையும் விட்டுப் புறப்பட்டு நான் உனக்குக் காண்பிக்குந் தேசத்துக்குப் போ என்
4 றார்.—அப்பொழுது அவன் கலுதேயர் தேசத்தை விட்டுப்புறப்பட்டுக் காரான் ஊரிலே வாசம்பண்ணினான். மேலும் அவனுடைய தகப்பன் மரித்த பின்பு, அவ்விடத்தை விட்டு நீங்கள் இப்பொழுது குடியிருக்கிற இத்தேசத்துக்கு வந்து,

5 குடி இருக்கும்படி செய்தார்.—இதில் ஒரு அடி நிலத்தையாகிலும் அவனுக்குச் சுதந்தரமாகக் கொடாமல், அவன் பிள்ளையில்லா திருந்த காலத்திலே உனக்கும் உனக்குப் பின்வரும் உன் சந்ததிக்கும் இதைக் காணியாட்சியாகத் தருவேனென்று அவனுக்கு வாக்குத்தத்தம் பண்ணினார்.—

6 அன்றியும் பராபரன் அவனுடனே சொன்னது, உன்னுடைய சந்ததியார் அன்னிய தேசத்திலே குடியிருப்பார்கள். அத்தேசத்தார் அவர்களை அடிமைகளாக்கி நானூறு வருஷம் உபத்திரவப்படுத்து

7 வார்கள்.—அவர்கள் அடிமைவேலை செய்யும் அந்தத்தேசத்தாரையோ நான் ஆக்கினைக் குட்படுத்துவேன். அதற்குப் பின்பு உன் சந்ததியார் புறப்பட்டு வந்து இவ்விடத்திலே எனக்கு ஆராதனைசெய்வார்

8 களென்று பராபரன் சொன்னார்.-அன்றியும் விருத்தசேதனம் பண்ணுதலை அவர் அவனுக்கு ஏற்படுத்தினார், அந்தப்படியே அவன் ஈசாக்கைப் பெற்றபொழுது, எட்டாம்நாளிலே அவனுக்கு விருத்தசேதனம் பண்ணினான். ஈசாக்கானவன் யாக்

கோலையும் யாக்கோப்பானவன் கோ
த்திரத் தலைவராகிய பன்னிரண்டுபேரை
யும் பெற்று, அவர்களுக்கு விருத்தசேத
9 னம் பண்ணினார்கள்.—பின்பு கோத்திரத்
தலைவராகிய அவர்கள் பொறாமைகொண்
டு, யோசேப்பை எகிப்தத்துக்குப், (போ
ன வியாபாரிகளுக்கு)விற்றுப் போட்டா
10 ர்கள்.—பராபரனோ அவனுடையபங்கிலி
ருந்து, எல்லா உபத்திரவங்களில் நின்று
ம் அவனைத் தூக்கி எடுத்து, எகிப்பத்து
வின் இராசாவாகிய பார்வோனுக்கு முன்
பாக அவனுக்குக்கிருபையையுஞ் ஞானத்
தையுங் கொடுத்தார். அந்த இராசா அவ
னை எகிப்பத்துத் தேசத்திற்குந் தன் குடு
ம்பமெல்லாவற்றிற்குந் துரையாக வைத்
11 தான்.—பின்பு எகிப்பத்துக், கானான்தே
சங்கள் முழுவதும் பஞ்சமும் மிகுந்த உ
பத்திரவமும் உண்டாயின. நம்முடையபி
தாக்களுக்கும் ஆகாரங்கிடைத்ததில்லை.—
12 அப்பொழுது எகிப்பத்திலே தானியமு
ண்டென்று யாக்கோபு கேள்விப்பட்டு,
நம்முடைய பிதாக்களை முதலந்தரம்
13 (அவ்விடத்துக்கு) அனுப்பினான்.—இர

ண்டாந்தரஞ் யோசேப்புத் தன் சகோத
ரருக்கு அறியப்பட்டான். அல்லாமலும்
யோசேப்பினுடைய வமிசம் பார்வோனு
14 க்குத் தெரிய வந்தது.—பின்பு யோசே
ப்புத் தன் தகப்பன் யாக்கோபும் (மற்ற)
இனத்தார் யாவருமாகிய எழுபத்தைந்து
15 பேரையும் அழைக்க அனுப்பினான்.—அ
ந்தப்படி யாக்கோபு எகிப்பத்துக்குப்
போனான். பின்பு அவனும் நம்முடைய
பிதாக்களும் மரித்து, அங்கே இருந்து
சிகேம்ஊருக்குக் கொண்டு வரப்பட்டு.-
16 ஆபிரகாஞ் சிகேமின் தகப்பனாகிய எமோ
ருடைய சந்ததியாரிடத்தில் விலைக்கிரயமா
க வாங்கி இருந்த கல்லறையில் வைக்கப்பட்
17 டார்கள்.—பின்பு ஆபிரகாமுக்குப் பரா
பரன் ஆணையிட்டுப்பண்ணின வாக்குத்த
த்தத்தின் காலஞ் சமீபமான பொழுது,
யோசேப்பை அறியாத வேறொரு இராசா
18 தோன்றின காலமளவுஞ்.—சனங்கள் எகி
ப்பத்திலே அதிகமாய்ப் பெருகினார்கள்
19 —அவன் நம்முடைய வமிசத்தாரைக் கு
றித்து, வஞ்சனையாய் நடந்து, நமது பி
தாக்களுடைய குழந்தைகள் உயிரோடிரா

நபடிக்கு, அவர்கள் அவைகளை வெளியே
போட்டுவிடும்படி செய்து, அவர்களை உ
20 பத்திரவப் படுத்தினுன்.—அக்காலத்திலே
மோசே என்பவன் பிறந்து பராபரனு
லே அழகுள்ளவனுயிருந்து மூனறுமாதந்
தன் தகப்பனுடையவீட்டிலேவளர்க்கப்ப
21 ட்டான்.-அவனும்வெளியே போட்டுவிட
ப்பட்டபொழுது, பார்வோனுடைய கு
மாரத்தி அவனையெடுத்துத் தனக்குக் கு
22 மாரனுகவளர்த்தாள்.-அதினுலேமோசே
எகிப்தத்தாருடையகலவிகள் யாவையும்ப
டித்துக்கொண்டு, வசனங்களிலேயுஞ் செ
23 ய்கைகளிலேயும் வல்லவனுயிருந்தான்.-அ
வன் நாற்பது வயதுள்ளவனுனபொழுது
இஸ்ரவேற் சந்ததியாராகிய தன்னுடைய
வமிசத்தாரைச்சந்தித்துப்பார்க்கும்படி
விருப்பமுள்ளவனுகிப் போனபொழுது
24 அநியாயம்அனுபவிக்கிறஒருவனைக்கண்டு
(அவனைக்) காப்பாற்றி, எகிப்தத்தானை
வெட்டி இவ்விதமாய உபாதிப்பட்டவனு
25 க்காகப் பழிவாங்கினுன்.—அன்றியும் அ
வன் தன்கையினுலே பராபரன் தங்களுக்
கு இரட்சிப்பைத் தருவாரென்று தன்வ

பிசத்தார் அறிந்துகொள்வார்கள் என்று நினைத்தான். அவர்களோ அப்படி அறிந்
26 து கொள்ளவில்லை.—மறுநாளிலே சண்டை பண்ணிக்கொண்டிருக்கிற சிலருக்கு அவன் தன்னைக் காண்பித்துப், புருஷரே நீங்கள் சகோதரரானவர்கள். நீங்கள் ஒருவருக்கு ஒருவர் அநியாயஞ் செய்கிறதென்ன என்று அவர்களைச் சமாதானப்படு
27 த்தும்படி பேசினான்.—(அவர்களிற்) பிறனுக்கு அநியாயஞ் செய்தவனோ, எங்களுக்கு உன்னைத் தலைவனென்றும், நியாயாதி
28 பதியென்றும், வைத்தவன் எவன்!—நேற்று நீ அந்த எகிப்பத்தானைக் கொலைசெய்ததுபோல், என்னையுங் கொலைசெய்ய மனசாயிருக்கிறாயாவென்று அவனைத் தள்
29 ளினான்.—இந்த வார்த்தையினாலே மோசே ஓடிப்போய், மீதியான் தேசத்தில் அன்னியனாய்ச் சஞ்சரித்து, அங்கே இர
30 ண்டு குமாரனைப் பெற்றான்.—அன்றியும் நாற்பது வருஷஞ் சென்ற பின்பு சீனாமலையின் வனாந்தரத்திலே பராபரனுடைய தூதனானவர் ஒரு முட்செடி எரிகிற அக்கினிச் சுவாலையில் அவனுக்குத் தரிசனை

31 யாஞர்.—மோசே அதைக் கண்டு, அ
த்தரிசனையைக்குறித்து அதிசயப்பட்டு
அதைப் பார்க்கும்படி சேர்ந்து வருகிற
32 பொழுது பராபரனவர்.—நான் உன்பி
தாக்களாகிய ஆபிரகாமுடைய தேவனுமா
ய் ஈசாக்கினுடைய தேவனுமாய் யாக்கோ
பினுடைய தேவனுமாய் இருக்கிறபராப
ன் என்று திருவுளம் பற்றின சத்தம் அவனு
க்குத் தோன்றிற்று. அப்பொழுது மோ
சே நடுக்கம் அடைந்து (அதினாலே அதை
ப்) பார்க்கும்படி துணியாமல் இருந்தா
33 ன்.—பின்னும் பராபரன் அவனுடனே
சொன்னது, நீ நிற்கிற இடம் பரிசுத்த
பூமி ஆகையால், உன் பாதஇரட்சைகளை
34 க்கழற்றிப் போடு,—எகிப்பத்தில் இருக்
கிற என்னுடைய சனங்களின் உபத்திரவ
த்தை நான்பார்க்கவே பார்த்து அவர்களு
டைய தவிப்பைக் கேட்டு, அவர்களை விடு
விக்கும் படிக்கு இறங்கினேம், ஆகையா
ல் நீ வர நான்உன்னை எகிப்பத்துக்கு அனு
35 ப்புகிறேன் என்றார்.—உன்னைத் தலைவன்
என்றும், நியாயாதிபதி என்றும், வைத்த
வன் எவனென்று, அவர்கள் சொல்லி மறு

தலத் திருந்த அந்தமோசேயையே பரா
பரன் முட்செடியில் அவனுக்குத் தரி
சனையான தூதனாலே தலைவனாகவும் மீட்
36 பனாகவும் அனுப்பினார்.—அவனே அவர்க
ளை அங்கேயிருந்து அழைத்துக்கொண்டு
வந்து.எகிப்பத்துத் தேசத்திலேயுஞ் சிவ
ந்தசமுத் திரத்திலேயும் நாற்பது வருஷக்
காலமாய் வனாந்தரத்திலேயும் அற்புதங்க
ளையுந் திருட்டாந்தங்களையுஞ் செய்தான்.-
37 அந்த மோசேயே இஸ்ரவேற் சந்ததியா
ரை நோக்கி,உங்களுக்காக உங்கள் தேவ
னாகிய பராபரன் உங்கள் வமிசத்திலிருந்
து என்னைப்போல ஒரு தீர்க்கதரிசியை
எழும்பப் பண்ணுவார் அவருக்குச் செ
விகொடுப்பீர்களாக என்று சொன்னவ
38 ன்.—அவனே சீனாமலையிலே தன்னுடனே
பேசின தூதரோடும் நம்முடைய பிதா
க்களோடுங் கூட வனாந்தரத்திலே சபைக்
குள்ளே இருந்து நமக்குக் கொடுக்கும்
39 படி சீவவாக்கியங்களைப் பெற்றவன்—நம்
முடைய பிதாக்களோ அவனுக்குக் கீழ்ப்
படிய மனதாயிராமல் அவனைத் தள்ளி
எகிப்பத்துத்தேசத்துக்கு மனந்திரும்பி,

40 ஆரோனை நோக்கி எகிப்பத்துத் தேசத்தி லிருந்துஎங்களைஅழைத்துக்கொண்டுவந் த அந்தமோசேக்குச் சம்பவித்ததை அறி யோம், ஆதலால் எங்களுக்கு முன்பாக நடக்குந் தேவர்களை நீர் எங்களுக்காக உண்டுபண்ண வேண்டும் என்று சொல்லி

41 —அந்நாட்களில் ஒரு கன்றுக்குட்டியை ச் செய்து, அந்த விக்கிரகத்துக்குப் பலி யிட்டுத் தங்கள் கைகளாற் செய்த கிரியை களைக் குறித்துச்சந்தோஷிப்பட்டார்கள்.

42 —அப்பொழுது பராபரன் அவர்களை விட்டுத் திரும்பி, வானத்திலுள்ள சேனை யைப்பணிந்துகொள்ளும்படி அவர்களை ஒப்புக் கொடுத்து விட்டார். (அதைக் குறித்து) இஸ்ரவேற் குடும்பத்தாரே, நீங்கள் வனாந்தரத்தில் இருந்த நாற்பது வருஷம் வரையிலே காணிக்கைகளையும் பலிகளையும் எனக்குச் செலுத்தினீர்களோ

43 —பணிந்துகொள்ளும் படிக்கு நீங்கள் செய்த சொரூபங்களாகிய மோளோகினு டையசப்பரத்தையும் உங்கள் தேவனாகிய இரம்பான் என்னும் நட்சத்திரத்தையும் எடுத்து வந்தீர்களே. ஆதலால் நான் உங்

களைப் பாபிலோனுக்கு அப்புறத்திலேகு
டியிருக்கும்படி போகப் பண்ணுவேன
என்று தீர்க்கதரிசிகளின் புத்தகத்திலே எ
4 ழுதியிருக்கின்றதே.—மேலும் நீ பார்த்த
மாதிரியின்படியே சாட்சிப் பொருளை உ
டைய கூடாரத்தைச் செய், என்று மோ
சேயுடனே பேசிக்கொண்டவர் கட்டளை
யிட்ட பிரகாரமாக, அது வனாந்தரத்தி
லே நம்முடையபிதாக்களுக்குள்ளே இரு
5 ந்தது—.மேலும் யோசுவாவுடனே கூட
நம்முடைய பிதாக்கள் அதைப் பெற்று
க்கொண்டு, தங்களுக்கு முன் நின்று பரா
பரன் துரத்தின அஞ்ஞானிகளுடைய தே
சத்துக்குள்ளே அதைக் கொண்டுவந்து,
தாவீது இருந்த நாள்வரைக்கும் வைத்தி
ருந்தார்கள்.—அவன் பராபரனிடத்திலே
தயவு பெற்றபடியினாலே, யாக்கோபினு
டையதேவனுக்காக ஒரு வாசஸ்தலத்தைக்
கட்டும்படிக்கு உத்தரவு கேட்டுக்கொண்
டான்.—(அவனோ! அல்ல) சாலமோன்
அவருக்காக ஆலயத்தைக் கட்டினான்.—
உன்னதமானவரோ வானம்எனக்கு ஆ
சனமாயும் பூமி என்னுடைய பாதபடி

யாயும் இருக்கின்றது எனக்காக நீங்க
எப்படிப்பட்ட ஆலயத்தைக் கட்டுவீர்க
ள்! அல்லது நான் தங்கும்படிக்கு ஏற்ற
49 ஸ்தலமேது!— இவை எல்லாவற்றை
ம் என்னுடைய கை உண்டாக்கினதி
ல்லையோ! என்று பராபரன் திருவுள
பற்றுகிறார் என்று தீர்க்கதரிசி சொல்லு
50 படியே.—கைகளாற் செய்யப்பட்ட ஆ
யங்களில் வாசமாய் இருக்கமாட்டார்.—
51 ஆ, வணங்காத கழுத்துள்ளவர்களே! இரு
தயமும் காதும் விருத்தசேதனம் பெற்
றிராதவர்களே! உங்கள் பிதாக்களைப்போ
ல நீங்களும் பரிசுத்த ஆவியை எப்பொ
52 ழுதும் விரோதிக்கிறீர்கள்.—தீர்க்கதரி
சுகளில் யாரை உங்கள் பிதாக்கள் துன்ப
படுத்தாமல் இருந்தார்கள்! நீதிபரர் வரு
கையைமுன் அறிவித்தவர்களையும் அவர்
ள்கொலைசெய்தார்கள், அவருக்கே நீங்கள்
இப்பொழுது துரோகிகளுமாய் அவரை
க கொலை செய்தவர்களுமாய் இருக்கிறீர்
53 கள்.—தேவதூதரின் அணிவகுப்புக்களு
க்குள்ளே வேதப் பிரமாணத்தைப் பெ
ற்றுக் கொண்டிருந்தும் அதைக் கைக்

கொள்ளாமல் இருக்கிறீர்கள் என்றுசொ
ல்லு.

54 அவர்கள் அவைகளைக் கேட்டுத் தங்கள்
இருதயங்களில் அறுக்கப் பட்டவர்களா
ய் அவனைக்குறித்துப் பற்கடித்தார்கள்.-
55 அவனோ பரிசுத்த ஆவியினாலே நிறைந்து
வானத்தை அண்ணாந்து பார்த்துக் கொ
ண்டு, பராபரனுடைய மகிமையையும்
பராபரனுடைய வலதுபாரிசத்திலே நிற்
56 கிற இயேசுவையுங் கண்டு,—இதோ, வா
னந் திறக்கப்பட்டிருக்கிறதையும் மனித
குமாரனைவர்பராபரனுடையவலதுபா
ரிசத்திலே நிற்கிறதையும் பார்க்கிறேன் எ
57 ன்று சொல்லுகிறபொழுது,—அவர்கள் மி
குந்த சத்தத்துடனே கூப்பிட்டுத், தங்கள்
58 காதுகளை அடைத்துக்கொண்டு,-ஒரும
னப்பட்டு அவன்மேலே பாய்ந்து, அவ
னைப் பட்டினத்துக்குப் புறம்பேதள்ளி,
59 அவன்மேற் கல்லெறிந்தார்கள்,—சாட்சி
களானவர்களுந் தங்கள் வஸ்திரங்களைச
சவுலென்னப்பட்ட ஒரு வாலிபனுடைய
பாதங்கள் அருகே வைத்து, இஸ்தேவா
ன்மேற்கல்லெறிந்தார்கள். அவனோ கருத்

தராகிய இயேசுவே! என் ஆவியை ஏற்று
க்கொள்ளுமென்று தொழுதுகொண்டு
60 —முழங்காற்படியிட்டு, ஆண்டவரே இவ
ர்கள்மேல் இந்தப்பாவத்தை நிறுத்தாதி
ரும என்று, மிகுந்த சத்தமாய்க் கூப்பிட்
டுப், பின்பு நித்திரை அடைந்தான். அவனை
க் கொலைசெய்கிறது சவுலென்பவனுக்கு
மிகவும் பிரியமாயிருந்தது.

---

## அ. அதிகாரம்.

1 அக்காலத்திலே எருசலேமிலுள்ள ச
பைக்கு மிகுந்த துனபம் உண்டாயிற்று.
அப்போஸ்தலர் தவிர மற்றயாவருஞ் யூ
தேயா, சமாரியா, தேசங்களிற்சிதறப்பட்
2 டார்கள்.—இஸ்தேவானையோ தேவபத்தி
யுள்ள சிலபேர்கள் எடுத்துஅடக்கம் பண்
ணி, அவனைக் குறித்து மிகவும் புலம்பி அ
3 ழுதார்கள்.—சவுலோவெனில் வீடுகள்தோ
றும் பிரவேசித்துப் புருஷரையும், ஸ்தி
ரிகளையும், வெளியே இழுத்துப்போய்க்
காவலிற் போடுவித்துச் சபையைப்பாழா

4 க்கினன்.—சிதறப்பட்ட பேர்களோ திரி
ந்து தேவ வசனத்தைச் சுவிசேஷமாய்ப்
5 பிரசித்தம்பண்ணினர்கள்.—அப்படியே
பிலிப்பு என்பவன் சமாரியாநாட்டில் உள்
ள ஒரு ஊருக்குவந்து அங்கே கிறிஸ்து
6 வைக் குறித்துப் பிரசங்கித்தான்.—அல்
லாமலும் அசுத்த ஆவிகள் அனேகம்பேரி
லிருந்து மிகுந்த சத்தத்தோடே கூப்
பிட்டு அவர்களை விட்டுப் புறப்பட்டன,
அனேக திமிர்வாதக்காரருஞ் சப்பாணிக
7 ளுங் குணமாக்கப் பட்டார்கள்.—பிலிப்
புச் செய்த அதிசயங்களைச் சனங்கள் கே
ள்விப்பட்டுங் கண்டுமிருக்கையில், அவனு
ற் சொல்லப்பட்டவைகளுக்கு ஒருமனப்
பட்டு எச்சரிக்கையாய் இருந்தார்கள்.—
8 அந்த ஊரிலே மிகுந்த சந்தோஷம் உண்
9 டாயிற்று.— அன்றியுஞ் சீமோன் என்று
பேர்கொண்ட ஒருவன்முன்னே அந்த ஊ
ரிலே ஸதம்பன வித்தைக்காரனயிருந்து
தன்னைப் பெரியவனென்று சொல்லிச்
சமாரியாநாட்டின் சனங்களைப்பிரமிக்கப்
10 பண்ணிக்கொண்டிருந்தான்.—சிறியோர்
பெரியோர் யாவரும் இவன் பராபரனு

டைய பெரிய சத்தியென்று அவனுக்கு எ
11 ச்சரிக்கையாய் இருந்தார்கள்.—அநேக
காலம் அவன் தன்னுடைய மந்திர தந்திர
ங்களினாலே அவர்களைப் பிரமிக்கச் செய்
தபடியால், அவர்கள் அவனுக்கு எச்சரிக்
12 கையாய் இருந்தார்கள்.—பின்பு பராப
ரனுடைய இராச்சியத்துக்கும் இயேசுக்கி
றிஸ்துவின் நாமத்துக்கும் ஏற்றவைகளைச்
சுவிசேஷமாய் அறிவிக்கிற பிலிப்புவை அ
வர்கள் விசுவாசித்தபொழுது, புருஷரு
ம் இஸ்திரிகளும் ஞானஸ்நானம் பெற்றார்
13 கள்.—அப்பொழுது அந்தச் சீமோனும்
விசுவாசித்து, ஞானஸ்நானம் பெற்று,
பிலிப்புவைப் பற்றிக்கொண்டு, (அவனா
லே)நடந்த அதிசயங்களையும் பலத்தசெய்
கைகளையும் பிரமிப்புடனே பார்த்தான்.

14 சமாரியா நாடு பராபரனுடைய வசன
த்தை ஏற்றுக்கொண்டதை எருசலேமிலு
ள்ள அப்போஸ்தலர் கேள்விப்பட்டபொ
ழுது, அவர்கள் பேதுருவையும் யோ
வானையும் அவர்களிடத்துக்கு அனுப்பி
15 னார்கள்.-அவர்கள்போய், அவர்களில் ஒரு
வனும் பரிசுத்த ஆவியைப்பெறும்படிக்குத்

தராகிய இயேசுவின் நாமத்தினாலே ஞான
ஸ்நானத்தை மாத்திரம் பெற்றவர்களான
16 படியினாலே—அவர்கள் பரிசுத்த ஆவியை
17 ப்பெற்றுக்கொள்ளும்படிக்கு—அவர்க
ளைக்குறித்து வேண்டுதல்பண்ணித் (தங்க
ள்)கைகளை அவர்கள்மேல் வைத்தார்கள்,
உடனே பரிசுத்த ஆவியைப்பெற்றார்கள்.
18 —அப்போஸ்தலர் தங்கள் கைகளை (அவ
ர்கள்மேல் வைத்ததினாலே பரிசுத்த ஆவி
கொடுக்கப படுகிறதைச் சீமோன் கண்ட
பொழுது, அவர்களிடத்துக்குப் பணங்
19 கொண்டுவந்து—எவன்மேலே நான் கை
களைவைப்பேனோ, அவன் பரிசுத்த ஆவி
யைப் பெறத்தக்கதாக, நீங்கள் எனக்கும்
இந்த அதிகாரத்தைக் கொடுக்க வேண்டு
20 ம் என்றான்.—அதற்குப் பேதுரு சொன்
னது, பராபரனுடைய ஈவைப் பணத்தி
னாலே சம்பாதித்துக் கொள்ளலாம் என்று
நீ நினைக்கிறபடியால், உன் பணம் உன்
னோடே கேட்டுக்குள்ளாகக் கடவது,—
21 உன் இருதயம் பராபரனுக்கு முன்பாகச்
செம்மையாய் இராதபடியால், இந்தக்கா
ரியத்திலே உனக்குப் பங்கும் பாகமுமில்

22 ஆ.—நீகசப்புள்ள பிச்சும், அநீதிக் கட்டு
முடையவனுய் இருக்கிறதைப் பார்க்கி
23 றேன்.—ஆனபடியினுலே உன் இருதயத்
தின் சிந்திப்பு உனகரு மன்னிக்கப்படக்
கூடுமானல், உன் துற்குணத்தை விட்டுக்
குணப்பட்டுப் பராபரனேநோக்கி வேண்
24 டிக்கொள்வாயாக வென்ருன்.—சீமோன்
சொன்னது, நீங்கள் உரைத்தவைகளில்
ஒன்றும் எனக்கு வராதபடிக்கு, நீங்களே
எனக்காகக் கருத்தரை வேணடிக்கொள்
25 ளுங்களென்ருன்—இவ்விதமாய் அவர்கள்
கத்தருடைய வசனத்தைச் சாட்சியாய் அ
றிவித்துச் சொன்னபின்பு, எருசலேமுக்
குத் திரும்பிச் சமாரியருடைய அனேக
கிராமங்களிற் சுவிசேஷத்தைப் பிரசங்கித்
தார்கள்.

26 அன்றியுங் கருத்தருடைய தூதன் பிலிப்
புடனே சொன்னது, நீ யெழுந்து தெற்
கே பாழாய்க்கிடக்கிற காதுசாபட்டணத்
துக்கு எருசலேமில் இருந்துபோகிற மா
27 ர்க்கத்துக்குப் போவென்ருன்.—அந்தப்
படி அவன் எழுந்து போனன், அப்பொ
ழுது எத்தியோப்பியரை ஆண்ட இராச

இஸ்திரியாகிய கந்தாகி என்பவளுடையம
ந்திரியுமாய் அவளுக்குண்டானபொக்கிஷ
ம எல்லாவற்றின் மேலும் வைக்கப்பட்ட
தலைவனுமாகிய ஒரு எத்தியோப்பிய மனி
தன் தொழுதுகொள்ளும்படி எருசலே
28 முக்கு வந்திருந்து.—ஊருக்குத் திரும்பி
த் தன் இரதத்திலுளுக்காந்து, ஏசாயாத்
தீர்க்கதரிசியின் புஸ்தகத்தை வாசித்துக்
29 கொண்டுபோனான்.—ஆவியானவர் பிலிப்
புவுடனே சொன்னது, அந்த இரதத்திற்
குச் சமீபமாய் நீ சேர்ந்து அதனோடே
30 கூடிப்போ என்றார்.—அந்தப்படி பிலி
ப்பு சேர ஓடி, அவன் ஏசாயாததீர்க்கதரி
சியின் புஸ்தகத்தை வாசிக்கக் கேட்டு, நீர்
வாசிக்கிறவைகளின் கருத்து உமக்குத்
31 தெரிந்திருக்கிறதா? என்றான்.—அவன்
சொன்னது, ஒருவன் எனக்குக் காண்பி
யாவிட்டால், அது எனக்குத் தெரியுமா?
என்று சொல்லிப், பிலிப்பு ஏறித் தன் பக்
கத்தில் உளுக்காரும்படி அவனை வேண்டி
32 க்கொண்டான்.—அவன் வாசித்த வேதவா
க்கியம் என்னவென்றால், அவர் ஒரு ஆட்
டைப்போல் அடிக்கப்படும்படி கொண்

டுபோகப் பட்டுத், தன் மயிரைக் கத்
தரிக்கிறவனுக்கு முன்பாகச் சத்தமிடாதி
ருக்கிற ஆட்டுக் குட்டியைப் போல அவர்
33 தமது வாயைத் திறவாதிருந்தார்.—அவர்
தாழ்மையாய் இருக்கையில், அவருடைய
நியாயம் எடுத்துப் போடப் பட்டது.
மேலும் அவருடைய சீவன் பூமியிலிருந்
து எடுத்துப் போடப்பட்டபடியினாலே
அவருடைய தலைமுறையாரை ஆர் விபரி
34 த்துச்சொல்லுவார்கள் என்பதே—மந்தி
ரியானவன் பிலிப்புவை நோக்கித் தீர்க்க
தரிசி தன்னைக் குறித்ததோ, மற்றொருவ
னைக் குறித்தோ ஆரைக் குறித்து இதைச்
சொன்னான்? அதை நீர் எனக்குச் சொல்
லும்படி வேண்டிக்கொள்ளுகிறேன் என்
35 றான்.—அப்பொழுது பிலிப்பு உத்தரவு
சொல்ல அந்த வேதவாக்கியத்தைத் தொ
டங்கி, இயேசுவின் சுவிசேஷத்தை அவ
36 னுக்குப் பிரசங்கித்தான்.—இவ்விதமாய்
அவர்கள் வழிநடந்துபோகையில் தண்
ணீருள்ள ஓரிடத்திலே வந்தபொழுது,
மந்திரியானவன் சொன்னது, இதோ, த
ண்ணீர், நான் ஞானஸ்நானம் பெற்றுக்

கொள்ளுகிறதற்குத் தடை என்ன? என்
37 றான்.—அதற்குப் பிலிப்பு சொன்னது,
நீர் பூரண இருதயத்தோடும் விசுவாசத்
தாற் பெற்றுக் கொள்ளலாம் என்றான்.
அவன் சொன்னது, இயேசுக்கிறிஸ்துவை
ப் பராபரனுடைய குமாரனென்று விசு
வாசிக்கிறேனென்று சொல்லி, இரதத்தை
38 நிறுத்தச்சொன்னான்.-பின்பு பிலிப்புவும்
மந்திரியும் இருவரும் இறங்கித தண்ணீ
ரிற் பிரவேசித்தார்கள். அங்கே அவனுக்
39 கு ஞானஸ்நானங்கொடுத்தான்.—அவர்க
ள் தண்ணீரிலிருந்து ஏறின பொழுது, க
த்தருடைய ஆவியானவர் பிலிப்புவை எடு
த்துக் கொண்டார். அதுமுதல் மந்திரி
யானவன் அவனைக் காணமற் சந்தோஷித்
40 தோடே தன் வழியே போனான்.—பிலிப்
புவோ ஆசோத்துப் பட்டினத்திலே கா
ணப்பட்டுப் பின்பு பிரயாணமாய்ப் போ
ய்ச் செசாரியாப் பட்டினத்திற்கு வரும்
பரியந்தஞ் சகல பட்டினங்களிலேயுஞ்
சுவிசேஷத்தைப் பிரசங்கித்துத் திரிந்
தான்.

## ௯. அதிகாரம்.

1 சவுலோவெனிற் பின்னுங் கர்த்தரு டைய சீஷரைப் பயப்படுத்திக் கொலை செய்யும்படி சீறிப் பிரதான ஆசாரியனி
2 டத்துக்குப் போய்த்.-தமஸ்கு ஊரிலே புருஷரையாகிலும், ஸ்திரிகளையாகிலும், இந்த மார்க்கத்தாரென்று கண்டால், அவர்களைக் கட்டி, எருசலேமுக்குக் கொண்டு வரும்படிக்கு, அவ்வூரிலுள்ள ஆலயத் தலைவருக்கு நிருபங்களைக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு
3 போனான்.-அவன் பிரயாணமாய்ப் போய்த் தமஸ்கு ஊருக்குச் சமீபமாகையிற், சடுதியாய் வானத்திலிருந்து பிரகாசந் தோன்றி, அவனைச் சூழ்ந்து கொ
4 ண்டது.-உடனே அவன் தரையிலே விழுந்து, சவுலுவே? சவுலுவே? ஏன் நீ என்னைத் துன்பப்படுத்துகிறாய்? என்று தன்னுடனே சொல்லுகிற சத்தத்தைக் கே
5 ட்டு, ஆண்டவரே! நீர் யார்? என்றான்.— கர்த்தரானவர் சொன்னது, நீ துன்பப்படுத்துகிற இயேசுவே நான், முள்ளில் உதைகிறது உனக்குக் கடினமாம் என்றார்

6 —அவன் நடுங்கிப் பயந்து, ஆண்டவரே நான் என்ன செய்ய வேண்டுமென்றிருக்கிறீர்! என்றான். அதற்குக் கத்தர் சொன்னது, நீ எழுந்து, ஊரிற் பிரவேசிப்பாயாக. நீ செய்ய வேண்டுவது அங்கே
7 உனக்குச் சொல்லப்படுமென்றார்.—அவனுடனே கூடப் பிரயாணப்பட்டு வந்த பேர்களோ சத்தத்தைக் கேட்டும், ஒருவரையுங் காணாமற் பிரமிப்போடே நின்றா
8 ர்கள்.—பின்பு சவுலு தரையிலிருந்து எழுந்து தன் கண்களைத் திறக்கிறபொழுது ஒருவனையுங் காணாதவனாயிருந்தான், ஆதலால் அவர்கள் அவனைக் கைலாகுகொடுத்துத் தமஸ்குவூருக்கு அழைத்துக்கொண்
9 டு போனார்கள்.- அங்கே அவன் மூன்றுநாட் பார்வை யில்லாமலும், புசியாமலும் பானம்பண்ணாமலும் இருந்தான்.—
) அன்றியுந் தமஸ்குவூரில் அனனியா என்று பேருள்ள ஒரு சீஷனிருந்தான், அவனுக்குக் கத்தர் தரிசனையாகி, அனனியாவே! என்றார்.—அவன் ஆண்டவரே இதோ அடியேன என்றான்.—கத்தர் அவனுடனே சொன்னது, செம்மை என்

னப்பட்ட தெருவிலே யூதாவின் வீட்டில்
தருசுவூராளுகியசவுலுஎன்பவன்இப்பொ
12 ழுதேவேண்டுதல பண்ணுகிருன்.-அல்லா
மலும் பார்வை அடையுமபடிக்கு அவன்
தரிசனத்திலே அனனியா என்று பேரு
ள்ள மனிதன் உள்ளே வரவுங் கையைத்
தன்மேல் வைக்கவுங் கண்டான், ஆதலால்
நீ எழுந்து, அங்கேபோய் அவனைத் தே
13 டுவாயாகவென்ருர்.—அதற்கு அனனியா
சொன்னது, ஆண்டவரே! அந்த மனித
னைக்குறித்து நான் அனேகராலே கேள்
விப்பட்டிருக்கிறபடி, அவன் எருசலேமி
லுள்ள உம்முடைய பரிசுத்தவான்களுக்கு
எத்தனை பொல்லாங்குகளைச் செய்தான்.
14 —இங்கேயும் உம்முடைய நாமத்தைத்
தொழுதுகொள்ளுகிற யாவரையுங் கட்டு
ம்படிக்கு, அவன் பிரதான ஆசாரியரால்
அதிகாரம் பெற்றிருக்கிருனே, என்று
15 ன்.—அதற்குக் கத்தர் சொன்னது, அ
வன் என்னுடைய நாமத்தினிமித்தம் இ
வ்வளவு பாடுபடவேண்டுமென்று அவனு
16 க்குக் காண்பிப்பேன்.—ஆதலாற் புறத்
தேசத்தார்களுக்கும் இராசாக்களுக்கு

ம் இஸ்ரவேற் சனங்களுக்கும் என்னு
டைய நாமத்தை அறிவிக்கும்படிக்கு, அ
வன் எனக்கு விசேஷமாகத் தெரிந்து
கொள்ளப்பட்ட ஊழியக்காரனாய் இரு
க்கிறான். ஆகையால் நீ போவாயாக என்
17 றார்.—அப்பொழுது அனனியா போய்
வீட்டுக்குட் பிரவேசித்துக் கைகளை அவ
ன்மேல்வைத்துச் சகோதரனாகிய சவுலு
வே? நீ வந்தவழியிலே உனக்குத் தரிசனை
யான இயேசு என்னுங் கத்தாவானவர்
நீ பார்வை அடைந்து பரிசுத்த ஆவியினா
லே நிரப்பப்படும்படிக்கு என்னை அனு
18 ப்பினார் என்றான்—உடனே அவனுடைய
கண்களிலிருந்து மீன் சிலாம்புகளைப்
போல விழுந்துபோக, அவன் பார்வை
அடைந்து எழுந்திருந்து, ஞானஸ்நானம்
19 பெற்றுப்,—பின்பு போசனம்பண்ணித்
திடப்பட்டான். பின்பு சவுல் என்பவன்
தமஸ்குவூரிலுள்ள சீஷருடனே சிலநாள்
20 இருந்தான்.—அல்லாமலும் இயேசுவான
வரே, பராபரனுடைய குமாரன என்று
அவன் உடனே தேவாலயங்களிற் பிர
21 சங்கித்தான்.—(அதைக்)கேட்டயாவரும்

பிரமிப்படைந்து, எருசலேமில் இந்த
நாமத்தைத் தொழுது கொள்ளுகிறவர்க
ளைப் பாழாக்கி, இங்கேயும் அப்படிப்ப
ட்டவர்களைக் கட்டிப் பிரதான ஆசாரிய
ரிடத்துக்குக் கொண்டுபோகும்படி வந்
தவன் இவன் அல்லவோ என்றார்கள்.—
22 சவுலோவெனில் அதிகமதிகமாகத் திடன்
கொண்டு இவரே கிறிஸ்து என்று திரு
ட்டாந்தரப்படுத்தித் தமஸ்குவூரிற் குடி
இருக்கிற யூதர்களைக் கலங்கப்பண்ணினா
23 ன்.—அநேகநாட் சென்ற பின்பு, யூதர்
கள் அவனைக் கொலைசெய்ய ஆலோசனை
பண்ணினார்கள். அவர்களுடைய யோசனை
24 யோ சவுலுவுக்குத் தெரியவந்தது.—அ
வனைக் கொலைசெய்யும்படிக்கு அவர்கள்
இரவும் பகலுங் கோட்டை வாசல்களைக்
25 காத்துக் கொண்டு இருந்தார்கள்.—அப்
பொழுது சீஷர் இராத்திரியிலே அவனை
எடுத்துக்கொண்டு ஒரு கூடையில் வைத்
து மதிலின்வழியாய் இறக்கிவிட்டார்கள்
26 பின்பு சவுலு எருசலேமுக்கு வந்து சீ
ஷரைச் சேர்த்துக்கொள்ளப்பார்த்தான்
அவர்கள் எல்லாரும் அவனைச் சீஷனென்

று நம்பாமல், அவனுக்குப் பயப்பட்டா
27 ர்கள்.—ஆனாலும் பருனபா என்பவன்
அவனைச் சேர்ந்துகொண்டு அப்போஸ்த
லரிடத்துக்கு அழைத்துவந்து வழியிலே
அவன் கத்தாவைக் கண்ட விதத்தையும்
அவர் அவனுடனே பேசினதையுந் தமஸ்
கு ஊரில் அவன் இயேசுவின் நாமத்தினா
லே தயிரியமாய்ப் பிரசங்கம் பண்ணின
தையும் அவர்களுக்கு விபரித்துச் சொன்
28 னான்.—அதின் பின்பு அவன் எருசலேமி
லே அவர்களுடனே கூடப் போகிறவனு
29 மாய் வருகிறவனுமாய் இருந்து,-கத்தரா
கிய யேசுவின் நாமத்தின்மேலே தயிரிய
மாயப் பிரசங்கம்பண்ணிக, கிரேககருட
னேயும் பேசிக்கொண்டு, தருக்கம் பண்
ணினான். அவர்களோ அவனைக்கொலைசெ
30 ய்யத் தேடினார்கள்.—சகோதரர் அதை
அறிந்து, அவனைச் சேசாரியாப்பட்டின
த்துக் கழைத்துப்போய்ப், பின்பு தருசு
31 ஊருக்கு அனுப்பினார்கள்.-அப்படியிருக்
குங் காலத்தில், யூதேயா, கலிலேயா, ச
மாரியா, நாடுகளெங்குஞ் சபைகள் சு
மாதானம் பெற்றிருந்து, கருத்தருக்குப்

பயப்படுகிற பயத்திலேயும் பரிசுத்த ஆவியின் போதிப்பிலேயும் வளர்க்கப்பட்டு நடந்து பெருகின.

32 பேதுரு என்பவன் அவர்களெல்லாருக்குள்ளுஞ் சென்றுவருகையில், உலித ஊரிலே குடியிருக்கிற பரிசுத்தவான்களிடத்திற்கும் வந்தான்.—அங்கே எட்டு வருடமாகக் கட்டிலின் மேற் கிடந்த திமிர்வாதமுள்ள ஐநேயா என்பவனைக் கண்டான். அவனுடனே பேதுரு சொன்னது,—ஐநேயாவே! இயேசுக்கிறிஸ்து உன்னைக் குணமாக்குகிறார். நீ எழுந்து, உன் படுக்கையை நீ தானே போட்டுக்கொள் என்றான். உடனே அவன் எழுந்திருந்தான்.—உலித ஊரிலுஞ் சாரோன் திசையிலுங் குடி யிருந்தவர்கள் எல்லாரும் அவனைக் கண்டு கத்தரிடத்திற்கு மனந்திரும்பினார்கள்.

36 அன்றியும், யோப்பாப் பட்டினத்திலே தொற்காள் என்று அருத்தங் கொள்ளுகிற தபீத்தாள் என்னப்பட்ட ஒரு சீஷி இருந்தாள். அவள் மிகுந்த நற்கிரியைகளையுந் தருமங்களையும் நிறைவாய்ச செய்

1 து கொண்டு வந்தவள்.—அக்காலத்திலே அவள் வியாதிப்பட்டு மரணமடைந்தாள். அவளை அவர்கள் குளிப்பாட்டி, மேல் வீட்டிலே கிடத்தி வைத்தார்கள்.—
8 யோப்பாப் பட்டினமோ லித ஊருக்குச் சமீபமான படியினாலே, பேதுரு அவ்விடத்தில் இருக்கிறான் என்று சீஷர்கள் கேள்விப்பட்டு, அவன் தாமசம் இல்லாமல் தங்களிடத்துக்கு வரவேண்டும் என்று வேண்டிக்கொள்ளும் படிககு இரண்டு மனிதரை அவ்விடத்துக்கு அனுப்
39 பினார்கள்.—அந்தப்படி பேதுரு எழுந்து அவர்களுடனே கூடப்போனான். அவன் வந்து சேர்ந்த பொழுது, அவர்கள் அவனை மேல்வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனார்கள். அப்பொழுது சகல கைம்பெண்களும் அவன் அருகே வந்து நின்று, அழுதுகொண்டு, தொற்காள் தங்களுடனே கூட இருக்கையிற் செய்த அங்கிகளையும், வஸ்திரங்களையுங் காண்பித்தா
40 ர்கள்.—பேதுருவோ எல்லாரையும் வெளியேபோகப்பண்ணிப் பின்பு முழங்காற்படியிட்டு வேண்டுதல் பண்ணிப் பின்பு

சவத்தின் புறமாய்த் திரும்பித், தபீத்தாளே! எழுந்திரு என்றான். அப்பொழுது அவள் தன் கண்களைத் திறந்து, பேதுருவைப்
41 பார்த்து உளுக்காந்தாள்.-அவன் அவளுக்குக் கை கொடுத்து, அவளை எழுந்திருக்கப்பண்ணிப் பரிசுத்தவான்களையுங் கைம்பெண்களையும் அழைத்து, அவளையும் உயிருள்ளவளாக அவர்களுக்கு முன் நி
42 றுத்தினான்.-அது யோப்பாப் பட்டினத்தில் எங்கும் அறியப்பட்ட பொழுது, அனேகம்பேர் கருத்தாவின் இடத்தில் வி
43 சுவாசமானார்கள்,—அவன் யோப்பாப் பட்டினத்திலே தோற்பதனிடுகிறவனாகிய சீமோன் என்பவன் இடத்திலே அனேக நாள் தங்கினான்.

---

## ௰. அதிகாரம்.

1 அன்றியுஞ் சேசாரியாப் பட்டினத்திலே இத்தாலியா என்னப்பட்ட தண்டிலே நூற்றுக்குச் சேனைத் தலைவனாகிய கொருனேலி என்பவன் இருந்தான்—அவன் தன் கு

டும்பத்தார் யாவரோடுங் கூடத தேவபத்
தி யுள்ளவனுமாய்ப் பராபரனுக்குப் பய
ப்படுகிறவனுமாய் இருந்து, சனங்களுக்
கு மிகுந்த தருமங்களைச் செய்து, எப்
பொழுதும் பராபரனை நோக்கி, வேண்
3 டுதல் பண்ணிக் கொண்டிருந்தான்.-பக
லிலே ஏறக்குறைய ஒன்பதாம் மணிநேர
த்தில் அவன் தரிசனை அடைந்து, தன்னி
டத்திற் பராபரனுடைய தூதன் பிரவேசி
க்கவுங் கொருநேலியே! என்றுசொல்ல
4 வும் பிரத்தியட்சமாகக் கண்டு,—அவனை
உற்றுப் பார்த்துப, பயம் அடைந்து,
ஆண்டவரே! என்ன? என்றான். அப்
பொழுதுஅவன் சொன்னது, உன்வேண்
டுதல்களையும் உன்தருமங்களையும் பராபர
ன் திருவுளத்தில் எண்ணியிருக்கிறார்.—
5 ஆதலால் யோப்பாப் பட்டினத்திலேகட
லின் அருகான வீட்டிலே வாசம்பண்ணி
த் தோற் பதனிடுகிறவனாய் இருக்கிற சீ
மோன் என்பவன் இடத்திலே பேதுரு எ
ன்று பேர் கொண்ட சீமோன் தங்கி இரு
6 க்கிறான்.—அவனை அழைத்து வரும்படி
க்கு நீ மனிதரை அவ்விடத்திற்கு அனுப்

பு. நீ செய்யவேண்டுவதை அவன் உண
7 குச் சொல்லுவான் என்றான்.—கொ
ரேலியுடனே பேசின தேவதூதன் பே
ன பின்பு, அவன் தன் வீட்டு மனிதரில்
இரண்டுபேரையுந் தன்னிடத்திற் காத்
ருக்கிற போர்ச் சேவகரில் தேவபத்தி
8 ள்ள ஒருவனையும் அழைத்து,—எல்லா
ற்றையும் அவர்களுக்கு விபரித்துச் செ
ல்லி, அவர்களை யோப்பாப் பட்டணத்தி
9 க்கு அனுப்பினான்.—மறுநாளிலே அவர்க
ள் பிரயாணமாய் அந்தப் பட்டினத்துக்கு
ச் சமீபமாய்ச் சேருகையிற், பேதுரு ஆ
றும்மணிநேரத்திலேவேண்டுதல்பண்ணு
ம்படிக்கு, வீட்டின் மேல் ஏறினான்.—
10 அப்பொழுது அவன்மிகுந்த பசி அடைந்
து, சாப்பிட மனதாய் இருந்தான். அத
ற்காக அவர்கள் எத்தனம் பண்ணுகையி
11 ல்,—அவன் ஞான திருஷ்டி அடைந்து,
(அதிலே) வானந் திறந்திருக்கவும் நான்கு
தொங்கல் கட்டப்பட்ட பெரிய துப்பட்
டியைப்போல ஒரு கூடு தன்னிடத்திற்கு
இறங்கித் தரையில விடப்பட்டிருக்க
12 வும்,—அதிலே பூமியிலுள்ள சகல வித

மான நாலுகாற் சீவனகளுங் காட்டு மிரு
கங்களும் ஊர்வனவுகளும் ஆகாசத்துப்
பறவைகளும் இருக்கவுங் கண்டான,—
அல்லாமலும், பேதுருவே! எழுந்திரு.
அடித்துப் புசி என்று ஒரு சத்தம் அவனு
க்கு உண்டாயிற்று.—அதற்குப் பேதுரு
ஆண்டவரே! அப்படி அல்ல ஏலாததாயு
ம் அசுத்தமாயு மிருக்கிறதை நான ஒரு
க்காலும் புசிக்கவில்லையே, எனறான.—
அப்பொழுது பராபரன சுத்தமாக்கின
வைகளை நீ அசுத்தம எனறு எண்ணுதிரு
ப்பாயாகவெனறு இரண்டாந்தரஞ் சத்
6 தம் அவனுக்குண்டாயிற்று,—மூனறாந்
தரமும் அப்படியே உண்டாயிற்று. பி
னபு அந்தக் கூடு திரும்ப வானத்துக்கு
7 எடுத்துக் கொள்ளப் பட்டது.—அப்
பொழுது பேதுரு, தான் கண்ட தரி
சனையின் கருத்தைக் குறித்துத் தனக்கு
ள்ளே சந்தேகப் படுகையிற், கொரு
நேலியினால் அனுப்பப்பட்ட மனிதர் சீ
மோனுடைய வீட்டை விசாரித்துக்கொ
8 ண்டு, வாசற்படியிலே நின்று,—பேது
ரு என்று பேர்கொண்ட சீமோன் இங்

கே தங்கி இருக்கிறானா? என்று சத்தமிட்

19 டுக் கேட்டார்கள்.—அப்பொழுது பே

துரு அந்தத் தரிசனையைக் குறித்துச்

சிந்தனை பண்ணிக் கொண்டிருக்கையில்

20 —மூன்று மனிதர் உன்னைத் தேடுகிறார்கள்.

அவர்களை நான் அனுப்பினேன் ஆதலால்

நீ எழுந்து தாழ இறங்கி, ஒன்றுக்குஞ் சந்

தேகப்படாமல் அவர்களுடனே கூடப்

போவாயாக, என்று ஆவியானவர் அவ

21 னுக்குச் சொன்னார்.—அந்தப்படி பே

துரு, கொருநேலியினாலே தன்னிடத்தில்

அனுப்பப்பட்ட மனிதரிடத்திற்கு இற

ங்கிப்போய், நீங்கள் தேடுகிறவன் நான்

தான்; நீங்கள் வந்திருக்கிற காரணமெ

2 ன்ன? என்றான்.—அவர்கள் சொன்ன

து, நீதிமானுமாய்ப் பராபரனுக்குப்

பயப்படுகிறவனுமாய் எல்லா யூதர்களுக்

குள்ளும் நல்லவன் என்று சாட்சி பெற்றி

ருக்கிறவனுமாய் இருக்கிற கொருநேலி

என்னுஞ் சேனைத்தலைவன் உம்மைத் தன்

வீட்டுக்கு அழைப்பித்து, உம்மால்வார்த்

தைகளைக் கேட்கும்படிக்குப் பரிசுத்த

ஆவியானாலே தேவேத்தனமாய்க் கட்டளை

பெற்றுக் கொண்டான் என்றார்கள்.—அ
ப்பொழுது பேதுரு, அவர்களை உள்ளே
அழைத்து உபசாரம் பண்ணினான். மே
லும், மறுநாளிலே அவன் அவர்களுட
னே கூடப் புறப்பட்டான். யோப்பா
பட்டினத்திலிருந்த சகோதரரிற் சில
ரும் அவனுடனே கூடப்போனார்கள்.—
மறுநாளிலே, செசாரியா பட்டினத்தி
ற் சேர்ந்தார்கள். கொருநேலியோ வெ
னில் தன் உறவின் முறையாரையுந் தன
க்கு விசேஷமான சிநேகிதரையும் வர
வழைத்துக்கொண்டு பேதுருமுதலான
வர்கள் வரக் காத்திருந்தான்.—மேலும்,
பேதுரு உட்பிரவேசிக்கையிற், கொரு
நேலி அவனுக் கெதிர்கொண்டு போய்,
அவனுடைய பாதத்தின் அருகே விழுந்து
தொழுதுகொண்டான்.—பேதுருவோ,
அவனைத் தூக்கி எடுத்து, எழுந்திரும் நா
னும் மனிதன்தானே என்று சொல்லி.—
அவனுடனே சம்பாஷணைபண்ணிப் பின்
பு உள்ளேபோய், அனேகர் கூடிவந்திரு
க்கிறதைக் கண்டு அவர்களுடனே சொ
ன்னது,—நீங்களே அறிந்திருக்கிறபடி

டி. பூதஞனவன் அன்னிய தேசத்தாரோ
டே கலந்து, அவனிடத்திற்குப் போகத்
தகாததா யிருக்கின்றது. ஆனாலும் எந்
த மனிதனையும் ஏலாதவனென்றும் அசு
த்தனென்றும் நான் சொல்லாதபடிக்கு
ப் பராபரன் எனக்குக் காண்பித்தார்.—
29 ஆதலால் நீங்களென்னை அழைப்பித்த
பொழுது நான் எதிர்ப்பேசாமல் வந்தே
ன். இப்படியிருக்க, எந்தக் காரியத்துக்
காக நீங்களென்னை அழைப்பித்தீர்களெ
30 ன்று கேட்கிறேனென்றான்.—அதற்குக்
கொருநேலி சொன்னது, நாலாம்நாளிற்
நேரத்திலேநானுபவாசித்து ஒன்பதாம்ம
ணிநேரத்திலே என்வீட்டிலே வேண்டுதல்
பண்ணிக் கொண்டிருந்தேன். அப்பொ
ழுது பிரகாசமுள்ள உடையைத்தரித்திரு
ந்தஒருவன் எனக்குமுன்பாக நின்று கொ
31 ருநேலியே,-பராபரன் உன் வேண்டுதலை
க்கேட்டருளி, உன்தருமங்களைநினைத்திரு
32 க்கிறார்.-ஆதலால் யோப்பா பட்டினத்தி
லேகடலினருகேதோல்பதனிடுகிறவனுகி
ய சீமோனுடைய வீட்டிலே தங்கியிருக்கி
ற பேதுரு, என்று மறுபேர்கொண்ட

மோனைவரவழைக்கும்படிக்கு அவ்விடத்
துக்கு மனிதரை அனுப்பு, அவன் வந்து,
3 உனக்குச் சொல்லுவானென்றார். — அ
தப்படி நான் உடனே உம்மிடத்தில் மனி
தரை அனுப்பினேன், நீர் வந்தது நலமா
யிருக்கின்றது. இப்பொழுது பராபரனு
லே உமக்குக் கட்டளையிடப்பட்ட யா
வையுங் கேட்கும்படிக்கு நாங்களெல்லா
ரும் இங்கே பராபரனுக்கு முன்பாக இ
34 ருக்கிறோ மென்றான். — அப்பொழுது
35 பேதுரு சொன்னது. — பராபரன் ப
ட்சபாத மில்லாமல், எவ்வகையான ம
னிதர்களிலும் எவன் தமக்குப் பயந்து
நீதியை நடப்பிக்கிறானோ, அவனை அங்கிக
ரித்துக் கொள்ளுகிறாரென்று மெய்யா
36 யுணர்ந்து கொள்ளுகிறேன். — எல்லாரு
க்குங் கர்த்தராயிருக்கிற இயேசுக்கிறிஸ்து
வைக்கொண்டு, சமாதானத்தைச் சுவிசே
ஷமாய் அறிவித்து, இஸ்ரவேலருக்கு அ
னுப்பின சங்கதியைக்குறித்துக் (கேட்டீர்
37 களாக.) - யோவான் ஞானஸ்நானத்தைப்
பிரசங்கம்பண்ணின பின்பு, கலிலேயா
நாடுமுதற்கொண்டு, யூதேயாநாட்

எங்கும் நடந்த காரியத்தை அறிந்திருக்கி
38 றீர்கள்.—அதாவது, நாசரேத் தூரிலே
தோன்றிய இயேசுவானவரைப் பராபர
ன் பரிசுத்த ஆவியினாலும் வல்லமையினா
லும் அபிஷேகம்பண்ணினார். (அந்தப்
படி)பராபரன் அவருடனே கூடவிருந்
தபடியால், அவர் நன்மையைச்செய்கிற
வராகவும் பசாசின்வல்லமையில் அகப்ப
ட்ட யாவரையுங் குணமாக்கிறவராகவுஞ்
39 சுற்றித் திரிந்தார்.—யூதருடைய நாட்டி
லும் எருசலேமிலும் அவர் செய்தகாரிய
ங்களெல்லாவற்றிற்கும் நாங்கள் சாட்சிக
ளாயிருக்கிறோம். அவரை ஒருமரத்திலே
40 தூக்கிக் கொலைசெய்தார்கள்.—மூன்று
ம்நாளிலே பராபரன் அவரையெழுப்பி,
அவர் மரித்தோரிலிருந்தெழுந்த பின்பு
41 —எல்லாச் சனங்களுக்குமல்ல அவரோ
டேபோசனபானம்பண்ணப் பராபர
னால் முன் நியமிக்கப்பட்டிருந்த சாட்சி
களாகிய எங்களுக்கே அவர் பிரசன்னமா
42 கும்படி செய்தார்.—மேலும் அவரே உ
யிரோடிருக்கிறவர்களுக்கும் மரித்தோரு
க்கும் நியாயத்தீர்ப்புக் கொடுக்கும்படிக்

னுப் பராபரனாலே ஏற்படுத்தப்பட்டவ
ரென்றுஞ் சனங்களுக்குச் சாட்சியாய்ப்
பிரசங்கம் பண்ணும்படி எங்களுக்குக்
43 கட்டளையிட்டார்.—அவரை [illegible]ாசிக்கி
றவனெவனோ அவன் அவருடைய [illegible]த்
தினாலே பாவ மன்னிப்பைப் பெற்றுக்
கொள்வானென்று தீர்க்கதரிசிகளெல்லா
ரும் அவரைக் குறித்துச் சாட்சிகொடுக்
44 கிறார்களென்றான்.—இந்த வார்த்தைகளை
ப் பேதுரு பேசுகையில் வசனத்தைக்
கேட்டயாவர்மேலும் பரிசுத்த ஆவியிற
45 ங்கினார்.—அவர்கள் (அன்னிய) பாஷைக
ளைப்பேசிப் பராபரனைப் புகழ்ந்தார்
46 கள்.—அதைப் பேதுருவுடனேகூட வந்
திருந்த விருத்தசேதனமுடைய விசுவாசி
களெல்லாருங் கேட்டுப் பரிசுத்த ஆவி
யென்னுமீவு அஞ்ஞானிகளுக்குங் கொடு
க்கப்பட்ட படியினாலே பிரமித்தார்கள்.
47 —மேலும் பேதுரு சொன்னது, நம்
மைப்போலப் பரிசுத்த ஆவியைப் பெ
ற்ற இவர்கள் தண்ணீரினால் ஞானஸ்நான
ம் பெறுதற்படிக்கு, யாவனாகிலுந் தடை
பண்ணலாமாவென்று சொல்லி, அவர்க

ளுக்குக் கர்த்தருடைய நாமத்திலே
ஞானஸ்நானங் கொடுக்கும்படி கட்டளை
யிட்டான், அப்பொழுது சிலநாளை அங்கே
தங்கியிருக்கும்படி அவனை வேண்டிக்கொண்
டார்கள்.

---

## ௰௧. அதிகாரம்.

1 புறத்தேசத்தாரும பராபரனுடை
ய வசனத்தை ஏற்றுக்கொண்டார்களெ
ன்று யூதாவிலிருக்கிற அப்போஸ்தலரும்
மற்றச் சகோதரருங் கேள்விப்பட்டா
2 ர்கள்.—பின்பு பேதுரு எருசலேமுக்குத்
திரும்பி வந்தபொழுது விருத்தசேதன
3 முடையவர்கள் அவனை நோக்கி.—நீ
விருத்தசேதனம் இல்லாதவர்களிடத்தி
ற் போய், அவர்களோடே புசித்தீரெ
4 ன்று வினைமாய்ச் சொன்னார்கள்.—அத
ற்குப் பேதுரு வரிசையாய் அவர்களு
5 க்குக் விபரமாய்ச் சொன்னது.—நா
ன் யோப்பா பட்டினத்திலே வேண்டு
தல் பண்ணிக்கொண் டிருந்தபொழுது

ஞான திருஷ்டியினாலே, நாலுதொங்கல் கட்டப்பட்ட பெரிய துப்பட்டியைப் போல் ஒரு கூடு வானத்திலிருந்து என்னிடத்திலிறங்கி வரக் கண்டேன்.—நான் உற்றுப் பார்க்கிறபொழுது, அதிலே பூமியிலுள்ள நாலுகாலையுடைய சீவன்களையுஞ் சாட்டு மிருகங்களையும் ஊர்வனவைகளையும் ஆகாயத்திலுள்ள பறவைகளையுங் கண்டேன்.—அல்லாமலும் பேதுருவே, எழுந்திரு, அடித்துப் புசியென்று என்னுடனே சொல்லுகிற சத்தத்தைக் கேட்டேன்.—அதற்கு நான் ஆண்டவரே, அப்படியல்ல, ஏலாததும் அசுத்தமுமாயிருக்கிற தொன்றும் ஒருக்காலும் என் வாய்க்குள்ளே போகவில்லையே என்றேன்.—அப்பொழுது பராபரன் சுத்தமாக்கினவைகளை நீ அசுத்தமென்றெண்ணாதிருப்பாயாக வென்று இரண்டாந்தரம் வானத்திலிருந்து சத்தம் எனக்குண்டாயிற்று.—இப்படி மூன்றுந்தரமுமுண்டானபின்பு, எல்லாம் மறுபடியும் வானத்துக்கெடுத்துக் கொள்ளப்பட்டது.—உடனே சேசாரியா பட்டினத்

திலிருந்து மூன்று மனிதரென்னிடத்தி
ல அனுப்பபட்டு, நானிருந்த வீட்டுக்கு
12 முன்னே வந்து நின்றார்கள்.—அப்பொ
ழுது நான் ஒன்றுக்குஞ் சந்தேகப்படா
மல், அவர்களுடனே கூடப் போகும்ப
டிக்கு ஆவியானவர் என்னுடனே சொன்
னார், பின்பு சகோதரர்களாகிய இவ்வாறு
பேரும் நானுங் கூடி அந்த மனிதனுடை
13 ய வீட்டுக்குப் போனோம்.—அப்பொழு
து அவன் தன் வீட்டிலே தேவதூதன் ஒ
ருவன் நிற்கக் கண்டதையும், நீ யோப்பா
பட்டிணத்திலிருக்கிற பேதுரு என்று
மறுபேர்கொண்ட சீமோனை அழைக்கு
ம்படிக்கு, மனிதரை யவ்விடத்துக்கு அ
14 னுப்பு.—நீயும் உன் வீட்டார் அனைவரும்
இரட்சிக்கப் படுவதற்கான வார்த்தைகளை
அவன் உன்னுடனே சொல்லுவானென்
று அந்தத் தூதன் தனக்குச் சொன்ன
15 தையும் எங்களுக்கு அறிவித்தான்.—பின்
பு நான் பேசத் தொடங்கின பொழுது,
பரிசுத்த ஆவி ஆதியிலே நம்மிடத்திலி
றங்கினதுபோல், அவர்களிடத்திலும் இற
ங்கினார்.—அப்பொழுது யோவான் ஜல

த்திலேலே ஞானஸ்நானங் கொடுத்தான்
நீங்களோ பரிசுத்த ஆவியினாலே ஞானஸ்
நானம் பெறுவீர்களென்று, கர்த்தர் சொ
ன்ன வார்த்தையை நினைத்துக் கொண்
17 டேன்.—ஆனபடியினாலே கர்த்தராகிய
இயேசுக்கிறிஸ்துவை விசுவாசித்துக் கொ
ண்டிருக்கிற நமக்குப் பராபரன் அனுக்
கிரகித்ததுபோல், அந்த ஈவை அவர்களு
க்கும் அனுக்கிரகித்திருக்கப், பராபரனுக்
குத் தடைபண்ணுகிறதற்கு நான் பலவா
18 னாய் இருந்தேனோ வென்றான்.— இவைக
ளை அவர்கள் கேட்டபொழுது, விரோத
மாய்ப் பேசாமற் புறத்தேசத்தாருஞ்
சீவனை அடையும்படி குணப்படுதலைப்
பராபரன் அவர்களுக்கு அனுக்கிரகஞ்
செய்தாரென்று பராபரனைப் புகழ்ந்தா
ர்கள்.

19 அன்றியும் இஸ்தேவானிமித்தமாக உ
ண்டான உபத்திரவத்தினாற் சிதறடிக்கப்
பட்டவர்கள் சுவிசேஷ வசனத்தை யூதர்
களுக்கே அன்றி, மற்றொருவருக்குஞ் அறி
வியாமற் பெனிக்கேநாடு சீப்புருதீவு அந்
தியோகியா பட்டினம் மட்டுந் திரிந்தா

20 ர்கள்.—அவர்களிற் சீப்புருதீவாருங் கிரேனே பட்டினத்தாருமோ அந்தியோகியா பட்டினத்தில் வந்தபொழுது கிரேக்கருடனேயும் பேசிக்கொண்டு, கர்த்தராகிய இயேசுவைச் சுவிசேஷமாய் அறி
21 வித்தார்கள்.—அவர்களுடனே கூடக் கர்த்தருடைய கை யிருந்ததினாலே திரளான சனங்கள் விசுவாசித்துக் கர்த்தரிடத்தில்
22 மனந் திரும்பினார்கள்.—அவைகளைக் குறித்து எருசலேமிலுள்ள (சபையார்) கேள்விப்பட்டபொழுது, அந்தியோகியாபட்டினம் வரைக்கும் போகும்படிக்குப் பருனபாவை அனுபபினார்கள்.—
23 அவன் (அங்கே) போய்ப் பராபரனுடைய கிருபையைக் கண்டபொழுது சந்தோ
24 ஷிப்பட்டது மல்லாமல்.—அவன் நல்லவனுமாய்ப்பரிசுத்த ஆவியினாலும் விசுவாசத்தினாலும் நிறைந்தவனுமா யிருந்தபடியினாலே எல்லாரும் மனவூக்கமாய் உறுதியாய்க் கர்த்தரிடத்தில் நிலைத்திருக்கும்படி அவர்களுக்குப் பத்தி சொன்னான். மேலும் அனேகம்பேர் கர்த்தரிடமாய்ச் சேர்க்கப்பட்டார்கள்.

5 பின்பு பருனபாவென்பவன் சவுலைத்
தேடும்படிக்குத் தருசவூருக்குப் புறப்ப
ட்டுப்போய், அவனைக்கண்டு, அந்தியோ
கியா பட்டினத்துக்கு அழைத்துக் கொ
26 ண்டுவந்தான்.—அப்பொழுது அவர்கள்
ஒரு வருஷக்காலமாய்ச் சபையிலே கூடி
யிருந்து, அனேக சனங்களுக்கு உபதேச
ம்பண்ணினார்கள். சீஷர்கள் முதலாவது,
அந்தியோகியா பட்டினத்திலே தானே
கிறிஸ்தவர்களென்று பேயர்அடைந்தார்
கள்.

27 அந்நாட்களில் எருசலேமிலே இருந்து
சில தீர்க்கதரிசிகள் அந்தியோகியா பட்
28 டினத்துக்கு வந்தார்கள். அவர்களில் ஒரு
வனாகிய ஆகாப்பென்பவன் எழுந்து, பூச்
சக்கரமெங்கும் மிகுந்த பஞ்சம் வருமெ
ன்று ஆவியினாலே அறிவித்தான், அந்தப்
படியே அது கிலவுதிஇராயனுடைய கால
28 த்திலே சம்பவித்தது.-அப்பொழுதுசீஷ
ரில் அவர் அவர் தங்கள்தங்கள் திராணியின்
படியே யூதேயாநாட்டிற் குடியிருக்கிற
சகோதரருக்குத் தரும சகாயம்பண்ணி
அனுப்ப வேண்டுமென்று தீர்மானம்

30 பண்ணினார்கள்.—அந்தப்படி அவர்களிலே சில பொருள்களைச் சேர்த்துக்கொண்டு, பருனபா, சவுல், என்பவர்கள்கையிலே கொடுத்து மூப்பரிடத்துக்கு அனுப்பினார்கள்.

---

## ௰௨. அதிகாரம்.

1 அக்காலத்திலே ஏரோதே என்னுமிராசா சபையிற் சிலரைத் துனபப்படுத்த
2 ம்படிக்குத் தொடங்கினை.—யோவானுடைய சகோதரனாகிய யாக்கோபை அவ
3 ன கத்தியினாலே கொலைசெய்தான.—மேலும் அது யூதருக்குப் பிரியமாயிருக்கிறதென்று, அவன கண்டு பேதுருவையும் பிடிக்கத் தொடர்ந்தான, அந்நாட்கள் புளிப்பில்லாத அப்பப்பண்டிகை நாட்க
4 ளாயிருந்தன.—அவனைப் பிடித்த பின்பு பண்டிகைகழித்து அவனைச் சனங்களுக்கு முன்பாகக் கொண்டு வரலாமென்று, ஏரோதே எண்ணி, அவனைச் சிறைச்சாலையிலே வைத்து, ஒருவகுப்பிற்கு நான்கு பேர்ச் சேவகராக நான்கு வகுப்புகள்

அவனைக் காக்கும்படி ஒப்புக்கொடுத்
5 தான்.—அப்படிப் பேதுரு காவலிலே
காக்கப்பட்டிருக்கையில், சபையார் அவ
னைக்குறித்து, இடைவிடாமல் பராபர
னை நோக்கி வேண்டுதல் பண்ணினார்க
6 ள்.—அப்பொழுது ஏரோதே அவனை
வெளியே கொண்டுவரும்படி குறித்தநா
ளுக்கு முன்னின இராத்திரியிலே பேது
ரு, இரண்டு சங்கிலிகளினாலே கட்டப்ப
ட்டு, இரண்டு சேவகர் நடுவே நித்திரை
பண்ணிக்கொண்டிருக்கக் காவற்காரரும்
கதவுக்கு முன்னிருந்து, காவலறையைக்
7 காத்துக் கொண்டிருக்க.—சடுதியாய் அ
றையிலே பிரகாசமுண்டாகத் தக்கதாகக்
கர்த்தருடைய தூதனொருவன் தோன்றிப்
பேதுருவின்விலாவிலேதட்டிச், சீக்கிரமா
யெழுந்திருவென்று அவனை யெழுப்பின
ன். அப்பொழுது சங்கிலிகள் அவனுடை
8 யகைகளைவிட்டு விழுந்தன.—மேலும் தூ
தன் அவனுடனே சொன்னது, உன்
அரையிற்கட்டி, உன்பாத இரட்சைகளைத்
தொடுத்துக்கொள்ளென்றான். அவன் அப்
படிச்செய்தான். தூதன் பின்னும் சொன்

னது, உன் வஸ்திரத்தைப் போர்த்துக்
கொண்டு, எனக்குப் பின்சென்றுவாவெ
9 ன்றான்.—அந்தப்படி அவன் புறப்பட்டு
அவனுக்குப் பின்சென்று, தூதனாற் செ
ய்யப்பட்டது மெய்யென் அறியாமல்
இது ஒரு தரிசனையென்று நினைத்தான்.
10 —அவர்கள் முதலாங்காவலையும் இரண்
டாங்காவலையுங் கடந்துபின்பு பட்டினத்
துக்குப்போகிற இருப்புக் கதவினிடத்தி
ல் வந்தபொழுது, அவர்களுக்கு அது
தானாய்த் திறக்க, அதினவழியாய் அவர்
கள் புறப்பட்டு, ஒரு வீதியிலே நடந்து
போனார்கள். உடனே தூதன் அவனைவிட்
11 டு நீங்கினான்.—பேதுருவுக்குத் தெளிவு
வந்தபொழுது, ஏரோதேயின் கைக்குப்
யூதருடைய விருப்பங்கள்யாவுக்கும் என்
னை விடுதலையாக்கும் படிக்குக் கர்த்தர்
தமது தூதனை அனுப்பினாரென்று நான்
இப்பொழுது மெய்யாய் அறிந்திருக்கி
12 றேனென்றான்.—இப்படி அவன் சிந்த
னைகொண்டு, மாற்குவென்று பேர்கொ
ண்ட யோவானுடைய தாயாகிய மரியாள்
வீட்டுக்கு வந்தான், அங்கே அநேகர்கூடி.

வேண்டுதல் பண்ணிக்கொண்டிருந்தார்க
13 ள்.—பேதுரு வாசற்கதவைத் தட்டின
பொழுது, உரோதாளென்று பேர்கொ
ண்ட ஒருவேலைக்காரி ஒட்டுக் கேட்கவ
14 ந்து,—பேதுருவின் சத்தத்தை யறிந்து,
சந்தோஷத்தினாலே வாசலைத்திறவாமல்,
உள்ளே ஓடிப்போய், வாசலுக்கு முன்
னே பேதுரு, நிற்கிறாரென்று அறிவித்
15 தாள்.— அவர்களோ, நீ பயித்தியமாய்
ச் சொல்லுகிறாயென்றார்கள். அவள் அப்
படி யல்ல, அவரேயிருக்கிறாரென்றாள்.
அப்பொழுது அவர்கள் சொன்னது,
அவன் அவருடைய தூதனென்றார்கள்.-
16 பேதுரு பின்னுந் தட்டிக்கொண்டிருந்த
பொழுது, அவர்கள் திறந்து, அவனைக்
17 கண்டு, பிரமித்தார்கள்.—உடனே அவர்
கள் பேசாமலிருக்கும்படி அவன் கையி
னாற் சமிக்கைகாண்பித்துக் கத்தர் தன்
னைக் காவலிலிருந்து விடுதலையாக்கின வ
கையை அவர்களுக்கு விபரமாய்க் காட்டி
இவைகளை யாக்கோபுககும் மற்றச் சு
கோதரருக்கும் அறிவியுங்களென்று சொ
ல்லிப் புறப்பட்டு, வேறொரு இடத்துக்

குப் பிரயாணமாய்ப் போனான்.—
18 பொழுது விடிந்த பின்பு பேதுருவைக்
குறித்துச் சேவகருக்குள்ளே யுண்டான
19 கலக்கங் கொஞ்சமல்ல,—ஏரோதே அவ
னைத் தேடிக், காணமற்போனபோது கா
வற்காரரைக் கெட்டியாய்ச் சோதித்து,
அவர்களைக் கொலைசெய்யும்படி கட்டளை
யிட்டுப், பின்பு யூதேயா நாட்டை விட்டுச்
சேசரியா பட்டினத்துக்குப் போய்,
20 அங்கே சஞ்சரித்தான்.—அக்காலத்திலே
ஏரோதே தீறியருக்குஞ் சீதோனருக்கும்
மிகவும் பகையாயிருந்தான். அப்பொழு
து அவர்கள் தங்கள் பிழைப்புக்கு வேண்
டியவைகளை இராசாவினுடைய தேசத்தி
லிருந்து வாங்கிக்கொள்வதினாலே அவர்க
ள் ஒருமனப்பட்டு, அவனிடத்துக்கு வந்
து இராசாவினுடைய வீட்டுவிசாரணைக்
காரனாகிய பிலாஸ்தென்பவனைத் தங்கள்
வசமாக்கிக் கொண்டு சமாதானமாயிரு
க்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்
21 கள்.—அப்பொழுது குறித்த நாளிலே ஏ
ரோதேயானவன் இராச அங்கியைத் தரித்
துக்கொண்டு, சிங்காசனத்தின்மேல் உளு

க்கார்ந்து, அவர்களுக்குப் பிரசங்கம்பண்
22 ணினான்.—அதற்குச் சனங்கள், இது ஒரு
மனிதனுடைய சத்தமல்லத், தேவனுடை
ய சத்தமேயென்று கூப்பிட்டார்கள்.—
23 அவன்பராபரனுக்கேபுகழ்ச்சியுண்டாவ
தாகவென்று அறிக்கை யிடாதபடியினா
லே, உடனே கர்த்தருடைய தூதன் அவ
னை அடித்தான். அவன் புழுக்களாலே தின்
னப்பட்டிறந்தான்.
24 பராபரனுடைய வசனமோ வளர்ந்து
25 பெருகிற்று.—பின்பு பருனபாவுஞ் சவுலு
ந் தருமவூழியத்தை நிறைவேற்றின் பொ
ழுது, மாற்கு என்று மறுபேர்கொண்ட
யோவானைக் கூட்டிக்கொண்டு, எருசலே
மைவிட்டுத் திரும்பினார்கள்.

## ௰௩. அதிகாரம்.

1 அந்தியோகியா பட்டினத்தில் உள்ள
சபையிலே பருனபாவென்றும் நீகரெ
ன்னப்பட்ட சீமேயோனென்றுஞ் சிரே
னேஊராகிய லூசியென்னுந் தேச

த்திரின் காற்பங்குக்கு அதிபதியாகிய ஏ
ரோதேயுடனே கூடவளர்க்கப்பட்டம
ுவனென்றுஞ் சவுலென்றும் பேர்களை
யுடைய இவர்கள் தீர்க்கதரிசிகளுமாய்ப்
2 போதகருமா யிருந்தார்கள். —அவர்கள்
கர்த்தருக்கு ஆராதனைசெய்து, உபவாசித்
துக்கொண்டிருக்கிறபொழுது, பரிசுத்த
ஆவியானவர் சொன்னது, பருனபாவை
யுஞ் சவுலையும் நான் அழைத்த கிரியைக்
காக அவர்களைத் தெரிந்தெடுத் தனுப்பு
3 ங்களென்றார்.—உடனே அவர்கள் உபவா
சித்து வேண்டுதல்பண்ணி, அவர்கள்மே
4 ற் கைகளைவைத் தனுப்பினார்கள்.—ஆத
லால் அவர்கள் பரிசுத்த ஆவியினாலே அ
னுப்பப்பட்டுச், சிலக்கிய பட்டினத்தி
க்குப் போய் அங்கே கப்பலேறிச் சீப்ப
5 ருதீவிற் சேர்ந்தார்கள்.—பின்பு அவர்க
ள்சாலமிஸ் பட்டினத்துக்கு வந்தபொ
ழுது யூதருடைய ஆலயங்களில் (அவ
ர்களுக்குப்) பராபரனுடைய வசனத்
தை அறிவித்தார்கள். யோவானென்பவ
னும் அவர்களுக்கு உதவிக்காரனாயிருந்
௬ தான.—அவர்கள் அந்தத் தீவெங்குங் கட

ந்து, பாப்போபட்டினம் பரியந்தம் வந்
தபொழுது, பரியேசுவென்று பேர்கொ
ண்ட இஸ்தம்பனக்காரனுமாய்க், கள்ள
7 த்தீர்க்கதரிசியுமாய்.——புத்திசாலியாகிய
செருகியுபவுலென்னும் பிறிதிதுரையினி
டத்தில் தங்கினவனுமாயிருந்த ஒரு யூதனை
க் கண்டார்கள். அந்தத் துரை பருனபா
வையுஞ் சவுலையும் அழைப்பித்துப், பரா
பரனுடையவசனத்தைக்கேட்க ஆசையா
8 யிருந்தபொழுது.—— இஸ்தம்பனக்கார
னென்றருத்தங்கொள்ளுகிற எலிமாவெ
ன்னப்பட்ட அவன் பிறிதிதுரையை விசு
வாசித்ததிலிருந்து விலக்கும்படிதேடி அ
9 வர்களோடெதிர்த்துப் பேசினான்.—அ
ப்பொழுது பவுலென்றுஞ் சொல்லப்பட்
ட சவுல் பரிசுத்த ஆவியினால் நிறைந்தவ
னாய் அவன்மேற் கண்ணூன்றிச் சொன்
10 னது,—எல்லா விதமான கபடமும் எல்
லாவிதமான பொல்லாங்கும் நிறைந்தவ
னே, பசாசின் மகனே, சகல நீதிகளு
க்கும் பகைஞனே, நீ கர்த்தருடைய செ
ம்மையான மார்க்கங்களைப் புரட்டுகிற
11 தில் ஓயமாட்டாயா.--ஆதலால் இப்பொ

ழூதே கர்த்தருடைய கை உன்மேல்வரு
கின்றது, சிலகாலம் நீ சூரியனைக் காணு
மற் குருடனாயிருப்பாயென்றான். உட
னே மந்தாரமும் இருளும் அவன்மேல்
விழுந்தது, அவனதிரிந்து கைலாகுகொ
12 டுக்கிறவர்களைத் தேடினான்.—இப்படிச்
சம்பவித்ததைப் பிறிதிதுரை கண்டு,
கர்த்தரைக்குறித்துச் சொல்லிய உபதேச
த்துக்காக அதிசயப்பட்டு விசுவாசமுள்
13 ளவனானான்.-பின்பு பவுலும் அவனைச்சே
ர்ந்தவர்களும் பாப்போ பட்டினத்தை
விட்டுப் பம்பீலியா நாட்டிலுள்ள பெரு
கேபட்டினத்துக்கு வந்தார்கள். யோவா
னென்பவன் அவர்களை விட்டுப்பிரிந்து
எருசலேமுக்குத் திரும்பினான்.

14 பின்பு அவர்கள் பெருகே பட்டினத்
தை விட்டுப்புறப்பட்டுப், பிசிதியநாட்
டிலுள்ள அந்தியோகியாவுக்கு வந்து
ஓய்வுநாளிலே ஆலயத்துக்குப் போயு
15 ளுக்கார்ந்தார்கள். —(அங்கே) நியாயப்
பிரமாணமுந் தீர்க்கதரிசன (ஆகமமும்)
வாசிக்கப்பட்டுத் தீர்ந்தபின்பு சகோதர
ர்களே, நீங்கள் சனங்களுக்குப் புத்தி

சொல்ல விரும்பினால் சொல்லீர்களாகவெ
ன்று ஆலயத் தலைவர் அவர்களுக்குச்சொ
ல்ல ஆளனுப்பினார்கள்.—அப்பொழுது ப
வுல் எழுந்து, கையினாற் சாடைகாண்பி
த்துச் சொன்னது, இஸ்ரவேலரே, ப
ராபரனுக்குப் பயந்துநடக்கிற எல்லாச
17 ச் சனங்களே, கேட்டீர்களாக.—இந்த
இஸ்ரவேற் சந்ததியாருடைய தேவன்
நமது முன்னோர்களைத் தெரிந்துகொண்
டு, எகிப்பத்துத்தேசத்திலே சஞ்சரித்து
வந்து அவர்களுடைய சந்ததியை மேன்
மைப்படுத்திப், பலத்த வல்லமையினாலே
அதிலிருந்து அவர்களைப் புறப்படப்ப
18 ண்ணி,—நாற்பது வருஷக்காலமாய் வனா
ந்தரத்திலே அவர்களைத் தாங்கிக்கொண்
19 டு,-கானான் தேசத்தில் ஏழுசாதியார்களை
நீக்கிப்போட்டு, அவர்களுடைய தேசத்
தை அவர்களுக்குச் சுதந்திரமாகப் பங்கி
20 ட்டு,—பின்பு ஏறக்குறைய நானூற்றை
ம்பது வருஷத்துக்குள்ளே சாமுவேல்
தீர்க்கதரிசி வரைக்கும் அவர்களுக்காக
நியாயாதிபதிகளை யேற்படுத்தினார்.—
21 சாமுவேலின் காலம்முதல் அவர்கள் ஒரு

இராசாவேண்டுமென்று கேட்டுக்கொண்
டார்கள். அப்படியே பராபரன் அவர்
ளுக்குப்பென்யாமீனுடைய கோத்திரத்
தானாகிய கீசென்பவனுடைய குமாரனா
கிய சவுலைக்கொடுத்தார். அவன் நாற்பது
22 வருஷமிருந்தான்.—பின்பு அவர் அவனை
விலக்கி, இயெசேயென்பவனுடைய கு
மாரனாகிய தாவீதை எனது திரு உள்ள
த்துக்கு ஏற்றவனென்று கண்டேன் அவ
ன் என்னுடைய சித்தத்தின்படி முழுவ
துஞ் செய்வானென்று தாவீதைக்குறித்
துச் சாட்சியிட்டு, அவனையே அவர்களு
23 க்கு இராசனாக ஏற்படுத்தினார்.—அவனு
டைய சந்ததியிலேதானே பராபரன் தம
துவாக்குத்தத்தத்தின்படி இஸ்ரவேலரு
காக இயேசுவென்னும் இரட்சகனைத்
24 தோன்றப்பண்ணினார்.—அவருடைய பி
ரவேசத்திற்கு முன்னே, யோவான் மன
ட்படுதற்கேற்ற ஞானஸ்நானத்தை எல்
லா இஸ்ரவேலருக்கும் பிரசங்கித்தான்.-
25 மேலும் யோவான் (பணிவிடை) யோட்ட
த்தைத் நிறைவேற்றுகிற பொழுது, (சன
ங்களுடனே) சொன்னது, நீங்களென்னை

எவனென்றெண்ணுகிறீர்கள்? நான் அவ
ரல்ல எனக்குப் பின் ஒருவர் வருகிறார்,
அவருடைய பாத இரட்சையை அவிழ்க்கி
றதற்கு நான்பாத்திரனல்லவென்றான்.—
ஆபிரகாமின் சந்ததியாராகிய சகோதரர்
களே, பராபரனுக்குப் பயப்படுகிற ம
ற்றவர்களே, இந்த இரட்சிப்பையறிவிக்
கிற உபதேசம் உங்களுக்கே யனுப்பப்
7 பட்டிருக்கின்றது.-என்னவெனில், எரு
சலேமிற் குடியிருக்கிறவர்களும் அவர்க
ளுடைய தலைவரும் அவரையாவது ஒவ்
வொருநாள்தோறும் வாசிக்கப்படுகிற தீர்க்க
தரிசிகளின் வாக்கியங்களையாவது அறியா
மல், அவரை ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்
ததினாலே அவைகளை நிறைவேற்றினார்
28 கள்.—மரணத்துக்கு ஏதுவான ஒன்றை
யும் (அவரிடத்திற்) காணாமலிருந்தும்,
அவர்கள் அவரைக் கொலை செய்யும்படி
க்குப் பிலாத்துவை வேண்டிக்கொண்டா
29 ர்கள்.—மேலும் அவரைக்குறித்து எழுதி
யிருக்கிற யாவையும் அவர் முடித்தபின்
பு, (சிலர்) அவரை மரத்திலிருந்திறக்கிக்
கல்லறையிலே வைத்தார்கள்.—பராபர

னே அவரை மரித்தோரிலிருந்தெழுப்பி
31 னர்.—அன்றியும் அவர் தம்முடனேகூடக்
கலிலேயாவிலிருந்து எருசலேமுக்கு வந்
தவர்களுக்கு அனேகநாள் தரிசனையானர்
அவர்களே எங்களுக்குமுன்பாக அவரு
32 டைய சாட்சிகளாயிருக்கிறார்கள்.— நீர்
என்னுடைய குமாரன், இன்று நான் உம்
மைச் ஜெனிப்பித்தேனென்று இரண்டா
ஞ் சங்கீதத்திலே எழுதியிருக்கிறபடி,—
33 இயேசுவை எழுப்பினதினாலே, பராபரன்
(நமது) முன்னோர்களுக்குண்டான வாக்
குத்தத்தத்தை அவர்களுடைய பிள்ளை
களாகிய நமக்கு நிறைவேற்றினாரென்று
நாங்களும் உங்களுக்குச் சுவிசேஷமாய் அ
34 றிவிக்கிறோம்,—மேலும் அவர் மறுபடி
யும் மரியாதபடிக்கு, அவரை மரித்தோ
ரிலிருந் தெழுப்பச் சித்தமானபடியினா
லே, தாவீதின் உறுதியான தயவுகளை உங்
களுக்குக் கட்டளையிடுவேனென்று திரு
35 வுளம்பற்றினார்.—அன்றியும் உம்முடைய
பரிசுத்தவான் அழிவைக் காணவொட்டீ
ரென்று வேறொரு சங்கீதத்தி
36 லே சொல்லியிருக்கின்றது.—தாவீதோ

வென்றால், தனது காலத்திலே பராபரனு
டைய சித்தத்துக் கூழியஞ் செய்த பின்பு
நித்திரையடைந்து, தன்பிதாக்களிடத்தி
ற் சேர்க்கப்பட்டு அழிவையடைந்தான்.
37 —பராபரனாலே யெழுப்பப் பட்டவ
38 ரோ அழிவையடைந்ததில்லை.—ஆதலாற்
சகோதரர்களே, அவர்மூலமாய் உங்களுக்
குப் பாவமன்னிப்பு உண்டாகுமென்று
39 அறிவிக்கப் படுகின்றது.—அல்லாமலும்
மோசேயின் நியாயப்பிரமாணத்தினாலே
நீங்கள் எதினின்று விடுதலையாக்கப்படக்
கூடாதிருந்தீர்களோ, அதினின்று விசுவா
சிக்கிறயாவனும் அவராலே விடுதலையாக்க
ப்படுகிறானென்று அறிந்து கொள்வீர்க
40 ளாக.—அன்றியுந் தீர்க்கதரிசிகளுடைய
புத்தகத்திலே, அசட்டைக்காரரே! பா
ருங்கள். உங்கள் நாட்களில் ஒரு கிரியை
செய்வேன், ஒருவன் அதை உங்களுக்கு
விவரித்துச்சொன்னாலும், நீங்கள் விசுவா
சியாமலிருப்பீர்கள், அது அப்படிப்பட்
41 ட கிரியை யாகவேயிருக்கும்.—ஆதலாற்
பிரமிப்படைந்து, அழிந்து போங்களெ
ன்று சொல்லியிருக்கிறதின்படி, உங்களு

க்குவராதபடிக்குச் சாவதானமாயிருப்பீ
42 ர்களாகவென்றான்.-பின்பு அவர்கள் புறப்
படுகையில் மறு ஒய்வுநாளிலே அந்தவச
னங்களைத் தங்களுக்குச் சொல்லவேண்
டுமென்று புறத்தேசத்தார் வேண்டிக்
43 கொண்டார்கள்.— மேலும் ஆலயச் ச
பை கலைந்து போன பின்பு யூதர்களி
லும் யூதமார்க்கத்திற் பிரவேசித்துத்தே
வபத்தியாயிருந்த பேர்களிலும் அனே
கர் பவுலுவுக்கும் பருனபாவுக்கும் பின்
சென்றார்கள். அவர்களுடனே யவர்கள்
பேசிக்கொண்டு, பராபரனுடைய கிரு
பையிலாலே நிலைகொண்டிக்கருக்கும் படி
44 க்குப் புத்தி சொன்னார்கள்.—மறு ஒய்வு
நாளிலே கொஞ்சங் குறையப் பட்டினத்
தாரெல்லாரும் பராபரனுடைய வசனத்
தைக்கேட்கும்படிக்குக் கூடிவந்தார்கள்.
45 —யூதர்களோ அவ்வளவு சனங்களைக் கண்
டபொழுது பொறாமையினால் நிறைய
ப்பட்டுப் பவுலுசொன்னவைகளுக்கு வி
ரோதமாய்ப் பேசினார்கள். விரோதித்து
46 ந் தூஷணித்து மிருந்தார்கள்.- அப்பொ
ழுது பவுலுவும் பருனபாவுந் தயிரியங்

கொண்டு சொன்னது முதலாவது உங்க
ளுக்கே பராபரனுடைய வசனத்தைச்
சொல்ல வேண்டியதா யிருந்தது நீங்க
ளோ அதைத் தள்ளி உங்களை நித்திய சீவ
னுக்கு அபாத்திரரென்று தீர்த்துக்கொ
ள்ளுகிறபடியினாலே நாங்கள் புறத்தேச
47 த்தாரிடத்திற்குப்போகிறோம்.—நீர்பூமி
யின் எல்லை பரியந்தமும் இரட்சகராயிரு
க்கும்படிக்கு உம்மைப் புறத்தேசத்தா
ர்களுக்கு ஒளியென்றேற்படுத்தினேன். எ
ன்கிற தேவ வாக்கியத்தின்படி பராபரன்
எங்களுக்குக் கட்டளையிட்டருளினபடியி
னாலே அப்படிச் செய்கிறோமென்றார்
48 கள்.—புறத்தேசத்தார்கள் அதைக்கேட்
டுச் சந்தோஷம் அடைந்து கத்தருடைய
வசனத்தைப் புகழ்ந்து நித்திய சீவனுக்கு
நியமிக்கப்பட்டவர்கள் எவர்களோ அவ
49 ர்கள் விசுவாசித்தார்கள். —பின்பு கத்த
ருடைய வசனம் அத்தேசமெங்கும் பிர
50 பலமாயிற்று.—யூதர்களோவெனிற் பத்
தியுங் கனமும் பொருந்திய ஸ்திரிகளையும்
பட்டினத்தின் முதலாளிகளையும் எழுப்பி
ப் பவுலு பருனபா என்பவர்களைத் துன்

பப்படுத்தும்படி செய்து தங்கள் எல்லை
களிலிருந்து அவர்களைத் துரத்தினார்கள்.
51 —அப்பொழுது அவர்கள் தங்கள் கால்
களிற்பட்ட தூளை யவர்கள்மேற் சாட்சி
யாக உதறிப்போட்டு இக்கோனியா ப
ட்டினத்திற்கு வந்தார்கள். சீஷரானவர்க
ளோ சந்தோஷத்தினாலும் பரிசுத்த ஆவி
யினாலும் நிறையப்பட்டார்கள்.

---

## ௰௪. அதிகாரம்

1 இக்கோனியா பட்டினத்திலே அவர்
களிருவரும் யூதருடைய தேவாலயத்து
க்குப்போய்ப் பிரசங்கம்பண்ணினபொ
ழுது யூதர்களிலும் கிரேக்கர்களிலும் திர
2 ளான சனங்கள் விசுவாசித்தார்கள் —விசு
வாசியாத யூதரோவெனிற் சகோதரருக்கு
விரோதமாகப் புறத்தேசத்தாருடைய ம
னசையெழுப்பிப் பகையுண்டாக்கினார்க
3 ள் —அப்படியிருந்தும் அவர்கள் அங்
கே நெடுங்காலஞ் சஞ்சரித்துக் கர்த்தரை
க் குறித்துத் தயிரியமாய்ப் போதகம் ப

ண்ணினார்கள் அவர் தம்து கிருபையைக் காட்டிய வசனத்துக்குச் சாட்சியுண்டாக அதிசயங்களும் அற்புதங்களும் அவர்கள் கைகளாற் செய்யப்படும்படி அனுக்கிரகித்தார்.

4 அந்தப் பட்டினத்தின் சனங்களோவெனிற் பிரிந்து சிலர் யூதரையுஞ் சிலர் அப்
5 போஸ்தலரையுஞ் சேர்ந்தார்கள்.—அப்பொழுது அவர்களை நிந்தித்து அவர்கள் மேற் கல்லெறியும் பொருட்டாகப் புறத்தேசத்தாரும்யூதர்களும் அவர்களுடைய தலைவருடனேயுங்கூடக்கலசம்பண்ணுகிற
6 தை அவர்கள்அறிந்து.-இலிக்கவோனியா நாட்டிலுள்ள இலீஸ்திராவூருக்குந் தெருபையூருக்கும் அவைகளைச்சூழ்ந்தபுறத்து
7 க்கும் ஓடிப்போய்.—அங்கே சுவிசேஷத்தை அறிவித்துக்கொண்டு வந்தார்கள்.—
8 இலீஸ்திராவூரிலே ஒருவன் தன் தாயின் கருப்பமுதற் சப்பாணியாய் ஒருக்காலும் நடவாமற் பெலனில்லாத கால்களோ
9 டே உளுக்கார்ந்திருந்து.—பவுலு பேசுகிறதைக்கேட்டான். அவன்மேற் பவுலு கண்ணூன்றி இரட்சிக்கப் படும்படிக்கா

ன விசுவாசம் அவனுக்குண்டென்று கண்
10 டு.—நீ உன்கால்களை ஊன்றிச் செம்மை
யாய் எழுந்து நில்லென்று மிகுந்த சத்
தத்தோடே சொன்னான். உடனே அவன்
11 குதித்தெழுந்து நடந்தான்.—பவுலுசெ
ய்ததைச் சனங்கள் கண்டு தேவர்கள்
மனித ரூபமெடுத்து நம்மிடத்திலிறங்கி
இருக்கிறார்களென்று இலிக்கவோனியாப்
பாஷையிலே சத்தமாய்க் கூப்பிட்டார்க
12 ள்.—மேலும் பருனபாவை இயூப்பித்த
ர் தேவனென்றும் பவுலுவோ பிரசங்கத்
தை நடத்தினவனானபடியினாலே அவனை
மெருக்கூரி தேவனென்றும் பேரிட்டா
13 ர்கள்.—அல்லாமலும் பட்டினத்துக்குப்
புறம்பேயிருந்த இயூப்பித்தருடைய பூ
சாரி எருதுகளையும் பூமாலைகளையும் வாச
லின் அருகேகொண்டுவந்து சனங்களோ
டே கூடப் பலியிடமனதாயிருந்தான்.—
14 அப்போஸ்தலராகிய பருனபாவும் பவு
லும் அதைக்கேள்விப்பட்டு (விசனத்தினா
லே) தங்கள் வஸ்திரத்களைக் கிழித்து
15 க்கொண்டு.—கூட்டத்துக்குள் ஓடி மனி
தர்களே ஏன் இப்படிச் செய்கிறீர்கள்.

நாங்களும் உங்களைப்போற் பாடுள்ளமனி
தராயிருந்து.—நீங்கள் இந்த வீணான தே
வர்களைவிட்டு வானத்தையும் பூமியையுஞ்
சமுத்திரத்தையும் அவைகளிலுள்ள யா
வையு முண்டாக்கின சீவனுள்ள தேவனி
டத்துக்குத் திரும்பவேண்டுமென்று உங்
களுக்குச் சுவிசேஷமாய்ச்சொல்லுகிறோ
ம், சென்றகாலங்களில் அவர் எல்லாப் பு
றத்தேசத்தாரையுந் தங்கள் தங்கள் வழிக
7 ளிலே நடக்கவிட்டிருந்தும்,—அவர்களு
க்கு நன்மைசெய்துவந்து, வானத்திலிரு
ந்து மழைகளையுஞ் செழிப்புள்ளகாலங்க
ளையும் நமக்குக் கொடுத்து, ஆகாரத்தினா
லுஞ் சந்தோஷத்தினாலும் நம்முடைய
இருதயங்களை நிரப்பி இவ்விதமாய் அவர்
தம்மைக் குறித்துச் சாட்சிகொடாமலிரு
8 ந்ததில்லையென்று கூப்பிட்டார்கள்.—இ
ப்படி அவர்கள் சொல்லித் தங்களுக்குச்
சனங்கள் பலியிடாதபடிக்குப் பிரயாசத்
தோடே நிறுத்தினார்கள்.

19 பின்பு அந்தியோகியாவூரிலும் இக்கோ
னியூரிலு மிருந்து, யூதர்கள் அங்கேவந்
து, சனங்களுக்குப் போதனைசெய்து, ப

வுலுவின்மேற் கல்லெறிந்து, அவன்மரி
தானென்று நினைத்து, அவனைப்பட்டின
20 த்துக்கு வெளியேயிழுத்தார்கள்.—அங்
கே சீஷர்கள் அவனைச்சூழ்ந்துகொள்ளு
கையில், அவனெழுந்து, ஊருக்குட்பிர
வேசித்து, மறுநாளிலே பருனபாவுட
21 னே தெருபையூருக்குப்போனான்.—அ
ந்தவூராருக்குச்சுவிசேஷத்தையறிவித்
அநேகரைச் சீஷராக்கினபின்பு அவர்க
ள் இலீஸ்திராவூருக்கும் இக்கோனியூரு
க்கும் அந்தியோகியா வூருக்குந்திரும்பி,
22 —சீஷருடைய ஆத்துமாக்களை ஸ்திர
ப்படுத்தி விசுவாசத்திலே நிலைத்திருக்
கும்படிக்குப்புத்திசொல்லி நாம் அநே
க உபத்திரவங்களின்வழியாய்ப் பராப
னுடைய இராச்சியத்திற்பிரவேசிக்கவே
ண்டுமென்றுஞ் சொல்லிக்கொண்டார்க
23 ள்.—அன்றியுஞ் சபைகள்தோறும் அவ
ர்களுக்காக மூப்பரைத்தெரிந்தேற்படு
த்தி உபவாசித்து வேண்டுதல்பண்ணி
அவர்கள் விசுவாசித்துக் கொண்டிருந்
கர்த்தருக்கவர்களைஒப்புவித்தார்கள். பின்
பு அவர்கள் பிசீதியாநாட்டைக் கடந்து

போய்ப் பம்பிலியா நாட்டிலே வந்து
—பெருகேயூரிலே சுவிசேஷ வசனத்
தை அறிவித்து,—அததாலியாப்பட்டின
த்திற்குச் சென்று அங்கே கப்பலேறித்,
—தாங்கள் நிறைவேற்றின கிரியைக்கா
கப்பராபரனுடைய கிருபைக்கு ஒப்புவி
க்கப்பட்டுப் புறப்பட்டுவந்த அந்தியோ
கியாப் பட்டினத்துக்குப் போனார்கள்.
7 —அங்கே சேர்ந்தபொழுது அவர்கள்
சபையைக்கூடிவரப்பண்ணிப் பராபரன்
தங்களாற் செய்தவைகளையும் அவர்புற
த்தேசத்தார்களுக்கு விசுவாசத்தின் கத
வைத் திறந்தாரென்பதையும் அறிவித்து
ப்பின்பு அங்கே சீஷருடனேகூட அனே
ககாலஞ் சஞ்சரித்துக் கொண்டு வந்தார்
கள்.

---

## ௧௫. அதிகாரம்.

1 அக்காலத்திலே சிலர் யூதேயாவிலிரு
ந்து வந்து நீங்கள் மோசேயின் முறை
மையின்படியே விருத்தசேதனம் பெ

றறுக் கொள்ளாவிட்டால் இரட்சிக்கப்
பட மாட்டீர்களென்று சகோதரருக்கு
2 ப் போதகம் பண்ணினார்கள் —அதினா
லே கலகமும் அவர்களுக்கும் பவுலு,பா
ருனபா என்பவர்களுக்கும் மிகுந்த தரு
க்கமுமுண்டானபொழுது அந்தத் தருக்
கக்காரியத்தைக்குறித்துப் பவுலும் பரு
னபாவுந் தங்களில் வேறே சிலரும் எரு
சலேமிலுள்ள அப்போஸ்தலரிடத்திற்
கும் மூப்பரிடத்திற்கும் போகவேண்
டுமென்று தீர்மானம்பண்ணினார்கள் —
3 அந்தப்படி அவர்கள் சபையாராலே வழி
விட்டு அனுப்பப்பட்ட பின்பு பெனிக்
கே சமாரியா நாடுகளின வழியாய்ப்போ
ய்ப்புறத்தேசத்தார் மனந்திரும்பினதை
அறிவித்துச் சகோதரரெல்லாருக்கும் மி
குந்த சந்தோஷத்தை யுண்டாக்கினார்கள்
4 —எருசலேமிலே அவர்கள் சேர்ந்து ச
பையினாலும் அப்போஸ்தலராலும் மூப்
பராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டபின்பு
பராபரன் தங்களாற் செய்தவைகளை அ
5 றிவித்தார்கள் —அப்பொழுது பரிசே
யராகிய வகுப்பிலே விசுவாசிகளான சில

ரீ எழுந்து அவர்கள்விருத்த சேதனத்தை ப்பெற்றுக்கொண்டு மோசேயின் பிரமா ணத்தைக் கைக்கொள்ளும்படிக்கு உத் தரவு அனுப்பவேண்டுமென்றூர்கள்—
6 பின்பு அப்போஸ்தலரும் மூப்பரும் அந்தக் காரியத்தை ஆராய்ந்து பார்க்கு
7 ம்படிக்குக் கூடினூர்கள்.-மிகுந்த தருக்க முண்டானபொழுது பேதுரு எழுந்து அவர்களுடனே சொன்னது சகோதரரே நீங்கள் அறிந்திருக்கிற படி பாரபரன் அனேக நாட்களுக்கு முன்னே உங்களி லொருவனுகிய என்னுடைய வாயினூலே புறத்தேசத்தார்கள் சுவிசேஷத்தின் வார் த்தையைக் கேட்டு விசுவாசிகளாகும்படி
8 (என்னைத்)தெரிந்தெடுத்தார்.—மேலும் இருதயங்களை அறிந்திருக்கிற பாரபரன் நமக்குக் கொடுத்ததுபோல் அவர்களுக் கும் பரிசுத்த ஆவியைக் கொடுத்து.—
9 (இவ்விதமாய்) அகர்களைக் குறித்துச் சாட்சியிட்டு அவர்களிருதயங்களை விசுவா சத்தினூலே சுத்தமாக்கி அவர் நமக்கும் அவர்களுக்கும் ஒரு வித்தியாசமும் பண்
10 ணவில்லை.—அப்படியிருக்க நம்முடைய

பிதாக்களாலும் நம்மாலுஞ் சுமக்கக்கூடா திருந்த நுகத்தடியைச் சீஷருடைய கழுத்தின்மேற் பிணைக்கிறதினாலே நீங்கள்
11 பராபரனைச்சோதிக்கிறதென்ன? - அப்படியல்லக் கத்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபையினாலே அவர்கள் இரட்சிக்கப்படுகிறபிரகாரமாக நாம் அப்படியே இரட்சிக்கப்படுவோமென்று நம்பியிருக்கிறோமேயென்றான்.
12 அதன்பின்பு கூடிவந்தயாவரும் அமைந்திருந்து, பருனபாவும் பவுலுந் தங்களாலே பராபரன் புறத் தேசத்தார்களுக்குள்ளே செய்த அதிசயங்களையும் அற்புதங்களையும் விபரித்துச்சொல்லக்கேட்டார்க
13 ள்.—அவர்கள் பேசிமுடித்த பின்பு யாக்கோபு சொன்னது சகோதரர்களே என
14 க்குச் செவி கொடுப்பீர்களாக.—பராபரன் தமது நாமத்துக்காகப்புறத்தேசத்தார்களில் ஒரு சனக்கூட்டத்தை எடுத்துக்கொள்ளும்படிக்கு முதலாவது அவர்களை நோக்கிப்பார்த்ததைச் சீமோன் சொன்
15 னானே,—அதற்குத் தீர்க்கதரிசிகளுடை
16 ய வசனங்களும் ஒத்திருக்கின்றது. —மற்

றமனிதர்களும் என்னுடைய நாமத்தைப் பெற அழைக்கப்படும் புறத்தேசத்தாரெல்லாரும் பராபரனைத் தேடிக்கொள்ளும்
17 படிக்கு —நான் இதற்குப் பின்பு திரும்பி வந்து, விழுந்த தாவீதின் கூடாரத்தை மறுபடியும் எழுப்புவேன், அதிலே இடிந்துபோன இடங்களைத் திரும்பக் கட்டி, அதைத் திரும்பச் செம்மையாக நிறுத்துவேன் என்று இவைகளெல்லாவற்றையுஞ் செய்கிற பராபரன சொல்லுகிறார் என்று
18 எழுதியிருக்கிறதே. — அநாதிகாலமுதலாய்ப் பராபரனுடைய கிரியைகளெல்லாம்
19 அவருக்குத் தெரிந்திருக்கின்றன.--ஆகையாற் புறத்தேசத்தார்களிற் பராபரனிடத்துக்கு மனந் திரும்புகிறவர்களைக் கல
20 க்கப் படுத்தாதபடிக்கு,—அசுசிப் படுத்துகிற விக்கிரக போசனங்களுக்கும் வேசித்தனத்திற்கும் நெருக்குண்டு செத்தவைகளுக்கும் இரத்தத்துக்கும் விலகும்படியே அவர்களுக்கு எழுத வேண்டுமெ
21 ன்றெண்ணுகிறேன்.— பூர்வகாலம் முதற்கொண்டு ஆலயங்களில் ஒய்வுநாடோறும் மோசேயின் ஆகமங்கள் வாசிக்கப்ப

ட்டு வருகிறபடியாற் பட்டினந்தோறும் அவைகளைப் பிரசித்தம் பண்ணுகிறவர்க ளுண்டேயென்றான்.

22 அப்பொழுது அப்போஸ்தலரும் மூப்பருஞ் சபையாரெல்லாருந் தங்களிற் சகோதரருக்குள்ளே கனம் பொருந்திய பருசபா என்னப்பட்ட யூதாவையுஞ் சீலாவையுந் தெரிந்துகொண்டு, அவர்களைப் பவுலுவுடனேயும் பருனபாவுடனே யுங் கூட அந்தியோகியாப் பட்டினத்துக்கு அனுப்பவேண்டுமென்று யோசித்

23 து எழுதின நிருபமாவது,—அந்தியோகியாப் பட்டினத்திலுஞ் சீரியாநாட்டின் மற்றவிடங்களிலுங் கிலிக்கியா நாட்டிலுமிருக்கிற புறத்தேசத்தார்களிலிருந்துண்டான சகோதரர்களுக்கு அப்போஸ்தலரும் மூப்பரும் (மற்றச்) சகோதரருமாகிய நாங்கள் சவுக்கிய முண்டாகும்படி

24 வாழ்த்துகிறோம்.—எங்களாற் கட்டளை பெறாத சிலர் எங்களிடத்திலிருந்து புறப்பட்டு, நீங்கள் விருத்தசேதனம் அடையவேண்டுமென்றும் நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ள வேண்டுமென்றுஞ்

சொல்லி, இப்படிப்பட்ட வார்த்தைகளி
னாலே யுங்களைக் கலக்கப்படுத்தி உங்கள்
ஆத்துமாக்களைத் தள்ளாடப் பண்ணி
யிருக்கிறார்களென்று நாங்கள் கேள்விப்
25 பட்டபடியினாலே,—நாங்கள் தெரிந்து
கொண்ட சில மனிதரை நம்முடைய க
த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்
துக்காகத் தங்கள் பிராணனையும்விட எத்
26 தனமாயிருந்தவர்களுமாய்,—எங்களுக்கு
ப் பிரியமானவர்களுமாயிருக்கிற பருன
பாவோடும் பவுலோடுங் கூட உங்களிடத்
துக்கு அனுப்பவேண்டுமென்று ஒருமன
ப்பட்டு யோசனை பண்ணிக்கொண்டு,-
27 அந்தப்படியே யூதாவையுஞ் சீலாவையும்
அனுப்புகிறோம். அவர்களும் இவைகளை
வாக்கினாலேயுங்களுக்கு அறிவிப்பார்கள்-
28 எவையெனில்,விக்கிரகங்களுக்குப் படை
த்தவைகளுக்கும் இரத்தத்திற்கும் நெரு
க்குண்டு செத்ததற்கும் வேசைத்தனத்தி
ற்கும் நீங்கள் விலகியிருக்கவேண்டும். இ
துவேயல்லாமல் வேறதிகமான பாரமொ
ன்றும் உங்கள்மேற் போடாமலிருக்கும்
29 படிக்குப்,—பரிசுத்த ஆவியும் நாங்களு

ஞ் சித்தமாயிருக்கிறோம். மேற் சொல்லி யவைகளினின்று நீங்களுங்களைக் காத்து க்கொண்டால், நன்றுசெய்வீர்கள்; சுக மாயிருப்பீர்களாகவென்றெழுதி, அவர் கள் கையிற் கொடுத்தனுப்பினார்கள்.

30 அவர்கள் அனுப்பிவிடப்பட்டு, அந்தி யோகியாப் பட்டினத்துக்கு வந்து, சபை யைக் கூடி வரச்செய்து, அந்த நிருபத் 31 தைக் கொடுத்தார்கள்,—அதை அவர்கள் வாசித்தபின்பு, அதில் அடங்கிய ஆறுதலா ன வசனங்களைக் குறித்துச் சந்தோஷப் 32 பட்டார்கள்.—பின்பு யூதாவுஞ் சீலாவுந், தாங்களுந் தீர்க்கதரிசிகளானபடியினாலே அனேக வசனங்களினாலே சகோதரருக்கு ப் புத்தி சொல்லி, அவர்களை ஸ்திரப்படு 33 த்திச்,—சிலகாலம் அங்கேயிருந்து, பின்பு சகோதரராற் சமாதானத்துடனே அப் போஸ்தலரிடத்துக்கு அனுப்பிவிடப்பட் 34 டார்கள் .—சீலாவோவெனிற் பின்னும் அங்கே தங்கினால் நலமாயிருக்குமென் 35 றெண்ணியிருந்தான்.—அன்றியும் பவுலு வும் பருனபாவும் அந்தியோகியாவூரிலே சஞ்சரித்து, வேறு அனேகரோடுங்கூடச்

கருத்தருடைய வசனத்தை உபதேசித்துச், சுவிசேஷமாய்ப் பிரசங்கித்துக்கொ
36 ண்டு வந்தார்கள்.—சிலநாளுக்குப் பின்பு, பவுலு பருனபாவைநோக்கிக், கருத்தருடைய வசனத்தை நாம் அறிவித்திருந்த சகல பட்டினங்களிலு முள்ள சகோதரர் சுகமாயிருக்கிறார்களோவென்று, அதைப் பார்க்கும்படிக்குத் திரும்பிப் பிரயாண
37 மாய்ப் போவோம் வாவென்றான்.—அப்பொழுது பருனபாவானவன் மாற்குஎன்றழைக்கப்பட்ட யோவானைக் கூட அழைத்துக்கொள்ளும்படி யோசனை சொன்னா
38 ன்.—பவுலோவென்றால், பம்பீலியா நாட்டிலே தங்களுடனே கூடக் கிரியைக்கு வராமல், தங்களை விட்டுப் பிரிந்துபோன அவனை அழைத்துக்கொள்ளத் தகா
39 தென்று சொன்னான்.— அப்பொழுது கோபமுண்டானதினாலே, அவர்கள் ஒருவரையொருவர் விட்டுப் பிரிந்தார்கள். பருனபாவானவன் மாற்குவைக் கூட்டிக் கொண்டு, கப்பலேறிச் சீப்புருதீவுக்குப்
40 போனான்.—பவுலானவன் சீலாவைத் தெரிந்துகொண்டு, சகோதரராலே கருத்த

ன் சித்தமாயிருக்கிறோம். மேற் சொல்லி
யவைகளினின்று நீங்களுங்களைக் காத்து
க்கொண்டால், நன்றுசெய்வீர்கள்; சுக
மாயிருப்பீர்களாகவென்றெழுதி, அவ
கள் கையிற் கொடுத்தனுப்பினார்கள்.
30 அவர்கள் அனுப்பிவிடப்பட்டு, அந்தி
யோகியாப் பட்டினத்துக்கு வந்து, சபை
யைக் கூடி வரச்செய்து, அந்த நிருபத்
31 தைக் கொடுத்தார்கள்,—அதை அவர்கள்
வாசித்தபின்பு, அதில் அடங்கிய ஆறுதலா
ன வசனங்களைக் குறித்துச் சந்தோஷப்
32 பட்டார்கள்.—பின்பு யூதாவுஞ் சீலாவுந்,
தாங்களுந் தீர்க்கதரிசிகளானபடியினாலே
அனேக வசனங்களினாலே சகோதரருக்கு
ப் புத்தி சொல்லி, அவர்களை ஸ்திரப்படு
33 த்திச்,—சிலகாலம் அங்கேயிருந்து, பின்பு
சகோதரராற் சமாதானத்துடனே அப்
போஸ்தலரிடத்துக்கு அனுப்பிவிடப்பட்
34 டார்கள் .—சீலாவோவெனிற் பின்னும்
அங்கே தங்கினால் நலமாயிருக்குமென்
35 றெண்ணியிருந்தான்.—அன்றியும் பவுலு
வும் பருனபாவும் அந்தியோகியாவூரிலே
சஞ்சரித்து, வேறு அனேகரோடுங்கூடச்

கருத்தருடைய வசனத்தை உபதேசித்து, சுவிசேஷமாய்ப் பிரசங்கித்துக்கொண்டு வந்தார்கள்.—36 சிலநாளுக்குப் பின்பு, பவுலு பருனபாவைநோக்கிக், கருத்தருடைய வசனத்தை நாம் அறிவித்திருந்த சகல பட்டினங்களிலு முள்ள சகோதரர் சுகமாயிருக்கிறார்களோவென்று, அதைப் பார்க்கும்படிக்குத் திரும்பிப் பிரயாணமாய்ப் போவோம் வாவென்றான்.—37 அப்பொழுது பருனபாவானவன் மாற்குஎன்றழைக்கப்பட்ட யோவானைக் கூட அழைத்துக்கொள்ளும்படி யோசனை சொன்னான்.—38 பவுலோவென்றாற், பம்பீலியா நாட்டிலே தங்களுடனே கூடக் கிரியைக்கு வராமல், தங்களை விட்டுப் பிரிந்துபோன அவனை அழைத்துக்கொள்ளத் தகாதென்று சொன்னான்.—39 அப்பொழுது கோபமுண்டானதினாலே, அவர்கள் ஒருவரையொருவர் விட்டுப் பிரிந்தார்கள். பருனபாவானவன் மாற்குவைக் கூட்டிக்கொண்டு, கப்பலேறிச் சீப்புருதீவுக்குப் போனான்.—40 பவுலானவன் சீலாவைத் தெரிந்துகொண்டு, சகோதரராலே கருத்த

ருடைய கிருபைக்கு ஒப்புவிக்கப் பட்டு
41 ப்—புறப்பட்டுச் சீரியா நாட்டிலேயுஞ்
சிலிக்கியா நாட்டிலேயுந் திரிந்து, சபைக
ளை ஸ்திரப்படுத்தினான்.

---

## ௰௬. அதிகாரம்.

1 பின்பு அவன் தெருபேயூருக்கும் இ
ஸ்திராவூருக்கும் வந்தான். அங்கே தீமோ
த்தேயு என்னப்பட்ட சீஷனிருந்தான்.
அவனுடைய தாய் விசுவாசமுள்ள ஒரு
யூத ஸ்திரியானவள் அவனுடைய தகப்ப
2 னோ கிரேக்கனானவன்.—மேலும் அவன்
இலிஸ்திராவிலும் இக்கோனியாவிலுமிரு
க்கிற சகோதரராலே நற்சாட்சி பெற்ற
3 வன்.—அவனைப் பவுலு தன்னுடனே கூ
டப் புறப்பட வேண்டுமென்று விரும்பி
அவனுடைய தகப்பன் கிரேக்கனென்ற
அவ்விடங்களிலிருக்கிற யூதர்களெல்லாரு
ம் அறிந்தபடியால் அவனுக்கு விருத்த
4 சேதனம்பண்ணினான்.-பின்பு அவர்கள் ப
ட்டினங்களிலே திரிந்து நடக்கையில் எரு

சலேமிலுள்ள அப்போஸ்தலராலும் மூப்
பராலுந் தீர்மானம் பண்ணப்பட்ட சட்
டங்களைக் காத்துக்கொள்ளும் படிக்குச்,
5 சனங்களுக்கு ஒப்புவித்தார்கள்.—அதினா
லே சபைகள் விசுவாசத்திலே ஸ்திரப்ப
6 ட்டு, நாடோறும் பெருகினார்கள்.—பின்
பு அவர்கள் பிரிகியாநாட்டிலேயுங் கலா
த்தியா நாட்டிலேயுந் திரிந்துகொண்டு
வருகிறபொழுது, ஆசியாதேசத்திலே அ
வர்கள் சுவிசேஷ வசனத்தைச் சொல்
லாதபடிக்குப் பரிசுத்தஆவியினாலே தடை
7 பண்ணப்பட்டுப்.—பின்பு மீசியாநாட்
டுக்கு வந்து, பித்தினியநாட்டுக்குப் போ
கப் பிரயத்தனம் பண்ணினார்கள். அதற்
கும் இயேசுவினுடைய ஆவி தடைபண்
8 ணினார்.—அப்பொழுது அவர்கள் மீசியா
நாட்டைக் கடந்து, துரோவஸ் பட்டி
9 னத்திற்குப்போனார்கள்.—அங்கே இரா
த்திரியிலே பவுலுக்கு ஒரு தரிசனை யுண்
டாயிற்று. என்னவெனில், மக்கெதோனி
யா தேசத்தானொருவன் நின்று, நீ மக்
கெதோனியாவில் வந்து, எங்களுக்கு உ
தவிசெய்வாயாகவென்று அவனை வேண்

10 டிக் கொண்டதாக இருந்தது.— அந்தத்
தரிசனையை அவன் கண்டபொழுது, அவ
ர்களுக்குச் சுவிசேஷத்தை அறிவிக்கும்
படிக்குக் கருத்தர் எங்களை அழைத்தாரெ
ன்று நாங்கள் நிச்சயமாயறிந்து, உடனே
மக்கெதோனியா தேசத்துக்குப் புறப்ப
ட்டுப்போகப் பிரயத்தனம்பண்ணிக்.—
11 கப்பலேறித், துரோவஸ் பட்டினத்தை
விட்டு, நேராய்ச் சமொத்திராக்கே தீவுக்
கும், மறுநாளிலே நேயாப்போலி பட்
12 டினத்துக்கும் வந்து.— அங்கேயிருந்து
மக்கெதோனிய தேசத்தின் தலையானது
மாய் உரோமர் குடியேறினதுமாயிருக்
கிற பிலிப்பிபட்டினத்திற் சேர்ந்து, சில
13 நாள் அதிலே சஞ்சரித்தோம்.— பட்டின
த்துக்கு வெளியே ஆற்றினருகே வழக்க
மாய் வேண்டுதல்பண்ணுதற்கான இடத்
திற்கு ஓய்வுநாளில் நாங்கள் போய், அங்
கே உட்கார்ந்து, கூடிவந்திருந்த ஸ்திரீ
14 களுடனே, பேசிக்கொண்டோம்.— ஒரு
ஸ்திரீ தியத்திராவூராளுமாய் இரத்தாம்ப
ரம் விற்கிறவளுமாய்த் தேவபத்தியுள்ள
வளுமாய் லீதியாளென்று பேர்கொண்

டவளுமாயிருந்தாள். அவள் பவுலுவிஞற்
சொல்லப்பட்டவைகளைக் கேட்டுக்கொ
ண்டிருக்கையில், அவைகளுக்கு அவள்
எச்சரிக்கையாயிருக்கும்படிக்குக், கர்த்தர்
அவளுடைய இருதயத்தைத் திறந்தார்.—
15 பின்பு அவளும் அவளுடைய குடும்பத்
தாரும் ஞானஸ்நானம் பெற்றபொழுது
அவள் எங்களை நோக்கி, நீங்களென்னைக்
கர்த்தாவினிடத்தில் விசுவாசமானவளென்
றெண்ணிஞல், என் வீட்டிலே வந்து, தங்
கி இருப்பீர்களாக வென்று எங்களை மிக
வும் வேண்டிக்கொண்டு இருத்திஞள்.—
16 நாங்கள் வேண்டுதலுக்குப் போகையிற்
பீத்தோனுடைய ஆவியைக்கொண்டிருந்
து குறிசொல்லுகிறதிஞலே தன் எசமா
ன்களுக்கு மிகுந்த ஆதாயத்தையுண்டாக்
கின ஒருவேலேகாரி எங்களுக்கு எதிர்ப்ப
17 ட்டாள்.—அவள் பவுலுவுக்கும் எங்களு
க்கும் பின்சென்று இந்தமனிதர் உன்னத
மான பராபரனுடைய ஊழியகாரர், உங்
களுக்கு இரட்சிப்பின் மார்க்கத்தை அறி
18 விக்கிறவர்களென்று கூப்பிட்டாள்.—இப்
படி அனேகநாட் செய்தாள், அப்பொ

ழுது பவுல் விசனமடைந்து, திரும்பிக்
கொண்டு, அந்த ஆவியுடனே சொன்ன
து, இவளைவிட்டுப் புறப்படும்படிக்கு இ
யேசுக்கிறிஸ்துவினுடைய நாமத்தினாலே
உனக்குக் கட்டளையிடுகிறேனென்றான்.
அந்நேரம் அது புறப்பட்டுப்போயிற்று
19 —அவளுடைய எசமான்கள் தங்கள் ஆதா
யத்தின் நம்பிக்கை அற்றுப்போயிற்றெ
ன்று அறிந்து, பவுலுவையுஞ் சீலாவையும்
பிடித்துச் சந்தைவெளியிலுள்ள தலைவரி
20 டத்திற்கு இழுத்துப்.—பின்பு அவர்களை
த் துரைகளுக்கு முன்பாகக் கொண்டு
போய், யூதர்களாகிய இந்த மனிதர் நம்
முடைய பட்டினத்தைக் கலங்கப்பண்ணி
21 —உரோமராகிய நம்மாலே ஏற்றுக்
கொள்ளவுஞ் செய்யவும் படாத முறை
மைகளை அறிவிக்கிறார்களென்றார்கள்.—
22 அப்பொழுது சனங்கள் அவர்களுக்கு வி
ரோதமாய் எழும்பினதுமல்லாமல், து
ரைகள் அவர்களுடைய வஸ்திரங்களைக்கிழி
த்துப்போடவும் அவர்களை அடிக்கவுஞ்
23 சொல்லி.—மிகுதியாய் அவர்களை அடிப்
பித்த பின்பு, சிறைச்சாலையிலே வைத்து,

அவர்களைப் பத்திரமாய்க் காக்கும்படிக்குச் சிறைச் சாலைக் காரனுக்குக் கட்டளையிட்டார்கள்.—அவன் இப்படிப்பட்ட கட்டளையைப் பெற்றபொழுது, அவர்களை உள்ளுக்கு உள்ளான காவல் அறையிலேபோட்டு, அவர்கள் கால்களை மரத்தில் அடித்து வைத்தான்.—அப்படியிருந்தும், பாதி இராத்திரியிலே பவுலுவுஞ் சீலாவும்வேண்டுதல் பண்ணிப் பராபரனைத் துதித்துப் பாடினார்கள். காவலில் வைக்கப் பட்ட மற்றவர்கள் அதைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.—சடுதியிலே சிறைச்சாலையின் அஸ்திபாரங்கள் அசையத்தக்கதாகப் பூமி மிகவும் அதிர்ந்தது. உடனே கதவுகளெல்லாந் திறக்கப்பட்டன, எல்லாரையுங் கட்டியிருந்த சங்கிலிகள் அற்றுப் போயின.—சிறைச் சாலைக்காரனே விழித்துச் சிறைச்சாலையின் கதவுகள் திறந்திருக்கிறதைக் கண்டு, அதில் வைக்கப்பட்டவர்கள் ஓடிப்போனார்களென்று நினைத்துக் கத்தியையுருவித் தன்னைக்கொலைசெய்ய எத்தனமாயிருந்தான்.—பவுலோ நாங்களெல்லாரும் இங்கேயிருக்கிறோம் ஆ

கையால் நீ உனக்குக் கேடொன்றுஞ் செ
ய்யாதிருப்பாயாகவென்று மிகுந்த சத்த
29 மாய்க் கூப்பிட்டான்.— அப்பொழுது
அவன் விளக்குகளை அழைப்பித்து, உள்
ளே ஓடி நடுக்கமடைந்தவனாய்ப் பவுலு
வுக்குஞ் சீலாவுக்கும் முன்பாகவிழுந்து
30 —பின்பு அவர்களை வெளியே அழைத்து
ப்போய், ஆண்டவர்களே, இரட்சிக்கப்ப
டுகிறதற்கு நான் என்ன செய்யவேண்டு
31 மென்றான்.-அதற்கு அவர்கள் கத்தராகிய
இயேசுக்கிறிஸ்துவை விசுவாசித்துக்கொ
ள்வாயாக, அப்பொழுது நீயும் உன்வீட்
டாரும் இரட்சிக்கப் படுவீர்கள் என்று
32 சொல்லி.—அவனுக்கும் அவனுடைய வீ
ட்டிலிருந்த யாவருக்குங் கத்தருடைய வ
33 சனத்தைப் போதித்தார்கள்.—மேலும்
அவ்விராத்திரியில் அந்நேரத்திலே தானே
அவன் அவர்களைச் சேர்த்துக்கொண்டு,
அடிகளாலான காயங்களைக் கழுவினன்.
அன்றியும் அவனும் அவனைச்சேர்ந்தயா
வரும் உடனே ஞானஸ்நானம் பெற்றார்
34 கள்.—பின்பு அவன் அவர்களைத் தன்வீட்
டுக்குள் அழைத்துப்போய் அவர்களுக்கு

ப் போசனங்கொடுத்துத் தானுந் தன் வீ
ட்டாரனைவருங் பராபரனில் விசுவாசிக
ளானபடியினாலே மிகவும் மகிழ்ச்சியாயி
35 ருந்தான்.— உதயமான பொழுது, து
ரைகள் தலையாரிகளை அழைத்து, அந்த
மனிதரை விட்டுவிடும்படி சொல்லுங்கள்
36 என்றனுப்பினார்கள்.-சிறைச்சாலைக்காரன்
பவுலுவுடனே சொன்னது, உங்களை விடு
தலையாக்கும்படிக்குத் துரைகள் கட்ட
ளை யனுப்பினார்கள். ஆகையால் நீங்கள்
புறப்பட்டுச் சமாதானத்துடனே போ
37 வீர்களாகவென்றான்.—அதற்குப் பவுல்
சொன்னது உரோமராகிய எங்களை யவர்
கள் நியாயம் விசாரியாமல் வெளியரங்க
மாய் அடிப்பித்துச் சிறைச்சாலையிலே
போட்டு, இப்பொழுது இரகசியமாய்
எங்களை விடுதலையாக்குகிறார்களா. அப்ப
டியல்ல அவர்களே வந்து எங்களை வெளி
யே அழைத்து அனுப்பிவிடக் கடவார்க
38 ளென்றான்.—இந்த வசனங்களைத் தலையா
ரிகள் துரைகளுக்கு அறிவித்தார்கள். உ
ரோமரா யிருக்கிறார்களென்று அவர்கள்
கேட்டபொழுது பயம் அடைந்து வந்து

அவர்களுடனே தயவாகப் பேசிக்கொ
39 ண்டு,—பின்பு அவர்களைவெளியே அழை
த்துவந்து பட்டினத்தை விட்டுப்போகு
40 ம்படி கேட்டுக் கொண்டார்கள்—அந்த
ப்படி அவர்கள் சிறைச் சாலையிலிருந்து
புறப்பட்டு இலீதியாளிடத்துககுப்போ
யச் சகோதரரைக் கண்டு அவர்களுக்கு
ஆறுதல் சொல்லிப் புறப்பட்டார்கள்.

---

௰எ. அதிகாரம்.

1 அவர்கள் அம்பிபோலிப் பட்டினத்
தையும் அப்பொலோனியப் பட்டினத்
தையுங் கடந்து தெசலோனிக்காப் பட்
டினத்திற்கு வந்தார்கள். அங்கே யூதர்க
2 ளுக்காக ஒரு ஆலய மிருந்தது—பவு
ல் தன் வழக்கத்தின் படியே அவர்களிட
த்திற்குப் போய் மூன்று ஓய்வு நாட்களி
ல் வேதவாக்கியங்களின் நியாயங்களையெ
டுத்து அவர்களுடனே சம்பாஷித்துக்
3 கொண்டு வருகையிற்—கிறிஸ்து பாடு
படவும் மரித்தோரிலிருந் தெழுந்திருக்க
வும் வேண்டு மென்று காண்பித்து நான
உங்களுக்கறிவிக்கிற இயேசுவே கிறிஸ்து

4 என்று திருட்டாந்தரப் படுத்தினன்—அ
வர்களிற் சிலர் அதற்குச் சம்மதித்துப், ப
வுலுவையுஞ் சீலாவையுஞ் சேர்ந்துகொ
ண்டார்கள். தேவ பத்தியுள்ள கிரேக்கரி
ல் அனேகம் பேருங் கனம் பொருந்திய
ஸ்திரிகளில் மிகுதியான பேரும் அப்ப
டியே செய்தார்கள்.

5 சம்மதியாத யூதர்களோ வயிராக்கிய
ங் கொண்டு தெருக்களிலே திரிந்தலைகிற
சில பொல்லாத மனிதரைச் சேர்ந்து
கொண்டு, கூட்டங் கூடிப், பட்டினத்
தைக் கலகப் படுத்தி, யாசோனுடைய வீ
ட்டுக்கு முன் பலபந்தமா யெதிர்த்துவந்
து, அவர்களைச் சனங்களுக்கு முன்பாக
க் கொண்டு போகும்படி வகை தேடின
6 ர்கள்—அவர்களைக் காணாமலிருந்த பொ
ழுது, அவர்கள் யாசோனையுஞ் சில
சகோதரரையும் பட்டினத்துத் தலைவரி
டத்திற்கு இழுத்துக்கொண்டு போய், உ
லகத்தைக் கலகப்படுத்துகிறவர்கள் இங்
7 கேயும் வந்திருக்கிறார்கள்—யாசோன் இ
வர்களை ஏற்றுக்கொண்டான். இவர்களெல்
லாரும் இயேசுவென்னும் வேறொருவனை

இராசா வென்று சொல்லி, இராசனுடைய கட்டளைக்கு விரோதஞ் செய்கிறா
8 ர்கள் என்று கூப்பிட்டு,—இவைகளைக் கேட்டுக்கொண்ட சனங்களையும் பட்டினத்துத் தலைவரையுங் கலங்கப் பண்ணி
9 னார்கள்.—அப்பொழுது அவர்கள் யாசோன் இடத்திலும் மற்றவர்கள் இடத்திலுங் கையெழுத்து வாங்கிக்கொண்டு அ
10 வர்களை விட்டு விட்டார்கள்.—உடனே சகோதரர்கள் இராத்திரிகாலத்திலே பவுலையுஞ் சீலாவையும் பெரோயாவூருக்கு அனுப்பி விட்டார்கள். அவர்கள் அங்கேசேர்ந்து, யூதர்களுடைய ஆலய
11 த்துக்குப் போனார்கள்,—தெசலோனிக்கேயிலுள்ளவர்களைப் பார்க்கிலும், அவர்கள் மேன்மையுள்ளவர்களாயிருந்து, மிகுந்த மனப்பூர்வத்தோடே சுவிசேஷவசனத்தை யேற்றுக்கொண்டு, காரியங்கள் மெய்யாய் அப்படிப்பட்டவைகளோவென்று நாடோறும் வேதவாக்கியங்களை
12 ஆராய்ந்தார்கள்,—ஆதலால் அவர்களில் அநேகம்பேருங் கனம்பொருந்திய அநேக கிரேக்க ஸ்திரிகளும் புருஷரும் விசுவா

13 சிகளானார்கள்.—பெரோயா வூரிலேயுங் கருத்தருடைய வசனம் பவுலினால் அறிவிக்கப் படுகின்றதென்று தெசலோனிக்கேயரான யூதர்கள் அறிந்தபொழுது அங்கேயும் வந்து, சனங்களைக்கலகப்படுத்
14 தினார்கள்.—உடனே சகோதரர்கள் பவுலுவைச் சமுத்திரத்தின் வழியாய்ப்போக அனுப்பினார்கள் சீலாவுந் தீமோத்தேயும்
15 பின்னுமங்கே தங்கினார்கள்.—பவுலுவை வழிநடத்திப் போனவர்களோ அவனை அத்தேனே பட்டினத்திற்கு அழைத்துப் போய், அங்கே சீலாவுந் தீமோத்தேயும் அதிசீக்கிரந் தன்னிடத்தில் வர வேண்டும் என்று அவர்களுக்குச் சொல்லும்படி கற்பனை பெற்றுப் புறப்பட்டுப்போனார்கள்.

16 அவர்கள் வரும்படிக்குப் பவுலென்பவன் அத்தேனே பட்டினத்திற் காத்துக் கொண்டிருக்கையிற், பட்டினம் விக்கிரகங்களால் நிறைந்திருக்கிறதைப் பார்த்து மனசில் மிகுந்த வயிராக்கியத்தை
17 அடைந்து கொண்டு,—பின்பு ஆலயத்திலே யூதர் களோடும் மற்றத் தேவபத்தியுள்ள பேர்களோடுஞ் சந்தை வெளியி

மேல் தனக்கு எதிர்ப் பட்டவர்களோடும்
18 நாடோறும் பேசிக் கொண்டான்.—அ
ப்பொழுது எப்பிக்கூருமஸ்தோயிக்க
ருமான ஞானிகளிற் சிலர் அவனுடனே
வாக்கு வாதம் பண்ணிக்கொண்டு வரும்
காலத்திலே, சிலர் இந்த வாயாடி என்ன
பேச வானென்றார்கள். சிலர் அவன் இ
யேசுவையும் மரித்தோரிலிருந் தெழுந்தி
ருக்குதலையும் அவர்களுக்குப் பிரசங்கித்
த படியினாலே, இவன் அன்னிய தேவர்க
ளை அறிவிக்கிறவனென்று தோன்றுகின்ற
19 தென்றார்கள்.—அப்பொழுது அத்தே
னே பட்டினத்தாரெல்லாரும் அங்கே
தங்கும்படி வருகிற அன்னியரும் புதிய
வைகளைக் கேட்கிறதினாலும் பேசுகிறதி
னாலுமேயன்றி மற்றொருவிதமாய்த் தங்
கள் காலத்தைப் போக்க விரும்பாதவர்க
20 ளானபடியால்.—அவர்கள் அவனை மாரு
ஸ்தேவனுடைய மேடையிலுள்ள நியாய
ஸ்தலத்துக்கு அழைத்துப்போய், நீ சொ
ல்லுகிற புதிய உபதேசத்தை நாங்கள் அ
21 றியலாமா?—நவமான காரியங்களையே எ
ங்கள் காது கேட்கப் பண்ணுகிறாய், ஆ

கையால் நாங்கள் அவைகளை அறிய வேண்
22 டுமென்றிருக்கிறோமென்றார்கள்.—அப்
பொழுது பவுல் மாருஸ்மேடையின நடு
விலே நின்று சொன்னது, அத்தேனரே
எல்லாவற்றிலுந் தேவபத்தியே யுங்களுக்
கு மிகவுமுண்டாயிருக்கிறதென்று என
க்குத் தோன்றுகின்றது. எப்படியென்றா
ல், நான் திரிந்துவந்து, உங்கள் தேவ ஆ
ராதனைக் கேற்றவைகளை நோக்கிப் பார்
த்த பொழுது, அறியப்பட்டிராத தேவ
னுக்கென்றெழுதியிருக்கிற ஒரு பீடத்தை
23 யுங் கண்டேன்.—நீங்கள் அறியாமற் பணி
வு செய்கிறவரையே நான் உங்களுக்கறி
24 விக்கிறேன்,—உலகத்தையும் அதிலுள்ள
யாவையுமுண்டாக்கின தேவனானவர் வா
னத்துக்கும் பூமிக்கும் ஆண்டவரானதா
ற், கைகளாற் செய்யப்பட்ட கோவில்
25 களில் வாசம் பண்ணுகிறதுமில்லை—யா
தொன்று தமக்கு வேண்டுவதாக மனிதர்
கைகளாற் பணிவிடை கொள்ளுகிறதுமி
ல்லை-எல்லாருக்குஞ் சீவனையுஞ் சுவாசத்
தையும் மற்றயாவையும் அவர் கொடுத்தி
26 ருக்கிறாரே,—அல்லாமலும் அவரே ஒரே

இரத்தத்திலிருந்து மனிதர் எல்லாருந் தோன்றப்பண்ணி, நம்மிலொருவருக்குத் தூரமல்லாத கத்தராகிய தம்மை அவர்கள் தடவி அடைந்துகொள்ளத் தக்கதாக
27 கத்.—தம்மைத் தேடும்படிக்கு, அவர்களுக்காக முன் திட்டமாக்கப் பட்ட காலங்களையுங் குடியிருப் பெல்லைகளையுங் குறித்து, அவர்கள் பூமியிலெங்குங் குடி
28 யிருக்கும்படி செய்தார்——அவரால் நாம் பிழைக்கிறோம், அசைகிறோம், இருக்கிறோம், அதுபோல உங்களிற் சில புலவர்களும், அவருடைய வமிசத்தாராயிருக்
29 கிறோம் என்று சொன்னார்கள்.—ஆதலால் நாங் கருத்தருடைய வமிசத்தாராயிருக்கத் தெய்வம் மனிதருடைய சித்திரவேலையினாலுந்தோறறுதலினாலும் பொன், வெள்ளி, கல் இவைகளாற் செய்யப் பட்டதற்கு ஒப்பாயிருக்கின்ற தென்று
30 நாம் நினைக்கலாகாது.—அறியாமையுள்ள காலங்களைக் கருத்தர் காணாதவர்போலிருந்தார். இப்பொழுதோ குணப்படவேண்டு மென்று எவ்விடத்திலு முள்ள மனிதர் யாவருக்குங் கட்டளை யிடுகிறார்.

31 —மேலும் ஒரு நாளைக்குறித்தார். அதிலே அவர் தாம் நியமித்த ஒருவரைக்கொண்டு பூச்சக்கரத்திலுள்ள யாவருக்கும் நியாயத்தீர்ப்புக் கொடுப்பார். அவரை மரித்தோரிலிருந் தெழுப்பினதினாலே அவர் அதின் நிச்சயத்தை எல்லாருக்கும் வி
32 ளங்கப் பண்ணினாரென்றான்.—மரித்தோர் உயிரோடெழுந்திருக்குதலைக் குறித்து அவர்கள் கேட்டபொழுது சிலர் இகழ்ந்தார்கள். சிலர் பின்னொருவேளை இதைக் குறித்து உன்னிடத்திற் கேட்போம் என்
33 றார்கள்.—அப்பொழுது பவுலு அவர்களிலிருந்து புறப்பட்டுப் போனான்.-
34 சிலர் அவனைப்பற்றிக்கொண்டு, பின்பு விசுவாசிகளானார்கள், அவர்களில், தியொனீசி என்னும் நியாயாதிபதியுந, தாமரியென்றபேருள்ள ஒருஸ்திரியும் இவர்களுடனே கூட வேறுசிலருமிருந்தார்கள்.

---

## ௰அ. அதிகாரம்.

1 அதன் பின்பு பவுலு அத்தேனே பட்டினத்தை விட்டுக் கொறிந்து பட்டின
2 த்திற்கு வந்து,—இர்ரயுலாகிய கிலவுதி,

யூதரெல்லாரையும் உரோம பட்டினத்
தை விட்டுப்போகும்படி, கட்டளையிட்
டபடியினாலே, இத்தாலி நாட்டினின்று
நவமாய் வந்திருந்த ஆக்கில்லாவென்று
நாமமுள்ள பொந்து தேசத்தானாகிய ஒ
ரு யூதனையும் அவனுடைய மனைவியாகி
ய பிரிஸ்கில்லாளையும் அங்கே கண்டு,—
3 அவர்களிடத்திற் போய்த், தானும் அவ
ர்களும் ஒரே தொழில் செய்தவர்களான
படியினாலே, அவர்களிடத்திலே தங்கித்
தொழில்செய்தான், அவர்களுடையதொ
4 ழில் கூடாரம் பண்ணுதல்,—அன்றியும்
அவன் ஓய்வுநாடோறும் ஆலயத்திலே ச
ம்பாஷணைபண்ணி, யூதருக்குங் கிரேக்க
5 ருக்கும் புத்தி சொன்னான்,—மேலும் ம
க்கேதோனி நாட்டிலிருந்து சீலாவுந் தீ
மோத்தேயும் வந்தபொழுது, பவுல் த
ன் ஆவியிலே அதிக வயிராக்கியங் கொண்
டு இயேசுவானவரே கிறிஸ்து என்று யூ
6 தருக்குக் காண்பித்தான்.—அவர்களோ,
எதிர்பேசித் தூஷணித்தபொழுது அவ
ன் தன் வஸ்திரங்களையுதறி, உங்களுக்குக்
கேடுவரும்படிக்கு நீங்களே எதுவாயிரு

7 க்கிறீர்கள்.—நான் சுத்தமாயிருக்கிறேன்.
இதுமுதல் நான் புறத் தேசத்தார்களிட
த்திற் போகிறேனென்று அவர்களுடனே
சொல்லி, அவ்விடத்தைவிட்டுத் தேவபத்
தியுள்ள யூஸ்து என்பவனுடைய வீட்டி
லே போனான். அந்த வீடு ஆலயத்திற்கு
8 அடுத்ததாயிருந்தது.—மேலும் ஆலயத்
தலைவனாகிய கிறிஸ்புதன் வீட்டார் அனைவ
ரோடுங் கூடக் கர்த்தரை விசுவாசித்தான்,
கொரிந்தியரில் அநேகருஞ் சுவிசேஷத்
தைக் கேட்டு, விசுவாசித்து ஞானஸ்நா
னம் பெற்றார்கள்.

9 பின்பு இராத்திரியிலே கர்த்தர் ஒரு தரி
சனத்திலே பவுலுடனே சொன்னது,
இந்தப் பட்டினத்திலே அநேகம்பேர்
என்னுடைய சனங்களாயிருக்கிறார்கள்,
ஆகையால் நான் உன் பங்கிலிருப்பேன்.
ஒருவனும் உனக்குத் தீமைசெய்யும்படிக்
கு உன்மேற் கைகளை நீட்டமாட்டான்.
10 —ஆனபடியினாலே நீ பயப்படாமற்பே
சுவாயாக மவுனமாயிராதிருப்பாயாகவெ
11 ன்றார்.—அந்தப்படி அவன் ஒரு வருஷ
மும் ஆறுமாதமும் அங்கேதங்கிக், பராப

ருடைய வசனத்தை அவர்களுக்குள்ளே
உபதேசம் பண்ணிக்கொண்டுவந்தான்.
12 பின்பு கல்லியோன் என்பவன் அகாயா
நாட்டிலே பிரதி துரையானபொழுது,
யூதர்கள் ஒருமனப்பட்டுப் பவுலுக்கு
விரோதமாயெழும்பி, அவனை நியாயாச
னத்துக்கு முன்பாகக் கொண்டுபோய்,
13 —இவன் வேதநூலுக்கு விரோதமான
விதமாய்ப் பராபரனைச் சேவிக்கும்படி
மனிதருக்குப் போதிக்கிறான் என்றார்க
14 ள்.—அதற்குப் பவுல் தன் வாயைத் திறக்
கையிற், கல்லியோன் யூதருடனே சொ
ன்னது, யூதரே, இது அநீதி அல்லது
மிகவும் பொல்லாங்கான காரியமானால்
நான் உங்களுக்குப் பொறுமையாய்ச்செ
வி கொடுக்க, நியாயமுண்டாயிருக்கும்.
15 —இது உபதேசத்துக்கும் நாமங்களுக்
கும் உங்கள் வேதநூலுக்குமேற்ற தருக்
கமானபடியினாலே இப்படிப்பட்டவைக
ளைக் குறித்து நான் நியாயாதிபதியாயிருக்
க விரும்புகிறதில்லை. ஆகையால் நீங்களே
16 பார்ப்பீர்களாகவென்று சொல்லி,—அவ
ர்களை நியாயாசனத்தைவிட்டுப் போகப்

17 பண்ணினான்.—அப்பொழுது கிரேக்கர் எல்லாரும் ஆலயதலைவனாகிய சொஸ்தேனேயைப் பிடித்து, நியாயாசனத்துக்கு முன்பாகத் தானே அடித்தார்கள். அதைக்குறித்துக் கல்லியோன் விசாரணை பண்ணாமலிருந்தான்.

18 பின்னும் பவுல் அனேகநாள் அங்கே தரித்திருந்த பின்பு அவன் சகோதரருடைய உத்தரவு வாங்கிக் கொண்டு, தனக்கு ஒரு பிராத்தனை உண்டாயிருந்தபடியாற், கெங்கிரேயா பட்டினத்திலே சிரசுசவரம் பண்ணிச், சீரியாத் தேசத்துக்குப் போகும்படி கப்பலேறிப்போனான். பிரிஸ்கில்லாளும் ஆக்கில்லாவும் அவனுடனே கூடப் போனார்கள்.

19 —அவன் எபேசு பட்டினத்திற்குச் சேர்ந்தபொழுது, அவர்களை அங்கேவிட்டு ஆலயத்துக் குட்பிரவேசித்து, யூதருட

20 னே சம்பாஷணைபண்ணினான்.—அவர்கள் அவனைச் சிலகாலந் தங்களுடனேயிருக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டபொழுது, அவன் சம்மதியாமல்,—

21 வருகிற பண்டிகையிலே நான் எப்படியு

ம் எருசலேமிலிருக்கவேண்டும். கர்த்தரு
க்குச சித்தமானால், திரும்பி உங்களிட
த்தில் வருவேன் என்று சொல்லி, அவர்க
ளுடைய உத்தரவுவாங்கிக்கொண்டு, கப்
பலேறி, எபேசு பட்டினத்தை விட்டு,
22 —செசாரியாப் பட்டினத்துக்குப்போ
யிப் பின்பு, (எருசலேமுக்குப்) போ
யிச் சபையாரின் சுகத்தை விசாரித்துக்
கொண்டு, பின்பு அந்தியோகியாவூருக்கு
23 ச்சென்று,—அங்கே சிலகாலஞ் சஞ்சரித்
துப்பின்பு, புறப்பட்டுக், கலாத்தியாநா
ட்டிலேயும் பிரீகியாநாட்டிலேயும் ஊர்
கள் தோறுந் திரிந்து, சீஷரெல்லாரையு
ம் ஸ்திரப்படுத்திக் கொண்டு வந்தான்.
24 அக்காலத்திலே அலேக்குசந்திரிய பட்
டினத்திற் பிறந்தவனுமாயிச், சாதுரிய
வானுமாயி வேதவாக்கியங்களில் வல்லவ
னுமாயிருக்கிற அப்பொல்லோ என்று
பேர்கொண்ட ஒரு யூதன் எபேசுபட்டி
25 னத்துக்கு வந்தான்.—அவன் கர்த்தருடை
ய மார்க்கத்தைக் குறித்து உபதேசங்கே
ட்டு, யோவான் கொடுத்த ஸ்நானத்தை
மாத்திரம் அறிந்தவனாயிருந்தும், கர்த்தரைக்

குரியவைகளை மிகுந்த சாக்கிரதையுள்ள மனசோடே பேசித் திட்டமாய்ப் போத
26 கம்பண்ணிக்கொண்டு வந்தான்,—ஆலய த்திலே தயிரியமாய்ப் பேசினன். ஆக்கி லாவும் பிரிஸ்கில்லாளும் அவன் பேசுகி றதைக் கேட்டபொழுது, அவனைச்சேர் ந்துகொண்டு, பராபரனுடைய மார்க்கத் தை அவனுக்கு அதிக திட்டமாய்க் காண்
27 பித்தார்கள்.—பின்பு அவன் அகாயா நாட் டிலே போகவேண்டுமென்றிருக்கையிற், சிஷர்கள் அவனை உபசாரஞ் செய்யும் படிக்குச், சகோதரர் அவர்களுக்கு எழுதி
28 ஞர்கள்.—அவன் அங்கே சேர்ந்த பின்பு அவன் வெளியரங்கமாய் யூதர்களுடனே பலமாய்த் தருக்கம் பண்ணிக்கொண்டு இயேசுவே கிறிஸ்து என்று வேதவாக்கிய ங்களாலே தெளிவாய்க் காண்பித்தபடியா ற் கிருபையினலே விசுவாசிகளாயிருந்த வர்களுக்கு மிகுந்த உதவியாயிருந்தான்.

---

## ௰௯. அதிகாரம்.

1 அப்பொல்லோ சென்பவன் கொறிந்து பட்டினத்திலிருக்கையிற் பவுல் மேலான

தேசங்களிலே திரிந்து, எபேசுப் பட்டின
2 த்துக்கு வந்தபொழுது,— சிலசீஷரைக் கண்டு, நீங்கள் விசுவாசிகளானபொழுது பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொண்டீர் களோவென்றான், அதற்கு அவர்கள் சொன்னது, பரிசுத்த ஆவியுண்டென்று நாங்கள் கேள்விப்படவுமில்லையே என்றார்
3 கள்.—அப்பொழுது அவன் சொன்னது அப்படியானால், எப்படிப்பட்ட ஞானஸ்நானம் பெற்றீர்களென்றான். அவர்கள் யோவான் கொடுத்த ஸ்நானத்தைப் பெற்
4 றோமென்றார்கள்.—அப்பொழுது பவுல் சொன்னது யோவான் தனக்குப் பின் வருகிறவராகிய கிறிஸ்து இயேசுவை விசுவாசிக்கவேண்டுமென்று சனங்களுக்குச் சொல்லிக், குணப்படுதற்கு ஏற்ற ஞானஸ்
5 நானத்தைக்கொடுத்தானேஎன்றான்.—அதையவர்கள் கேட்டபொழுது, அவர்கள் கத்தராகிய இயேசுவினுடைய நாமத்தினாலே
6 லே ஞானஸ்நானம் பெற்றார்கள்.—அல்லாமலும் பவுல் அவர்கள்மேலே கைகளை வைத்தபொழுது, பரிசுத்த ஆவியானவர் அவர்களிடத்தில் வந்தார். அவர்கள் அவ்

னியபாஷைகளைப் பேசித் தீர்க்கதரிசன
7 முஞ் சொன்னார்கள்.—அந்த மனிதரெல்லா
ரும் ஏறக்குறையப் பன்னிரண்டுபேராம்.
8 —பின்பு (பவுல்) ஆலயத்துக்குப்போய்
த், தயிரியமாய்ப்பிரசங்கம்பண்ணி, மூன்
றுமாதமளவுங் கருத்தருடைய இராச்சி
யத்துக் குரியவைகளைப்பேசித் தெளிவா
ய்க் காண்பித்துக்கொண்டு வந்தான்.—
9 சிலரோ கடினமான மனதுள்ளவர்களு
மாய், அவிசுவாசிகளுமாயிருந்து, கூட்ட
த்துக்கு முன்பாக இந்தமார்க்கத்தை நிந்
தித்தபொழுது, அவன் அவர்களை விட்டு
விலகிச், சிஷரை அவர்களிலிருந்து பிரித்
துக்கொண்டு திறன்னு என்பவனுடைய
பள்ளிக்கூடத்தில் நாடோறுஞ் சம்பாஷி
10 த்துக்கொண்டு வந்தான்.—இப்படி இர
ண்டு வருஷம் நடந்தது. அதினாலே ஆசி
யாவிலேகுடியிருந்த யூதர்கள் கிரேக்கர்க
ள் இவர்களெல்லாருங் கர்த்தராகிய இயே
சுவைக் குறித்து வசனத்தைக் கேள்விப்
11 பட்டார்கள்.—அன்றியும் அதிசயப்படத்
தக்க அற்புதங்களைக் கருத்தர் பவுலுவின்
12 கைகளினாலே செய்து வருகையில்,—அவ

னுடைய சரீரத்திலிருந்த வேர்வைச் சீலை
களையுங் கச்சைகளையும் வியாதியுள்ளவ
ர்கள்மேல் வைத்தவுடனே, வியாதிகள்
அவர்களைவிட்டு நீங்கிப்போயின. பொல்
லாத ஆவிகளும் அவர்களிலிருந்து புறப்
13 பட்டன.—அப்பொழுது தேசாந்தரிக
ளாய்த் திரிகிற மந்திரவாதிகளாகிய யூதரி
ற் சிலர் பொல்லாத ஆவிகள் பிடித்திருந்த
வர்கள் மேற் கத்தராகிய இயேசுவின் நா
மத்தைச் சொல்லத் துணிந்து, பவுல்பிர
சங்கிக்கிற இயேசுவின்பேரிலே யுங்களுக்
14 கு ஆணையிடுகிறோம் என்றார்கள்.—பிரதா
ன ஆசாரியனாகிய இஸ்கேவாவென்னும்
யூதனுடைய குமாரர் எழுபேர்களே அப்
15 படிச் செய்தார்கள்.—அவர்களுக்கு உத்
தரவாகப் பொல்லாத ஆவி சொன்னது
இயேசுவை அறிந்திருக்கிறேன். பவுலை
யும் அறிவேன் நீங்களோ, யாரென்று
16 சொன்னவுடனே,—பொல்லாத ஆவியை
யுடைய மனிதன் அவர்கள்மேற் பாய்ந்து
அவர்களைத் தனக்குட்படுத்திச் சயிக்க
அவர்கள் நிருவாணிகளாயுங் காயம்பட்ட
வர்களாயும் அந்தவீட்டை விட்டோடிப்

17 போனார்கள்.—அது எபேசிலே குடியி
ருக்கிற யூதர் கிரேக்கர் அனைவருக்குந் தெ
ரியவந்தபொழுது அவர்களெல்லாரும் ப
யமடைந்தார்கள். அல்லாமலுங் கத்தராகி
ய இயேசுவின் நாமம் அவர்களுக்குள்ளே
18 மேன்மைப் பட்டது.—அன்றியும் விசு
வாசிகளானவர்களில் அனேகர்வந்து தங்
கள் செய்கைகளை வெளிப்படுத்தி அறிக்
19 கையிட்டார்கள்.—அன்றியும் வீண் வித்தை
க்காரராயிருந்தவர்களில் அனேகர் தங்க
ள் புஸ்தகங்களைக்கொண்டுவந்து எல்லா
20 ர்முன்பாகவுஞ் சுட்டெரித்தார்கள்.—அ
வைகளின் கிரயம் ஐம்பதினாயிரம் வெள்
ளிக்காசென்று மதிக்கப்பட்டது. இவ்வள
வுபலமாய்க் கத்தருடைய வசனம் வளர்
ந்து வல்லமையைக் காண்பித்தது.

21 இவை நிறைவேறினபின்பு பவுல் ம
க்கெதோனியா அகாயா என்னுந் தேச
ங்களின் வழியாய் எருசலேமுக்குப்போ
கும்படி மனசிலே யோசனைகொண்டு,
நான் அங்கேயிருந்து, பின்பு உரோமை
நகரியையும்பார்க்கவேண்டுமென்றுசொ
22 ல்லிக்கொண்டு,—தனக்கு உதவிசெய்த

வர்களில் இரண்டுபேராகிய தீமோத்தே
யுவையும் எரஸ்துவையும் மக்கெதோனி
யா நாட்டுக்கு அனுப்பித் தானே பின்னு
ஞ் சிலகாலம் ஆசியா நாட்டிலேயிருந்தா
23 ன்.—அக்காலத்துக்குள்ளே இந்த மார்க்
கத்தைக்குறித்து மிகுந்த கலகமுண்டா
24 யிற்று.—எப்படி யென்றால், தேமேத்தி
ரி என்று நாமமுள்ள ஒரு தட்டான், தியா
னாள் தேவிக்காக வெள்ளியினாற் சிறுகோ
வில்களைச் செய்துகொண்டு, தொழிலா
ளிகளுக்கு மிகுந்த ஆதாயம் வருவித்து
25 வந்தான்.—அவர்களையும் அப்படிப்பட்
ட தொழிலைச்செய்கிற மற்றவர்களையும்
அவன் கூடி வரச்செய்து சொன்னது,
மனிதர்களே! உங்களுக்குத் தெரிந்திரு
க்கிறபடி, பிழைப்பு இந்தத் தொழிலி
26 னாலே நமக்கு வருகின்றது.—மேலும்
நீங்கள் கண்டுங் கேட்டுமிருக்கிறபடி, அ
நதப் பவுலென்பவன், கைகளாற் செய்ய
ப்பட்டவைகள் தேவர்கள அல்லவென்று
சொலலி எபேசிலே மாத்திரமல்லக், கொ
ஞ்சங் குறைய ஆசியாநாட்டிலெங்கும் அ
னேக சனங்களுக்குப் போதித்து, அவர்

27 களை மாறுபாடாக்குகிறான்.—அதினாலே நம்முடைய அலுவல் கனஈனம் அடைவதற்கு ஏதுவாயிருக்கிறதுமல்லாமல், மகா தேவியாகிய தியானாளுடைய கோவில் எண்ணமற்றுப் போகிறதற்கும் ஆசியாத் தேசத்தாரெல்லாராலும் பூச்சக்கரத்திலுள்ளயாவராலுஞ் சேவிக்கப்படுகிற அவளுடைய மகிமை அழிந்துபோகிறதற்கும்
28 ஏதுவுண்டாயிருக்கிறதென்றான்.—அதை அவர்கள் கேட்டு, மிகுந்தகோபமடைந்து எபேசியருடைய தியானாளே பெரியவளென்று கூப்பிட்டுக் கொண்டார்கள்.—
29 பட்டினமுழுவதுங் கலக்கத்தினாலே நிரப்பப்பட்டது. மேலும அவர்கள் பவுலுடனே கூடப்பிரயாணமாய் வந்த மக்கேதோனியராகிய காயுவையும் அரிஸ்தர்குவையும் இழுத்துக்கொண்டு ஒருமனப்பட்டு வேடிக்கை ஸ்தலத்துக்குப் பாய்
30 ந்தோடினார்கள்,—அப்பொழுது பவுல் கூட்டத்திற் போக மனதாயிருந்தான். சீஷரோ அவனைப் போக விடவில்லை,—
31 மேலும் வேடிக்கை ஸ்தலத்துக்கு அவன் போகாமலிருப்பதற்கு வேண்டிக்கொள்

ளும்படிக்கு அவனுடைய சினேகிதரா
கிய ஆசியாத்தேசத்தலைவரிற்சிலர் அவனி
32 டத்துக்கு ஆள அனுப்பினார்கள்.—அன்றி
யுங் கூட்டம் மிகவுங் கலக்கமுள்ளதாயிரு
க்க அனேகர் தாங்கள் கூடிவந்த காரண
த்தை அறியாதவர்களான படியினாலே சன
ங்கள் பலவிதமாய்க் கூக்குரலிட்டார்கள்.
33 அப்பொழுது யூதர்கள் அலெக்சந்த
ரென்பவனை முன்னிற்கத் தள்ளுகையிற்
கூட்டத்திற் சிலர் அவனை முன்னே இழுத்
தார்கள். அலெக்குச்சந்தர் கையினாற்சமிக்
கைகாட்டிச் சனங்களுக்கு உத்தரவு சொ
34 ல்லவிரும்பினான்.—அவனை யூதனென்று
அவர்கள் அறிந்தபோதோவெனில் எல்
லாரும் எபேசியருடைய தியானாளே பெ
ரியவள் என்று இரண்டுமணிநேரமளவும்
ஏகமாய்க்கூப்பிட்டுக் கொண்டார்கள்.—
35 பின்பு மணியகாரனானவன் சனங்கள் பே
சாமலிருக்கும் படி செய்து சொன்ன
து எபேசியரே எபேசிப் பட்டினம்
மகா தேவியாகிய தியானாளுக்கும் வான
த்திலிருந்து விழுந்த சொரூபத்துக்குங்
கோவிற் பரிசாரகியாயிருக்கிறதைத் யறியா

36 தவனுண்டா.-அது எதிர்ப் பேசப்படாத
காரியமானபடியினாலே நீங்கள் ஒன்றும்
பதறிச்செய்யாமல் அமைந்திருக்கவேண்
37 டும்.—இந்த மனிதர் கோவிற்கொள்ளை
க்காரரல்ல, உங்கள் தேவியைத் தூஷணித்
தவர்களுமல்ல, இப்படியிருந்தும், இவர்
38 களை இங்கே கொண்டுவந்தீர்கள்—தே
மேத்திரியுக்கும் அவனைச் சேர்ந்திருக்கிற
தொழிற்காரருக்கும் ஒருவன்மேலே ஒரு
காரியம் உண்டாயிருந்தால், நியாயம் விசா
ரிக்கும் நாட்களுந் துரைகளுமிருக்கிற ப
டியினாலே ஒருவருக்கொருவர் விரோத
மானபிராது அங்கே பண்ணக் கடவர்
39 கள்—நீங்கள் வேறொருகாரியத்தை விசா
ரித்தால், அது நியாயசங்கத்திலே தீர்க்க
40 ப்படுமே—இன்றைக்குண்டான கலக்கத்
துக்காக நாம் உத்தரவுசொல்ல அழைக்க
ப்படுவதற்கு ஏது வுண்டாயிருக்கின்றது.
இந்தக்கலக்கம் பண்ணுவதற்கு நிமித்தமி
ல்லாதபடியால் நாம் அதைக்குறித்து உ
த்தரவுசொல்லத் திராணியில்லா திருப்
41 போமேயென்று சொல்லிப்.—பின்பு கூ
ட்டத்தை அனுப்பி விட்டான்.

## உ௰. அதிகாரம்.

1 கலகம் அமைந்த பின்பு பவுல் சீஷ
ரைத் தன்னிடத்தில் அழைத்து உத்தரவு
வாங்கிக்கொண்டு மக்கெதோனியாவுக்கு
ப்போகப் புறப்பட்டுப்போய் அந்தப்
2 புறங்களில், திரிந்துகொண்டு.—சீஷர்களு
க்கு அனேக வார்த்தைகளினாற்புத்திசொ
ல்லிக்கொண்டு கிரேக்கதேசத்திற் சேர்ந்
3 தான்.—அங்கே மூன்றுமாதஞ் சஞ்சரித்
தபின்பு அவன் கப்பலேறிச் சீரியாநாட்
டுக்குப் போக மனதாயிருந்தபொழுது
யூதர்கள் அவனுக்குத் தீமைசெய்ய இர
கசியமாய் யோசனைகொண்டிருந்தபடி
யால், மக்கெதோனியா நாட்டின் வழியா
ய்த் திரும்பிப்போகத் தீர்மானம்பண்ணி
4 னான்.—அப்பொழுது ஆசியாத்தேசம்வ
ரைக்கும் அவனோடு கூடப்போனவர்கள்
பெரோசியா வூரானாகிய சொப்பத்தா,
தெசலோனிக்கேயரில் அரிஸ்தருக்கு, செக
குந்து, தெருபேயனாகிய காயு, தீமோத்
தேயு, ஆசியத்தேசத்தாராகிய, திகிக்கு தி
5 ரோப்பிமு, இவர்களே.—அவர்கள் முன்

ஞுகப்போய்த் துரோவாப் பட்டினத்தி லே நாங்கள் வரும்படி காத்திருந்தார்கள்.

6 —நாங்களோ புளியா அப்பப்பண்டிகை நாட்களுக்குப் பின்பு, கப்பலேறிப் பிலிப்புப் பட்டினத்தைவிட்டு ஐந்துநாளைக்குள்ளே துரோவாப்பட்டினத்திலே அவர்களிடத்தில் வந்து ஏழுநாள் அங்கே சஞ்சரித்தோம்.

7 அப்பொழுது வாரத்து முதல்நாளிலே சீஷர் அப்பம் பிட்கும்படிக்குக் கூடி வந்திருக்கையிற் பவுல் மறுநாளிலே புறப்பட வேண்டுமென்றிருந்து, அவர்களுடனே பேசிக்கொண்டு பாதிராத்திரி யளவும்

8 பிரசங்கத்தை நீடித்துப்பேசினன்.-நாங்கள் கூடியிருந்த மெத்தைவீட்டிலே அனேகவிளக்குகள் வைக்கப்பட்டிருந்தன.

9 —அப்பொழுது ஐத்திக்கு என்று பேர் கொண்ட ஒரு வாலிபன் சாளரவாசலில் உட்கார்ந்திருந்து, பவுல்மிகுந்த காலம் பேசிக்கொண்டு வருகையிற், கன தூக்கம் அடைந்து, நித்திரையினுற் சயிக்கப் பட்டுச் சாய்ந்து, மூன்றும் மெத்தையிலிருந்து தாழ விழுந்து, மரித்தவனுய் எடு

10 க்கப்பட்டான். - உடனே பவுல் இறங்கிப்
போய், அவன்மேலே விழுந்து அவனைத்
தழுவிக்கொண்டு, பின்பு உயிர் இவனுக்குள்ளி
ருக்கின்றது ஆகையாற்கலக்கப்படாதிருங்
11 களென்று சொல்லிப். — பின்பு ஏறிப்போ
ய், அப்பம்பிட்டுப் புசித்து, மிகுந்தநேர
ம் விடியற் காலமளவும் பேசிக்கொண்டு,
12 பின்பு புறப்பட்டான். — அந்த வாலிபனை
யோ, அவர்கள் உயிருள்ளவனாக அழைத்
துவந்து, மிகவும் ஆறுதலடைந்தார்கள்.
13 பவுலோ, (அசுபட்டினம் வரைக்கும்)
தான்கால் நடையாய் நடக்க விரும்பி, நா
ங்கள் முன்னாலே கப்பலேறி, அவ்விடத்தி
ற்குப்போய் அங்கே தன்னை ஏற்றிக்கொள்
ளும்படி எங்களுக்கு உத்தரவு கொடுத்
த படியினாலே, நாங்கள் அசுபட்டினத்
திற்குப் போய் இருந்தோம், — பின்பு
14 அவன் அவ்விடத்திலே எங்களோடே சே
ர்ந்தபொழுது, நாங்கள் அவனை ஏற்றிக்
கொண்டு மித்திலேனு பட்டினத்திற்
15 குப்போய்ப், — பின்பு அவ்விடத்தைவி
ட்டு, மறுநாளிலே கியுதீவுக்கு எதிராகச்
16 சென்று. - பவுல் எப்படியும்பெந்தேகோ

ஸ்துப்பண்டிகைநாளிலே எருசலேம்பட்
டணத்திலே சேர வேண்டுமென்று தீவிர
ப்பட்டபடியினாலே, அவன் ஆசியா நாட்
டிலே காலம் போக்காத படிக்கு, எபே
சுபட்டினத்தைக் கடந்து போகவேண்டு
மென்றுதீர்மானம்பண்ணினதால், மறுநா
ளிலே சாமுதீவையடைந்து துரோகில்லி
யோன் ஊர்த்துறையிலே தங்கிமறுநாளி
லேமிலேத்து பட்டினத்துக்குவந்தோம்.

17 மிலேத்துவிலிருந்து அவன் எபேசுவி
லுள்ள சபையின் மூப்பரை அழைத்துவ
ரும்படிக்கு, ஆளனுப்பினன். அவர்கள்

18 தன்னிடத்தில் வந்தபொழுது,—அவன்
அவர்களுடனே சொன்னது, நான்ஆசியா
நாட்டில்வந்த முதலாம்நாள்த்தொடங்கி
எல்லாக்காலங்களிலும் நான் உங்களுடனே
கூடவிருந்த வகையை அறிந்திருக்கிறீர்கள்

19 எல்லாவிதமான மனத்தாழ்மையோடும்
மிகுந்த கண்ணீரோடும் யூதருடைய தீ
மையான யோசனைகளால் எனக்குநேரி
ட்ட சோதனைகளோடும் நான்கருத்தரு
க்கு ஊழியஞ்செய்துகொண்டுவந்தேன்.

20 —பிரயோசனமானவைகளிலொன்றையு

ம் நான் மறைத்து வைக்கவில்லை. வெளிப
ரங்கமாயும் வீடுகள்தோறும் உங்களுக்கு
அறிவித்து, உங்களுக்கு உபதேசம்பண்
21 ணிக்கொண்டு வந்தேன்,—பராபரனிட
த்திற்கு மனந்திரும்புதலையும் நம்முடைய
கத்தராயிருக்கிற இயேசுக் கிறிஸ்துவை
விசுவாசித்துக் கொள்ளுதலையுங் குறித்து
நான் யூதருக்குங் கிரேக்கருக்குஞ் சாட்
22 சிகொடுத்தேன்.— இப்பொழுது நான்
ஆவியிலே கட்டுண்டு எருசலேமுக்குப்
போகிறேன். அங்கே எனக்கு எதிர்ப்ப
23 டுங் காரியங்களை நான் அறியேன்.—கடி
றுகளும் உபத்திரவங்களும் எனக்காக
வைத்திருக்கின்றனவென்று பரிசுத்த ஆவி
யானவர் பட்டினந்தோறும் (எனக்கு)
அறிவிக்கிறதை மாத்திரம் அறிந்திருக்கி
24 றேன்.—ஆகிலும் அவைகளிலொன்றையு
ங் குறித்துக் கவலைப்படேன். என்பிரா
ணனையும் நான் அருமையென்று எண்
ணேன். என் ஓட்டத்தைச் சந்தோஷித்
தோடேமுடிக்கவும், பராபரனுடையகிரு
பையை அறிவிக்கிற சுவிசேஷத்தைப்பிரச
ங்கம்பண்ணும்படிக்கு நான் கத்தராகிய

இயேசுவினிடத்திற் பெற்ற ஊழியத்தை
25 முடிக்கவும் விரும்புகிறேன். —அன்றியும்
நான் உங்களுக்குள்ளே திரிந்து பராபர
னுடைய இராச்சியத்தைப்பிரசங்கம்பண்
ணிக்கொண்டு வந்தேன். அதைக் கேட்ட
வர்களாகிய நீங்களெல்லாரும் இனி என்
முகத்தைப் பார்க்க மாட்டீர்கள் என்று
26 அறிந்திருக்கிறேன்- அப்படியிருக்கப் ப
ராபரனுடைய ஆலோசனையிலொன்றையு
ம் நான் மறைத்து வையாமல், யாவையும்
27 உங்களுக்கு அறிவித்தபடியினாலே,-உங்க
ளிலொருவன் கெட்டுப்போனால், அதினா
லே எனக்குக் குற்றம் வருவதில்லையென்
று இன்றைக்கே உங்களுக்குச் சாட்சியா
28 கச் சொல்லுகிறேன்.—ஆகையால் நீங்க
ள் உங்களைக்குறித்துப் பராபரன் தமது
சுய இரத்தத்தினாலே சம்பாதித்துக் கொ
ண்ட தமது சபையாகிய ஆட்டுக்கூட்ட
ம் முழுவதையும் மேய்ப்பதற்குப் பரி
சுத்த ஆவி உங்களைக் கண்காணிகளாக
வைத்தபடியால், அதைக்குறித்தும், எ
29 ச்சரிக்கையாயிருப்பீர்களாக. —மேலும்
நான் போன பின்பு ஆட்டுக்கூட்டத்தை

ந்தையையோடே நடப்பியாமல், கொடிதா
யிருக்கிற கோனாய்கள் உங்களுக்குள்ளே
30 பிரவேசிக்கும்.—அதுவுமல்லாமல், உங்
களிலுஞ் சிலர் எழும்பிச், சீஷர்களைத்
தங்களிடத்தில் இழுத்துக்கொள்ளும்படி
க்கு மாறுபாடானவைகளைப் போதிப்பா
31 ர்களென்று அறிந்திருக்கிறேன்.—ஆனப
டியினாலே நீங்கள் விழித்துக்கொண்டு,
நான் மூன்று வருஷமாய் இரவும்பகலும்
அவனவனுக்குக் கண்ணீரோடே புத்தி
சொல்லிக்கொண்டு வந்ததை நினைத்துக்
32 கொள்வீர்களாக.—இப்பொழுது சகோ
தரரே! பராபரனுக்கும் அவருடையகிரு
பையையறிவிக்கிற வார்த்தைக்கும் உங்க
ளையொப்புக்கொடுக்கிறேன். அவரே உங்
களையேறக் கட்டவும், பரிசுத்தமாக்கப்
பட்டஎல்லாருமிருக்கிற இடத்திலேசுதந்
திரத்தை யுங்களுக்குக் கொடுக்கவும் வல்
33 லமையுள்ள வராயிருக்கிறார்.—ஒருவனு
டைய வெள்ளியையாகிலும் பொன்னை
யாகிலும் உடுப்பையாகிலும் நான் இச்சி
34 த்ததில்லை.—நீங்கள் அறிந்திருக்கிறபடி,
நானும் என்னுடனே கூடவிருந்தவர்களு

ம், வேண்டிய பதார்த்தங்களை அடையு
ம்படிக்கு இந்தக் கைகளே வேலைசெய்த
35 ன.—அப்படியே வேலைசெய்து, பெல
ஈனரைத் தாங்கவும், வாங்குகிறதைப்பா
ர்க்கிலுங்கொடுக்கிறதே பாக்கியமென்று
கர்த்தராகிய இயேசுசொன்ன வசனங்களை
நினைக்கவும்வேண்டுமென்றுஎல்லாவிதத்
திலுமுங்களுக்குக் காண்பித்தேனென்று
36 சொல்லி.—பின்பு முழங்காற்படியிட்டு,
அவர்களெல்லாரோடுங் கூட வேண்டுதல்
37 பண்ணினான்.—இனிமேல் நீங்கள் என்னு
டைய முகத்தைப் பார்க்கமாட்டீர்களெ
ன்று அவன்சொன்னவசனத்துக்காக அவ
ர்களெல்லாரும் அதிகமாய்த் துக்கப்பட்
38 டு,—மிகவும் அழுதுகொண்டு, பவுலின்
கழுத்தைக் கட்டிக்கொண்டு அவனை முத்
தஞ் செய்து பின்பு கப்பல்வரைக்கும் அ
வனுடனே கூடப்போய், அனுப்பி விட்
டார்கள்.

## உக. அதிகாரம்.

1 நாங்கள் அவர்களை விட்டுப்பிரிந்து
துறைபேர்ந்தபின்பு, நேராய்ப்போய்க்,
கோஸ்தீவுக்கு வந்து, மறுநாளிலே உ

ரோது தீவிற்சென்று அதினின்றுபத்தா
2 ரா பட்டினத்துக்கு வந்து.—அங்கேபெ
னீக்கே தேசத்திற்குப்போக எத்தனமா
யிருந்த கப்பலைக்கண்டு, அதிலேறிப்போ
3 ய்ச் சீப்புருதீவைக் கண்டு,-அதையிடது
புறமாகவிட்டுச், சீரியாநாட்டுக்கு ஓடித்
தீறுபட்டினத்திலே அவர்கள் கப்பலின்
சரக்குகளை இறக்க வேண்டிய படியால்
4 அவ்விடத்திலே சேர்ந்து,-பின்பு சீஷரை
க்கண்டு, எழுநாள் அங்கே தங்கினோம். அவ
ர்கள் பவுலுவை நோக்கி, நீர் எருசலேமு
க்குப்போகக் கூடாதென்று ஆவியினாலே
5 சொன்னார்கள்.-நாங்களோ அந்த நாட்
களை முடித்தபின்பு புறப்பட்டுப் போன
பொழுது அவர்களெல்லாரும் மனைவிக
ளோடும் பிள்ளைகளோடுங் கூடப்பட்டி
னத்துக்குப் புறம்பே (சற்றுத் தூரம்)
வரைக்கும் எங்களை வழி நடத்தினார்கள்.
கடற்கரையிலே நாங்கள் முழங்காற் படி
6 யிட்டு வேண்டுதல்பண்ணி.—ஒருவரிடத்
திலே யொருவர் உத்தரவுவாங்கிக்கொண்
ட பின்பு நாங்கள் கப்பலேறினோம். அவ
ர்கள் தங்கள் வீடுகளுக்குத் திரும்பினார்

7 கள்.—நாங்கள் தீறுபட்டினத்தை விட்டு
ப், பித்தோலேமாயாப் பட்டினத்துக்கு
வந்து, கப்பல் யாத்திரையை முடித்து
ச் சகோதரரை வாழ்த்துதல் செய்து
ஒருநாள் அவர்களிடத்தில்த் தங்கினோம்.
8 மறுநாளிலே பவுலைச்சேர்ந்த நாங்கள்
புறப்பட்டுச்,சேசாரியாப் பட்டினத்துக்
கு வந்து, எழுபேரிலொருவனாகிய பிலிப்
பென்னுஞ் சுவிசேஷகனுடைய வீட்டுக்
குப்போய், அவனிடத்திலே தங்கினோம்.
அவனுக்கு உண்டான குமாரத்திகளாகிய
நான்கு கன்னிகைகளுந் தீர்க்க தரிசனஞ்
9 சொல்லுகிறவர்களா யிருந்தார்கள், -மே
லும், நாங்கள் அனேகநாள் அங்கே தங்கியி
ருக்கையில், ஆகாபு என்று பேர்கொண்
ட ஒருதீர்க்கதரிசி யூதேயாவிலிருந்து வந்
10 திருந்தான்.—அவன் எங்களிடத்தில் வந்
து, பவுலினுடைய கச்சையை யெடுத்
துத் தன்கைகளையுங் கால்களையுங் கட்டி
க்கொண்டு, இந்தக் கச்சையுடையவனை
எருசலேமிலுள்ள யூதர்கள் இப்படிக்க
ட்டிப், புறத்தேசத்தார்களுடைய கைக
ளில் ஒப்புக்கொடுப்பார்களென்று பரிசு

த்த ஆவி சொல்லுகிறாரென்றான்.—
12 அதை நாங்கள் கேட்டபொழுது, அவ
ன் எருசலேமுக்குப் போகாதபடிக்கு,
நாங்களும் அத்தலத்தாரும் வேண்டி
13 க் கொண்டோம்.—பவுலோ மாறுத்த
ரமாகச் சொன்னது, நீங்கள் அழுதுகொ
ண்டு, என் இருதயம் உடைந்து போகப்
பண்ணுகிறதென்ன, எருசலேமிலே நா
ன் கத்தராகிய இயேசுவின் நாமத்துக்கா
கக் கட்டப்படுவதற்கு மாத்திரமல்லமரி
ப்பதற்கும் எத்தனமாயிருக்கிறேனென்
14 றான்.—இப்படி அவன் சம்மதியாதபடி
யினாலே, நாங்கள் கருத்தருடைய சித்தம்
ஆகக் கடவதென்று அமைந்திருந்தோம்.
15 —அந்நாட்களுக்குப் பின்பு, நாங்கள்பிர
யாணச்சாமான்களைச் சேர்த்துக்கொண்
16 டு, எருசலேமுக்குப் போனோம்,—செ
சாரியாப் பட்டினத்திலுள்ள சீஷரிற் சில
ரும் எங்களுடனே கூடவந்து சிப்புருதீ
வானுமாய் மிகுர்தகாலஞ்சீஷனுமாயிரு
ர்த மினசோனிடத்திலே தங்கும்படிக்கு
எங்களை யவனிடத்தில் அழைத்துவந்தா
17 ர்கள்.-நாங்கள் எருசலேமுக்கு வந்தபொ

ழுது சகோதரர் எங்களைச் சந்தோஷித்
18 தோடே ஏற்றுக்கொண்டார்கள்.—மறு
நாளிலே பவுலும்நாங்களும் யாக்கோபி
னிடத்திற்போனோம் எல்லாமூப்பர்களு
19 ம் அங்கே கூடிவந்தார்கள்.—அவர்களை அ
வன் வாழ்த்துதல் செய்து, பின்பு தன் ஊ
ழியத்தினாலே பராபரன் புறத்தேசத்தா
ருக்குள்ளே செய்தவைகளை ஒவ்வொன்றா
20 ய்விவரித்துச் சொன்னான்.-(அதை) அவ
ர்கள் கேட்டுக் கத்தரைத் தோத்திரம்ப
ண்ணிப், பின்பு அவனுடனே சொன்னது
சகோதரனே! யூதர்களில் அனேக ஆயிர
ம்பேர் விசுவாசிகளானதைப் பார்த்திருக்
கிறாய். அவர்களெல்லாரும் நியாயப்பிர
மாணத்துக்காக வயிராக்கியமுள்ளவர்க
21 ளாயிருக்கிறார்கள்.—நீயோ புறத்தேசத்
தாருக் குள்ளேயிருக்கிற யூதரெல்லாரு
ந் (தங்கள்) பிள்ளைகளை விருத்தசேதனம்
பண்ணவும்மற்றமுறைமைகளின்படியே
நடக்கவும் வேண்டுவதில்லையென்று சொ
ல்லி, இவ்விதமாய் அவர்கள் மோசேயை
விட்டுவிலகும்படி உபதேசிக்கிறாயென்
று அவர்கள் கேள்விப்பட்டிருக்கிறார்கள்.

22 —இப்பொழுது என்ன செய்யலாம்? நீ வந்ததை அவர்கள் கேள்விப்பட்டு, மெய்
23 யாகக் கூட்டங் கூடுவார்கள்.—ஆகையால் நாங்கள் உனக்குச் சொல்லுகிறபடி, நீ செய்யவேண்டும் என்னவென்றால், நான் குபேர் பிராத்தனை பண்ணிக்கொண்டு,
24 எங்களிடத்தில் இருக்கிறார்கள்.—அவர்களை நீ சேர்த்து, அவர்களுடனே கூடச் சுத்தி பண்ணிக்கொண்டு அவர்கள சிரக்சவுரம் பண்ணுவதற்கு வேண்டிய செலவு பண்ணுவாயாக. அப்படிச் செய்தால் எல்லாருந் தங்களுக்கு உன்னைக் குறித்து அறிவிக்கப்பட்ட தொன்றுமில்லையென்றும், நீ தானே நியாயப்பிரமாணத்தைக் கைக்கொண்டு நடக்கிறவனென்றும், அ
25 றிவார்கள்.—விசுவாசிகளான புறத்தேசத்தாரோ, இப்படிப் பட்டவைகளைக் கைக்கொள்ளாமல் விக்கிரகங்களுக்குப் படைத்ததற்கும், இரத்தத்திற்கும் நெருக்குண்டு செத்ததற்கும், வேசித்தனத்திற்கும், மாத்திரம் விலகியிருக்கவேண்டுமென்று நாங்கள் தீர்மானம்பண்ணி அவர்களுக்கு எழுதி அனுப்பினோமே யென்றார்கள்.

26 அப்பொழுது பவுல் அந்த மனிதரைச் சேர்த்துக் கொண்டுமறுநாளிலே அவர்களுடனே கூடச்சுத்தம் பண்ணிப், பின்பு தேவாலயத்திற் பிரவேசித்து, அவர்களில் ஒவ்வொருவனுக்காகவேண்டிய பலிகொடுக்கப்படுமளவுஞ் சுத்தமாக்குதற்கேற்ற நாட்களை நிறைவேற்றுவேனென்று அறி-
27 வித்தான்.—அதற்கேற்ற ஏழுநாளும் நிறைவேறிவருகையில், ஆசியாத் தேசத்திலிருந்து வந்த யூதர்கள் தேவாலயத்திலே அவனைக்கண்டு, கூட்டமெல்லாங் கூ-
28 டிவர அழைத்து—அவன்மேற்கைகளைப் போட்டு, ஓய், இஸ்ரவேலரே? உதவிசெய்யுங்கள். இவனே நம்முடைய சனத்துக்கும், வேதப்பிரமாணத்துக்கும், இந்தத்தலத்துக்கும்,விரோதமாக எங்கும் எல்லாருக்கும்போதித்து வருகிறான். அதுவுமல்லாமல், இந்தத் தேவாலயத்திலே கிரேக்கரையும் அழைத்துவந்து; இந்தப் பரிசுத்த தலத்தை அசுசிப்படுத்தினான்
29 என்று கூப்பிட்டார்கள்.—முன்பு எபேசியனாகிய திரோப்பீமுவைப் பட்டினத்திலே அவனுடனே கூட விருக்கக் கண்டி

ருந்து, பின்பு பவுல் அவனைத் தேவால யத்திலே அழைத்துவந்தானென்று நினைத்தபடியினாலே அப்படிச் சொன்னார்கள்.
30 —அப்பொழுது பட்டினம் முழுவதுங் கலக்கப்பட்டது, மேலுஞ் சனங்கள் கூட்டமாய் ஓடிவந்து, பவுலுவைப் பிடித்து அவனைத் தேவாலயத்துக்குப் புறம்பே இழுத்தார்கள் உடனே வாசல்கள் பூட்டப்
31 பட்டன.—மேலும் அவர்கள் அவனைக் கொலைசெய்ய வகைதேடுகையில் எருசலேம் முழுவதுங் கலக்கம் அடைந்திருக்கிறதென்று போர்ச் சேவகரின் சேனா
32 பதி கேள்விப்பட்டு.—உடனே போர்ச் சேவகரையும் அவர்களுடைய தலைவரையுஞ் சேர்த்துக்கொண்டு அவர்களிடத்துக்கு ஓடினான் சேனாபதியையும் போர்ச் சேவகரையும் அவர்கள் கண்டபொழுது
33 பவுலுவை அடிப்பதை விட்டார்கள்.-அப்பொழுது, சேனாபதி சேர்ந்து, அவனைப் பிடித்து, இரண்டு சங்கிலிகளினாலே கட்டும்படி சொல்லி, இவன்யாவனென்றும், என்னசெய்தானென்றும், விசாரித்தான்.
34 -அதற்குச் சனங்கள் பலவிதமாய்க் கூப்பி

ட்டார்கள். அப்பொழுது கலகத்தினுலே
அவன் நிச்சயத்தை அறியக் கூடாதிருந்த
படியால், அவனைக் கோட்டைக்குக் கொ
35 ண்டுபோகச்சொன்னான்.-அவன் படிகள்
மேல் வந்தபொழுது, கூட்டம்பின்செ
ன்று, அவனைக் கொலைசெய்யுமென்று
36 கூப்பிட்டுக் கொண்டு—உக்கிரமாயிருந்த
படியினாலே, சேவகர் அவனைத் தூக்கி
37 யெடுத்துக்கொண்டுபோனார்கள்.—அவ
ர்கள் பவுலுவைக் கோட்டைக்குள்ளே
கொண்டுபோக எத்தனமாயிருக்கையில்
அவன் சேனாதிபதியை நோக்கி, நான் உம்
முடனே ஒரு வார்த்தை பேசலாமா என்
றான். அதற்கவன்சொன்னது, கிரேக்கப்
38 பாஷை யுனக்குத்தெரியுமோ,—இந்தக்
காலத்துக்கு முன்னே கலகமுண்டாக்
கி, நாலாயிரங் கொலைபாதகரை வனாந்தர
த்திலே கொண்டுபோன எகிப்பத்தான்
39 நீ யல்லவோவென்றான்.—பவுல் சொன்
னது, நான் கிலிக்கியாநாட்டி லுள்ள கீர்த்
திபடைத்திருக்கிறதருசுபட்டினத்தானுகி
ய யூதன்நான், சனங்களுடனேபேசும்படி
எனக்குத்தரவுகொடுக்கவேண்டுமென்று

உம்மை வேண்டிக் கொள்ளுகிறேனென்
40 றான்.—அவனுக்குத்தரவுகொடுத்தபின்பு
பவுல், படிகளின்மேலேநின்று கையினா
லே சனங்களுக்குச் சமிக்கைகாட்டினான்.
மிகுந்த அமைதலுண்டான பொழுது,
அவன் எபிரேயப்பாஷையிலே சத்தமி
ட்டுச் சொன்னது.

## ௨௨. அதிகாரம்.

1 சகோதரர்களே, பிதாக்களே, உங்களு
க்கு நான் இப்பொழுது சொல்லும் உத்
தரவுக்குச் செவி கொடுப்பீர்களாகவென்
2 று சொன்னபொழுது—எபிரேயப்பா
ஷையிலே தங்களுடனே பேசுகிறதை அ
வர்கள் கேட்டு, அதிக அமைதலாயிருந்
தார்கள். அவன் பின்னுஞ் சொன்னது,—
3 நான் யூதன், கிலீக்கியா நாட்டிலுள்ள
தருசுப் பட்டினத்திலே நான் பிறந்து,
பின்பு இந்தப்பட்டினத்திலே கமாலியே
லின் பாதத்தினிடத்தில் வளர்ந்து, முன்
னோர்களுடைய வேதப் பிரமாணத்தின்
படியே கெட்டியாய்ப் போதிக்கப்பட்டு,
இன்றைத்தினம் நீங்களெல்லாரு மிருக்கி

றது போலப், பராபரனைக்குறித்து வயி
4 ராக்கியமுள்ளவனாயிருந்து,-இந்த மார்க்த்தாரை
மரணபரியந்தந் துன்பப்படுத்திப், புரு
ஷரையும் ஸ்திரிகளையுங் கட்டிச், சிறைச்
சாலைகளுக்கு ஒப்புக்கொடுத்து வந்தேன்
5 —அதற்குப் பிரதான ஆசாரியரும் எல்
லாமூப்பர்களுஞ்சாட்சிகொடுப்பார்கள்.
மேலும் அவர்கள் கையிலே நான் சகோ
தரருக்கு நிருபங்களை வாங்கிக்கொண்டு,
தமஸ்கு வூரிலிருக்கிறவர்களும் ஆக்கினைக்
குள்ளாக்கப்படுவதற்கு அவர்களைக் கட்டி
எருசலேமுக்குக் கொண்டுவரும்படி, அ
6 வ்விடத்துக்குப் போனேன்.—அப்படி
நான் பிரயாணப்பட்டுத், தமஸ்கு ஊருக்
குச் சமீபமான பொழுது, மத்தியான
வேளையிலே சடுதியாய் வானத்திலிருந்து
மிகுந்த ஒளியுண்டாகி, என்னைச் சுற்றிப்
7 பிரகாசித்தது.—உடனே நான் தரையி
லே விழுந்து, சவுலே! சவுலே! ஏன் நீ என்
னைத் துன்பப்படுத்துகிறாய்? என்று என்
னுடனே சொல்லுகிற சத்தத்தைக் கேட்
8 டேன்.—அதற்கு நான் ஆண்டவரே! நீர்
யார்? என்றேன். அவர் என்னுடனே

சொன்னது, நீ துன்பப்படுத்துகிற நாச
ரேத்தூரானாகிய இயேசுவே நான் என்றா
9 ர்.—என்னுடனே கூடவிருந்தவர்கள் அ
ந்த ஒளியைக் கண்டு, பயமடைந்தார்கள்.
என்னுடனே பேசினவருடைய சத்தத்
10 தையோ அவர்கள் கேட்டதில்லை.—பின்
னும் நான், ஆண்டவரே! நான் என்ன
செய்யவேண்டும்? என்றேன். அதற்குக்
கருத்தர் சொன்னது, நீ எழுந்து, தமஸ்
குவூருக்குப்போ, நீ செய்யும்படிக்குக்
கட்டளையிடப்பட்ட யாவும் அங்கே உன
11 க்குச் சொல்லப்படுமென்றார்.—பின்பு
நான் அந்த ஒளியின் மகிமையினாலே
பார்வை அற்றுப்போனபடியால், என்
னோடிருந்தவர்களாற் கைலாகு கொடுத்
தழைக்கப்பட்டுப் போயித், தமஸ்குவூரி
12 ற்சேர்ந்தேன்.—அப்பொழுது வேதப்
பிரமாணத்தின் படியே பத்தியுள்ளவனு
மாய் அங்கே குடியிருக்கிற சகல யூதரா
லும் நல்லவனென்று நற்சாட்சி பெற்றவ
னுமாயிருக்கிற அனனியாவென்னும் ஒரு
13 வன் என்னிடத்தில் வந்து நின்று,—என்
னை நோக்கிச், சகோதரனாகிய சவுலே!

பார்வை அடைவாயாகவென்றான். அந்
நேரமே நான் அவனை நோக்கிப் பார்த்
14 தேன்.—பின்பு அவன் சொன்னது, நீ
கண்டு கேட்டவைகளைக் குறித்து எல்லா
விதமான மனிதருக்குஞ் சாட்சிகொடுக்
15 கிறவனாயிருக்கும்படிக்கு,—நமது முன்
னோர்களின் தேவன் உன்னை முன் குறித்
திருந்து, தம்முடைய சித்தத்தை நீ அறி
யவும் நீதிபரரைக் காணவும் அவருடைய
திருவாயின் சத்தத்தைக் கேட்கவும் பண்
16 ணினார்.—இப்பொழுது நீ தாமதிக்கிற
தென்ன? நீ யெழுந்து, கருத்தருடைய
நாமத்தைத் தொழுதுகொண்டு ஞானஸ்
நானம் பெற்று, உன் பாவங்களை நீக்கு
17 வாயாக வென்றான்.—பின்பு நான் எருச
லேமுக்குத் திரும்ப வந்து, தேவாலயத்
திலே வேண்டுதல் பண்ணிக்கொண்டிரு
க்கையில், நான் ஞானதிருட்டி அடைந்
18 து, அவரைத் தரிசித்தேன்.—அவர் என்
னுடனே, நீ என்னைக் குறித்துச் சொல்
லுஞ் சாட்சியை இவர்கள் ஏற்றுக்கொள்
ளாமலிருப்பதால் நீ தாமதப்படாமற் சீக்
கிரமாய் எருசலேமைவிட்டுப் போவென்

19 றார்.—அப்பொழுது நான் சொன்னது,
ஆண்டவரே! உம்மை விசுவாசித்தவர்க
ளை நான் காவலில் வைத்து ஆலயங்களி
20 லேஅவர்களை அடிப்பித்திருந்ததையும்,-
உமக்குச் சாட்சியாகிய இஸ்தேவானுடை
ய இரத்தஞ் சிந்தப்பட்டபொழுது, நா
னும் அருகே நின்று, அவனைக் கொலை
செய்வதற்குச் சம்மதித்து, அவனைக்கொ
லை செய்தவர்களின் வஸ்திரங்களைக் காத
துக்கொண்டதையும் இவர்கள் அறிந்திரு
21 க்கிறார்களே யென்றேன்.—அவர் சொன்
னது, நான் உன்னைத் தூரமாய்ப் புறத்
தேசத்தாரிடத்திற்கு அனுப்புவேன். ஆ
தலால் நீ போவென்று சொன்னார் என்
றான்.

22 இந்த வார்த்தை வரைக்கும் அவர்கள்
அவனுக்குச் செவிகொடுத்து, இப்படிப்
பட்டவனைப் பூமியிலிருந்து அகற்றவே
ண்டும், இவன் உயிரோடிருக்கிறது நியா
யமல்லவென்று மிகுந்த சத்தமாய்க் கூப்
23 பிட்டார்கள்.—இப்படி அவர்கள் கூக்கு
ரலிட்டுத் தங்கள் வஸ்திரங்களைக் கழற்றிப்
போட்டு, ஆகாசத்திலே புழுதி தூற்றிச்

24 கொண்டுவருகையிற்,—சேனாதிபதி அவ
னைக் கோட்டைக்குள்ளே கொண்டுபோ
கும்படி கட்டளையிட்டுப், பின்பு அவர்க
ள் அவன் மேல் இப்படிக் கூக்குரலிட்ட
தற்கான காரணத்தை அறியும்படிக்கு,
அவனைச் சவுக்காலே அடித்து விசாரிக்க
25 ச்சொன்னான்.—அந்தப்படி அவர்கள் அ
வனை வார்களினாலே அழுந்தக் கட்டுகையி
ற், பவுல் சமீபமாய் நின்ற படைத்தலைவ
னை நோக்கி, உரோமனுமாய் நியாயமாய்
ஆக்கினைக் கூட்படாதவனுமா யிருக்கிற
மனிதனை நீங்கள் அடிக்கிறது நியாயமா!
26 என்றான்.—தலைவன் அதைக்கேட்டுச்சே
னாதிபதியிடத்துக்குப்போய், அந்த மனி
தன் உரோமன். ஆதலால் நீர் செய்வதை
க்குறித்துச் சாவதானமாயிருக்கவேண்டு
27 மென்று அறிவித்தான்.—அப்பொழுது
சேனாதிபதி பவுலினிடத்தில் வந்து நீ
உரோமனா? எனக்குச் சொல்லென்றான்.
அதற்கு அவன் அப்படித்தான் என்றான்.
28 —சேனாதிபதி சொன்னது, நான் மிகுந
த திரவியத்தினாலே இந்த மேன்மையைச்
சம்பாதித்தேன் என்றான். அதற்குப் பவு

ல் சொன்னது, நானோ அப்படிப்பட்ட
29 வனாகப் பிறந்தேன் என்றான்.—ஆதலால்
அவனை அடித்து விசாரிக்கும்படி எத்த
னமாயிருந்தவர்கள் உடனே அவனை விட்
டார்கள், மேலும், சேனாபதி அவன் உ
ரோமனென்று அறிந்து, தான் அவனைக்க
30 ட்டினதினாலே பயந்தான்.-மறுநாளிலே
பவுல் யூதரால் ஏற்படுத்தப்பட்ட குற்ற
மின்னதென்று அவன் நிச்சயத்தை அறிய
மனதாய் அவனுடைய கட்டை அவிழ்க்
கும்படி செய்து, பிரதான ஆசாரியரை
யும் அவர்களுடைய பெரிய சங்கத்தாரெ
ல்லாரையுங் கூடிவரும்படி கட்டளையிட்
டுப், பின்பு பவுலைத் தாழக் கொண்டு
போய், அவர்களுக்கு முன் நிறுத்தினான்.

## ௨௩. அதிகாரம்.

1 அப்பொழுது பவுல் பெரிய சங்கத்
தாரை நோக்கிச் சொன்னது, சகோதர
ர்களே! இந்நாள்வரைக்கும் என் மனசு
எனக்கு எவ்விதத்தாலும் நற்சாட்சிகொ
டுக்கத்தக்கதாகப் பராபரனுக்குமுன்பாக
நடந்துவந்தேன் என்று சொன்னபொழு

2 து,—பிரதான ஆசாரியனாகிய அனனிய
அவனுக்குச் சமீபமாய் நின்றவர்களை
நோக்கி, இவன் வாயிலே அடியுங்களெ
3 ன்று கட்டளையிட்டான்.—அப்பொழுது
பவுல் அவனுடனே சொன்னது, சாந்து
பூசப்பட்ட சுவரே, பராபரனே உம்மை
அடிப்பார். நியாயப்பிரமாணத்தின்படி
எனக்கு நியாயத்தீர்ப்புக்கொடுக்கும்படி
உளுக்கார்ந்திருக்கிற நீர் நியாயப்பிரமா
ணத்திற்குத் தப்பிதமாய் என்னை அடிக்க
4 ச்சொல்லலாமா? என்றான்.—சமீபத்தில்
நின்றவர்கள் சொன்னது, பராபரனுடை
ய பிரதான ஆசாரியனையா வைகிறாய்? என்
5 றார்கள்.—அதற்குப் பவுல் சொன்னது,
சகோதரரே! இவர் பிரதான ஆசாரியன்
என்று நான் நினைக்கவில்லை. உன் சனத்தி
ன் தலைவனைக் குறித்துத் தீது சொல்லாதி
ருப்பாயாக வென்று எழுதியிருக்கின்ற
6 தே என்றான்.—பின்பு அவர்களில் ஒருபங்
கு சதுசேயரென்றும், ஒருபங்கு பரி
சேயரென்றும் பவுல், அறிந்து, மிகுந்த
சத்தமாய்ச் சங்கத்தாருக்குள்ளே கூப்பி
ட்டுச்சொன்னது, சகோதரர்களே! நான்

பரிசேயனுமாய் ஒரு பரிசேயனுடைய ப
கனுமாயிருக்கிறேன். நித்திய சீவனுக்கே
ற்ற நம்பிக்கையைக் குறித்தும், மரித்தோ
ர் உயிரோடெழுந்திருக்குதலைக் குறித்து
ம், நான் நியாயத்தீர்ப்பை அடையும்படி
யிருக்கிறேன் என்று சொன்ன பொழுது,
7 — சதுசேயர் உயிரோடெழுந்திருக்குத
லுமில்லை. அரூபியும், ஆவியும் இல்லையெ
ன்று சொல்லுகிறபடியினாலும், பரிசேய
ரோ, அவ்விரண்டும் உண்டென்று அறிக்
8 கைபண்ணுகிறபடியினாலும், —பரிசேய
ருக்குஞ் சதுசேயருக்கும் வாக்குவாதமு
ண்டாயிற்று. கூட்டமும் பிரிவினை அடை
9 ந்தது. —மிகுந்த கூக்குரல் உண்டாயிற்
று. அப்பொழுது பரிசேயரைச் சேர்ந்த
வேதபாரகர் எழுந்து, மிகவும் விரோத
மாய்ப்பேசி, இந்த மனிதனிடத்தில் ஒரு
பொல்லாங்கையுங்காணோம். ஒரு ஆவி அல்
லது ஒரு தூதன் இவனுடனே பேசினதுண்
டானால், (அதினாலென்ன?) என்றார்கள்.
10 —பின்பு மிகுந்த கலக முண்டானபொ
ழுது, பவுல் அவர்களாற் பீறுண்டு போ
வானென்று, பெரிய சேனைத்தலைவன் ப

யத்து அவனை அவர்களிலிருந்து பறித்து
க்கோட்டைக்குக்கொண்டுபோகும்படி
போர்ச்சேவகருக்குக் கட்டளையிட்டான்.
11 —அன்று இராத்திரியிலே கருத்தர் பவுலு
வின் அருகே நின்று, பவுலுவே திடன்கொ
ள். நீ என்னைக் குறித்து எருசலேமிலே
சாட்சி கொடுத்ததுபோல, உரோமைபு
ரியிலேயுஞ் சாட்சி கொடுப்பாய்என்றார்.
12 விடியற்கால மானபொழுது, யூதரிற்
சிலர் இரகசியமாய்க் கூடி அந்தப் பவுலு
வை நாங் கொலை செய்யுமளவும் புசி
யாமலுங் குடியாமலும் இருப்போமாக
வென்று சபதம் பண்ணிக்கொண்டு தங்க
ளுக்குள்ளே கட்டுப்பாடு செய்தார்கள்.
13 —இப்படிச் சபதத்தினாலே கட்டுப்பாடு
செய்தவர்கள், நாற்பதுபேருக் கதிகமா
14 யிருந்தார்கள்.—அவர்கள் பிரதான ஆசா
ரியரிடத்திலும் மூப்பரிடத்திலும் போ
ய்ச் சொன்னது, நாங்கள் பவுலுவைக்
கொலைசெய்யுமளவும் ஒன்றையும் ருசிபா
ர்க்கக்கூடாதென்று கொடிய சபதம்
15 பண்ணிக்கொண்டோம்.—ஆனபடியினா
லே நீங்கள்பெரிய சங்கத்தாருடனேயுங்

கூட அவனுடைய காரியத்தை அதிககெட்
டியாய் விசாரிக்க மனதுள்ளவர்கள்போ
லச், சேனாதிபதிக்குக் காண்பித்து, அவர்
நாளைக்கு அவனை உங்களிடத்திற்கொண்டு
வரும்படி கேட்பீர்களாக. அப்பொழுது
அவன் உங்களுக்குச் சமீபமாய் வருமுன்
னே, நாங்கள் அவனைக்கொலைசெய்ய எத்
16 தனமாயிருக்கிறோமென்றார்கள்.-அந்தச்
சற்பனையைப் பவுலினுடைய சகோ
தரியின் குமாரன் கேள்விப்பட்டு, உட
னே கோட்டைக்குப் போய்ப், பவுலுவு
17 க்கு அறிவித்தான்-அப்பொழுது பவுல்ப
டைத்தலைவரிலொருவனை அழைத்து, இந்
தவாலிபன் சேனாபதிக்கு ஒருகாரியத்தை
அறிவிப்பான். ஆகையாலிவனை அவரிடத்
திற்குக்கொண்டுபோக வேண்டுமென்று
18 ன்.-அந்தப்படி அவன் அவனைச்சேர்த்து
ச் சேனாதிபதியிடத்திற்கொண்டுபோய்க்
காவலில்வைக்கப்பட்டிருக்கிற பவுல் என்
னை அழைத்து, உமக்கும் ஒரு காரியத்தை
ச் சொல்லவேண்டுமென்றிருக்கிற இந்த
வாலிபனை உம்மிடத்திற்குக்கொண்டுபோ
கும்படி என்னை வேண்டிக்கொண்டான்

19 என்றான்.—அப்பொழுது சேனாபதி அ
வனுடைய கையைப் பிடித்துத், தனிமை
யான இடத்திற்கொண்டுபோய், நீ யெ
னக்கென்ன அறிவிக்க விரும்புகிறாயென்
20 றுகேட்டான். - அவன் சொன்னது யூதர்
கள் பவுலின் காரியத்தை அதிககெட்டி
யாய் விசாரிக்க மனதுள்ளவர்கள்போல்
வந்து, நீர் நாளைக்கு அவனைப்பெரிய சங்
கத்தாரிடத்திற்குக் கொண்டு வரும்படிக்
கு உம்மைவேண்டிக் கொள்ளத் தீர்மான
ம்பண்ணினார்கள். அவர்களுக்குச் சம்மதி
21 யாதிருப்பீராக.- என்னத்தினாலெனில் அ
வர்களில், நாற்பதுபேருக் கதிகமானபே
ர்கள் அவனைக்கொலைசெய்யுமளவும், புசி
க்கவுங்குடிக்கவும் மாட்டோமென்று சப
தம்பண்ணிக்கொண்டு, அவனுக்காக ஒளி
த்திருந்து, இப்பொழுது உம்முடைய உ
த்தரவு வரக்காத்துக்கொண்டு எத்தனமா
22 யிருக்கிறார்களென்றான்.—அப்பொழுது
சேனாதிபதிசொன்னது நீ இவைகளை என
க்கறிவித்ததை ஒருவருக்குஞ் சொல்லாதி
ரு என்று வாலிபனுக்குக் கட்டளையிட்டு,
23 அவனையனுப்பிப்,—பின்பு படைத்தலை

வரிருவரை அழைத்துச், செசாரியாப்
பட்டினத்துக்குப் போகும்படிக்கு, இரு
நூறு போர்ச் சேவகரையுங் குதிரைப்
போர்ச்சேவகர் எழுபதுபேரையும் இ
ருநூறு வில்லுக்காரரையும் இராத்திரியி
ன் மூன்றும் மணிநேரத்திற்கு எத்தனம்
24 பணணுங்கள்.—அல்லாமலும் பவுலை
யேற்றித், துரையாகிய பேலிக்குசுவினிட
த்திற்குப் பத்திரமாய்க் கொணடுபோகு
ம்படிக்கு வாகனங்களிலிருக்கும்படி செ
25 ய்யுங்களென்று சொல்லிப்.—பின்பு எழு
26 தின நிருபத்தின் விவரமாவது,—கனம்
பொருந்திய துரையாகிய பேலிக்குசுக்கு
க் கிலவுதியுலிசியா சவுக்கியமுணடாகவாழ்
27 த்துகிறேன்.—இந்தமனிதன், யூதர்களா
ற் பிடிக்கப்பட்டு, அவர்களாற் கொலைசெ
ய்யப்படுவதற் கேதுவாயிருந்தபொழுது
நான்போர்ச்சேவகருடனேகூடப்போய்
இவனேயிழுத்துக்கொணடு வந்து, இவன்
28 உரோமனென்றறிந்தேன்,—அவர்கள் இ
வன்மேற் சாற்றினகுற்றத்தை நான் அறி
யமனதாய், இவனை அவர்களுடைய பெ
ரிய சங்கத்திற்குக் கொண்டுபோனேன்.

29 இங்கே அவன் மரணத்துக்காகிலும் கட்டுக்களுக்காகிலும் ஏற்ற குற்றமில்லாமல் அவர்களுடைய வேதத்திற்குரிய தருக்கங்களைக் குறித்துக் குற்றஞ்சாற்றப்பட்டவனென்று எனக்குத் தெரியவந்தது,—
30 பின்பு யூதர்கள் இந்தமனிதனுக்கு விரோதமாய் இரகசியமான யோசனை பண்ணிக்கொள்ளுகிறார்களென்று, எனக்குத்தெரிந்தபொழுது, நான் உடனே, இவனை உம்மிடத்திற்கு அனுப்பிக், குற்றஞ்சாற்றுகிறவர்களுந் தாங்கள் இவனுக்கு விரோதமாய்ச் சொல்லுகிற காரியங்களை உமக்கு முன்பாகப் போய்ச் சொல்லும்படி கட்டளையிட்டேன். சுகமாயிருப்பீராகவென்றெழுதி யனுப்பினான்.
31 போர்ச்சேவகர் தங்களுக்குக் கட்டளையிடப்பட்டபடியே பவுலைச் சேர்த்துக்கொண்டு, இராத்திரியிலே, அந்திப்ப
32 த்திரி யூருக்குக்கொண்டுபோய்,—மறுநாளிலே குதிரைப் போர்ச்சேவகரை அவனுடனேகூடப்போக அனுப்பித்தாங்களே கோட்டைக்குத்திரும்பினார்கள்.—
33 அவர்கள் செசாரியாப் பட்டினத்திற்சே

ர்ந்து, நிருபத்தைத் துரைக்குக்கொடுத்துப்பவுலுவையும்அவன்முன்பாக நிறுத்
34 தினார்கள்.—துரையதைவாசித்து, நீ வெந்தத்தேசத்தானென்று கேட்டுக்; கிலீக்
35 கிய தேசத்தானென்று அறிந்து,—பின்பு உன்மேற் குற்றஞ்சாற்றுகிறவர்களும்வந்திருக்கும்பொழுது, உன்னிடத்தில் விசாரிப்பேனென்று சொல்லி, ஏரோதேயின் அரண்மனையிலே அவனைக்காவலில் வைக்கும்படி கட்டளையிட்டான்.

## உ௪. அதிகாரம்.

1 ஐந்துநாளைக்குப்பின்பு பிரதான ஆசாரியனாகிய அனனியா மூப்பரோடும் பேச்சிற் கெட்டிக்காரனாகிய தெருத்துல்லுவோடுங் கூடவந்து, பவுலுவுக்குவிரோதமாய்த் துரையினுடைய சன்னிதானத்திற்
2 பிரவேசித்தார்கள் —அவன் அழைக்கப்பட்டுவந்தபொழுது, தெருத்துல்லு கு
3 ற்றமேற்படுத்தினது, —மிகுந்த கனம்பொருந்திய பேலிக்குசுவே, உம்மாலே நாங்கள் மிகுந்த சமாதான சவுக்கியத்தை அனுபவிக்கிறதையும் உம்முடைய

விசாரிப்பினாலே இந்தத்தேசத்தாருக்கா கமிகுந்த மகிமையுள்ள கிரியைகள் நடக்கிறதையும் நாங்கள் எப்பொழுதும் எங்கும்பெரிய உபகாரமென்றெண்ணி
4 அறிக்கையிடுகிறோம்.--நானோ அதிகவார்த்தைகளாலே உமக்கு வருத்தம்பண்ணாதபடிக்கு, நாங்கள் சுருக்கமாய்ச் சொல்வதை நீர் உம்முடைய பொறுமையோடே கேட்கவேண்டிக்கொள்ளுகிறேன்—
5 என்னவென்றால் இந்தமனிதன் பெருவாரிக்காய்ச்சலைப்போலப் பூச்சக்கரத்திலுள்ள சகல யூதர்களுக்குள்ளுங் கலகமெழுப்பி யிருக்கிறதையும் நாசரேத்தாரென்னுங் கெட்டபிரிவுக்கு முதலாளியாயிருக்
6 கிறதையும்,--எங்கள் தேவாலயத்தை அசுசிப்படுத்தத் தேடினதையும் நாங்கள் கண்டறிந்து இவனைப்பிடித்து எங்கள் வேதநூலின்படியே இவனுக்கு நியாயத்தீர்ப்புக்கொடுக்க மனதாயிருந்தோம்—
7 அப்பொழுது சேனாபதியாகிய லீசியாவென்பவர் வந்து மிகுந்தபலபந்தமாய் இவனை எங்கள்கைகளிலிருந்து பறித்துக்
8 கொண்டுபோய்.--இவன்மேற் குற்றஞ்சா

ற்றுகிறவர்கள் உம்மிடத்தில் வரும்படிக
ட்டளையிட்டார். நீர் இவனிடத்திற் கெட்
டியாய் விசாரித்தால் நாங்களிவன்மேற்
குற்றஞ்சாற்றுகிற காரியங்கள்யாவையும்
9 அறிந்துகொள்வீரென்றான் --மற்றயூதர்
களும் அதற்கிசைந்து இப்படியே இரு
க்கிறதென்று சொன்னார்கள்.
10 அப்பொழுது பவுல் பேசுகிறதற்குத்
துரையினாலே சமிக்கை பெற்றபின்பு அ
வன் சொன்னமாறுத்தரமாவது, அநேக
வருஷம் நீர் இந்தத்தேசத்தாருக்கு நியா
யாதிபதியாயிருக்கிறதை நான் அறிந்து அதி
கசந்தோஷத்தோடே யெனக்காக உத்த
11 ரவு சொல்லுகிறேன் —நீர் அறியும்படி
நான் பராபரனைத்தொழுதுகொள்ளும்ப
டிக்கு எருசலேமுக்குப் போனது முதல்
இதுவரைக்கும் பன்னிரண்டுநாள் மாத்தி
12 ரமாயிற்று--தேவாலயத்திலே தான் ஒரு
வனோடுந் தருக்கம்பண்ணவும் ஆலயங்க
ளிலாகிலும் பட்டிணத்திலாகிலுஞ் சனங்க
ளுக்குள்ளே கலகம் எழுப்பவும் இவர்கள்
13 கண்டதுமில்லை --இப்பொழுது என்
மேலே சாற்றுகிற குற்றங்களுக்குச் சாட்சி

14 களைக் காணபிக்கவும் மாட்டார்கள்.—நா
ஞே உமக்கு அறிக்கையிடுகிற தென்ன
வென்றால் இவர்கள் கெட்ட பிரிவு என்று
சொல்லுகிற மார்க்கத்தின்படியே நான்
நியாயப் பிரமாணத்திலேயுந் தீர்க்கதரிச
னப் புத்தகங்களிலேயும் எழுதியிருக்கிற
யாவையும் விசுவாசித்துக்கொண்டு எங்க
ள் முன்னோர்களுடைய தேவனுக்காராத
15 னைசெய்து—மரித்தோராகிய நீதிமான்
களும் அநீதிமான்களும் மறுபடியும்
உயிரோடெழுந்திருப்பார்களென்று இவ
ர்களும் அடைந்துகொண்டிருக்கிற நம
பிக்கையைப் பராபரன்மேல் வைத்திருக்
16 கிறேன்—மேலும் அதினாலே நான பரா
பரனுக்கும் மனிதருக்கும் முன்பாக எப்
பொழுதும் நற்சாட்சிகொடுக்கிற மனசு
ள்ளவனாயிருக்கும்படி முயற்சிப் படுகி
17 றேன்—அனேக வருஷங்களுக்குப் பின்
பு நான் என்தேசத்தாருக்குத் தருமங்
களை யொப்புக் கொடுக்கவும் பலி காணி
18 க்கைகளைச் செலுத்தவும் வந்தேன்-கூட்
டமில்லாமலும் அமளியில்லாமலும் நான்
தேவாலயத்தில் அப்படிச் செய்து சுத்த

ம்பணிக்கொண்டிருக்கையில் ஆசியாத்
தேசத்தாரான சிலயூதர்கள் என்னைக்கண்
19 டார்கள்-அவர்களிடத்தில் எனக்குவிரோ
தமான காரியமுண்டானால் அவர்களே
யுமக்குமுன்பாக இங்கேவந்து குற்றஞ்
20 சாற்றவேண்டும்.-அல்லது நான் பெரிய
சங்கத்தாருக்கு முன்பாக நின்றபொழு
து என்ன குற்றத்தை யென்னிடத்திற்
கண்டார்கள்? அதை யிவர்களுஞ்சொல்
21 லலாமே— நான் அவர்களுக்குள்ளே நின்
றபொழுது மரித்தோர் உயிரோடெழுந்
திருப்பார்களென்கிறதைக் குறித்து நான்
இன்றைக்கு உங்களால் நியாயத்தீர்ப்ப
டையும்படி யிருக்கிறேனென்று நான்
கூப்பிட்டேன், இந்த ஒரே சொல்லினிமி
த்தமே யன்றிவேறொன்றி னிமித்தமுங்
குற்றங் காணவில்லையேயென்றான்.
22 பேலிக்குசு என்பவன் அதைக்கேட்டு
இந்தமார்க்கத்தைக் குறித்து அதிகவிபர
மாயறிந்த பின்பு சேனாதிபதியாகிய லீசி
யா வரும்பொழுது நான் உங்கள் காரியத்
தைக்கெட்டியாய் விசாரித்துக்கொள்வே
னென்று சொல்லி அவர்களையனுப்பி:-

23 பின்பு பவுலுவைக் காத்துக்கொள்ளும் படிக்கும் அவனுக்குக் கண்டிப்புச் செய்யாதபடிக்கும் அவனுடைய மனிதர்களிலொருவனாகிலும் அவனிடத்தில் வந்து அவனுக்கூழியஞ்செய்வதற்குத் தடைபண்ணுதபடிக்குந் தலைவனுக்குங் கட்டளையிட்டான்.

24 சிலநாளுக்குப் பின்பு, பேலிக்குசு யூதஸ்திரியாகிய தன் மனைவி துருசில்லாளுடனே கூடவந்து, பவுலுவையழைப்பித்துக், கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தைக், குறித்து அவன் சொல்லக்கேட்டான்.

25 —அந்தப்படி யவன் நீதியையும் இச்சை அடக்கத்தையும் பின்வரும் நியாயத் தீர்ப்பையுங் குறித்துப் பேசிக்கொள்ளுகையிற் பேலிக்குசு பயமடைந்து, இப்பொழுது நீ போகலாம், இனிமேல் எனக்குச் சாவகாச மிருக்கும்பொழுது, உன்னை மறுபடியும் அழைப்பிப்பேனென்றான்,

26 —மேலும் அவன் பவுலுவை விடுதலை பண்ணும்படியாய்த் தனக்கு அவன் பணந்கொடுப்பான் என்று நம்பிக்கையாயிருந்தான். அதினிமித்தமே அவன் அநேக

தரம் அவனை அழைப்பித்து, அவனுட
னே பேசிக்கொண்டான்.

27 இரண்டு வருஷமானபொழுது பேலி
க்குசுக்குப் பதிலாகப் பொர்க்கியு பெஸ்
து என்னும் மறு துரை வந்தான். அப்
பொழுது பேலிக்குசு யூதர்களுக்குச் சந்
தோஷஞ் செய்ய மனதாய்ப் பவுலை
க்காவலில் வைத்துவிட்டுப்போனான்.

## உரு. அதிகாரம்.

1 பெஸ்து என்பவன் துரைத்தனத்திற்
கு வந்து மூன்றுநாளுக்குப் பின்பு சே
சாரியாப் பட்டினத்திலிருந்து எருசலே
2 மூக்குப் போனான்—அப்பொழுது பிர
தான ஆசாரியனும் யூதருடைய பெரி
யோர்களும் அவனிடத்தில் வந்து, பவுலு
வுக்கு விரோதமாய்ப் பிராதுபண்ணி,—
3 அவனை வழியிலே கொலைசெய்ய இரகசிய
மான யோசனையுள்ளவர்களாய், நீர் கிரு
பைசெய்து அவனை எருசலேமுக்குவர
அழைப்பிக்கவேண்டுமென்று வேண்டிக்
4 கொண்டார்கள்,— அதற்குப் பெஸ்து
சொன்னது, பவுல் செசாரியாவிலே காவ

5 ப்பட்டிருக்கிறனே,-நானுஞ் சீக்கிரமாக
அங்கேபோவேன. ஆதலால் உங்களில்த்
திறமுள்ளவர்கள் கூடவந்து, அந்த மனி
தனிடத்திற் குற்றமுண்டானால், அதை
அவனமேற் சாற்றுவார்களாக எனறான.
6 பின்பு அவன், ஒருஎட்டுப் பத்துநாள்
அவர்களிடத்திற் சஞ்சரித்தபின்பு சேசா
ரீயாப் பட்டினத்திற்குப் போய் மறுநா
ளிலே நியாயாசனத்தில் உளுக்கார்ந்து
பவுலுவைக் கொண்டுவரச் சொன்னான்.
7 —அவன் வந்தபொழுது, எருசலேமிலி
ருந்துவந்த யூதர்கள் சுற்றிநின்று, அனே
கமான குற்றங்களைப் பவுலுவின்மேற்
சாற்றினார்கள். அவைகளை அவர்கள்மெ
ய்ப்படுத்தவோ திராணியிருந்ததில்லை.—
பின்பு பவுல் சொன்னது, நான் யூதரு
டைய வேதநூலுக்காகிலுந் தேவாலயத்
துக்காகிலும் இராயருக்காகிலும் விரோத
மாய் ஒரு குற்றமுஞ் செய்யவில்லையெ
9 ன்றான்.—அப்பொழுது பெஸ்து யூதர்க
ளுக்குத் தயவுசெய்ய மனதாய்ப் பவுலு
வுடனே சொன்னது, நீ எருசலேமுக்கு
ப்போய், அங்கே என்னாலே யிந்தக்காரி

யங்களைக் குறித்து நியாயத்தீர்ப்படைய
10 மனதா யிருக்கிறாயா? என்றான்.—அத
ற்குப் பவுல் சொன்னது, இராயருடைய
நியாயாசனத்திற்குமுன்பாக நிற்கிறேன்.
அதற்கு முன்பாக நான் நியாயத் தீர்ப்பு
அடைய வேண்டும். யூதருக்கு நான் ஒரு
அநியாயமுஞ் செய்ததில்லை. அதை நீரும்
11 நன்றாய் அறிந்திருக்கிறீர்.—அநியாயமா
னதையாவது மரணத்திற்குப் பாத்திர
மானதையாவது நான் நடப்பித்தேனா
னால், நான் சாகிறதற்கு மறுக்கமாட்
டேன். இவர்களோ என்மேற் சாற்றுகிற
குற்றங்களெல்லாம் வீணாயிருக்கிறபடியா
ல், ஒருவரும் என்னை அவர்களுக்குச் சந்
தோஷமாக ஒப்புக்கொடுக்கக் கூடாது.
இராயருக்கே அபயமிடுகிறேன் என்றா
12 ன்.—அப்பொழுது பெஸ்து தன் ஆலோ
சனைக்காரருடனே பேசிக்கொண்டு, நீ
இராயருக்கு அபயமிட்டாய், இராயரிட
த்திற்கே போவாயென்று உத்தரவுசொ
ன்னான்.

13 சிலநாட் சென்ற பின்பு, இராசனாகிய
அகிரிப்பாவும், பேர்னீக்கேயாளும், பெ

ஸ்துவை வாழ்த்துதல் செய்யும்படிக்குச்
சேசாரீயாப் பட்டினத்திற்கு வந்தார்கள்
14 -அங்கே அவர்கள் அனேகநாட் சஞ்சரித்
திருக்கையிற் பெஸ்து பவுலுவின் சங்கதி
யை இராசனுக்கு விவரித்துச் சொன்ன
து, பெலிக்குசென்பவராலே காவலி
ல்வைத்துவிடப்பட்ட ஒரு மனிதனிருக்
15 கிறான், —நான் எருசலேமிலே இருந்த
பொழுது பிரதான ஆசாரியரும் யூதரு
டைய மூப்பரும் அவனுக்கு விரோதமா
ய்ப்பிராதுபண்ணி. அவன்மேல் ஆக்கினை
த்தீர்ப்பைக் கேட்டுக்கொண்டார்கள்.—
16 அவர்களுக்கு நான் உததரவு சொன்னது
குற்றஞ் சாற்றப்பட்டவன் தன்மேற் குற்
றஞ்சாற்றினவர்களுக்கு முன்பாக நின்று
அவர்கள் சாற்றின குற்றத்தைக் குறித்து
த் தனக்காக எதிருத்தரஞ் சொல்லும்ப
டிக்கு அவன் திடம் அடைந்ததற்கு முன்
னே, அப்படிப்பட்டவன் அவர்களுக்குத்
தயவாய் அழிவுக்கு ஒப்புக்கொடுக்கிறது
உரோமருக்குள்ளே வழக்கமல்ல வென்
17 றேன்.—அந்தப்படி அவர்களிங்கே கூடி
வந்தபொழுது நான் தாமதம் எவ்வளவு

பண்ணுமல், மறுநாளிலே நியாயாசனத்திலுளுக்கார்ந்து, அந்தமனிதனைக்கொண்டுவரச்சொன்னேன்.—
18 அப்பொழுது குற்றஞ் சாற்றினவர்கள் வந்து நின்று நான் நினைத்திருந்த குற்றங்களிலொன்றையும்
19 அவன்மேல் ஏற்படுத்தாமல்.—தங்கள் மார்க்கத்துக்கும் மரணம் அடைந்த இயேசு என்னும் ஒருவன் உயிரோடிருக்கிறுனென்று பவுல் சொன்னதற்கும் ஏற்ற சில தருக்கங்களை அவனுக்கு விரோத
20 மாய்ச் சொன்ஞர்கள்.— நானே இப்படிப்பட்ட தருக்கங்களைக் குறித்துச் சந்தேகப்பட்டபடியினுலே, நீ எருசலேமுக்குப் போய், அங்கே இவைகளைக்குறித்து நியாயம் விசாரிக்கப்பட மனதாயிரு
21 க்கிருயா? என்றேன்.—அதற்குப் பவுல் நான் இராயருக்குமுன்பாக விசாரிக்கப்படுமளவும் வைக்கப்படவேண்டுமென்று அபயம் இட்டபொழுது நான் அவனை இராயனிடத்திற்கு அனுப்பும்வரைக்குங் காத்து வைக்கும்படி கட்டளையிட்டேனென்ருன்.

22 அப்பொழுது அகிரிப்பா, பெஸ்துவு

டனே சொன்னது, நானும் அந்தமனித
னுடைய வசனங்களைக்கேட்க விரும்புகி
றேனென்றான். அதற்கவன் நாளைக்கு நீர்
23 அப்படிக் கேட்கலாமென்றான்.—அந்த
ப்படி மறுநாளிலே அகிரிப்பாவும் பேர்
னீக்கியாளும் மிகுந்த ஆடம்பரத்தோ
டேவந்து, சேனாதிபதியுடனேயும் பட்
டினத்துப் பிரதான மனிதருடனேயுங்
கூடக் கேள்விச் சாலைக்குப் போனார்கள்.
உடனே பெஸ்துவினுடைய கட்டளையி
ன்படி பவுல் கொண்டு வரப்பட்டான்,
24 —அப்பொழுது பெஸ்து சொன்னது.
அகிரிப்பா இராசாவே! எங்களோடே
கூட இவ்விடத்திலிருக்கிற மனிதர்களே!
நீங்கள் பார்த்திருக்கிற இந்தமனிதனைக்
குறித்து யூதருடைய சபையெல்லாம் எ
ருசலேமிலேயும் இவ்விடத்திலேயும் என்
னைவேண்டிக்கொண்டு, இவன் இனி உயி
ரோடிருக்கத் தகாதென்று கூப்பிட்டார்
25 கள்.—நானோ இவன் மரணத்திற்குப்
பாத்திரமான தொன்றையுஞ் செய்ததில்
லையென்று அறிந்து, இவன்தானே இரா
யனுக்கு அபயமிட்டபடியினாலே இவனை

அவரிடத்தில் அனுப்பும்படி தீர்மானம்
26 பண்ணினேன்.—இவனைக்குறித்து ஆண்
டவனுக்கு எழுதுகிறதற்கு நிச்சயப்பட்
டகாரியமோ எனக்குத் தெரியாது. ஆத
லாற் காவலினுட்பட்ட ஒருவனைக் குறித்
துக் குற்றத்தை அறியாமல் அவனைய
னுப்புகிறது எனக்குப் புத்தியீனமான
27 காரியமாய்த் தோன்றினபடியினலே-இ
வனை விசாரித்துப் பார்த்தபின்பு எழுதத்
தக்க விசேஷம் எனக்கு உண்டாகும்படி
க்கு இவனை உங்கள் முன்பாகவும் விசேஷ
மாய் அகிரிப்பா இராசாவே! உமக்கு
முன்பாகவுங் கொண்டுவந்தேனென்றான்.

---

உசு. அதிகாரம்.

1 பின்பு அகிரிப்பாவானவன் பவுலை
நோக்கி, நீ உனக்காகப் பேசும்படிக்கு
உத்தரவுண்டென்றான்; அப்பொழுது பவு
ல்கையை நீட்டித் தனக்காகச் சொல்லிக்
2 கொண்டஉத்தரமாவது- அகிரிப்பா இரா
சாவே! யூதர்கள் என்மேற்சாற்றுகிற சக
ல குற்றங்களைக் குறித்தும் நான் இன்றை

க்கு உமக்கு முன்பாக மாறுத்தரஞ்சொ
ல்லவேண்டுவதினாலே என்னைப் பாக்கிய
3 வானென்றெண்ணுகிறேன். — விசேஷ
மாய் நீர் யூதருடைய சகலமுறைமைக
ளையுந் தருக்கங்களையும் அறிந்தவரா
யிருக்கிறீரே: ஆகையால் நீர் நீடிய பொ
றுமையுடனே எனக்குச் செவிகொடுக்கு
4 ம்படி வேண்டிக்கொள்ளுகிறேன்.— நா
ன் என்வாலிப வயசுமுதற்கொண்டு எரு
சலேமிலே என் தேசத்தாருக்குள்ளே
இருந்தபடியால், என் வாலிபம் முதல்
நான்நடந்த நடக்கையை யூதரெல்லாரும்
5 அறிந்திருக்கிறார்கள்.—நம்முடைய மார்
க்கத்திலே மிகவுங்கெட்டியான பரிசேய
ர்வகுப்பிலே நான் பரிசேயனாய்ச் சீவன
ம் பண்ணினதையும் ஆதிமுதல் அறிந்தி
ருக்கிறார்கள். அவர்களுஞ் சாட்சிசொல்
ல மனதா யிருந்தால் இப்படியே சொ
6 ல்வார்கள்.—இப்பொழுது நம்முடைய
பிதாக்களுக்குப் பராபரன் அருளிச்செ
ய்த வாக்குத்தத்தத்திற்கு ஏற்ற நம்பிக்கை
க்காக நான் நியாயத் தீர்ப்படையும்படி
7 நிற்கிறேன்.—இரவும் பகலும் இடைவி

டாமற் பராபரனுக்கு ஆராதனைசெய்கிற
நம்முடைய பன்னிரண்டு கோத்திரத்தா
ரும் அந்த வாக்குத்தத்தம் நிறைவேறு
மென்று நம்பியிருக்கிறார்கள். அகிரிப்பா
இராசாவே! அந்த நம்பிக்கையினிமித்த
மே யூதர்கள் என்மேற்குற்றஞ் சாற்றுகி
8 றார்கள்.—பராபரன் மரித்தோரை எழு
ப்புகிறது நம்பப்படாத காரியமென்று
9 நீங்கள் எண்ணுகிறதெப்படி? -முன்னே
நானும் நாசரேத்தூராகிய இயேசுவி
ன் நாமத்துக்கு விரோதமாய் அனேக
காரியங்களை நடப்பிக்க வேண்டுமென்று
10 நினைத்துக் கொண்டிருந்தேன்.— அப்ப
டியே எருசலேமிலே செய்தேன். நான்
பிரதான ஆசாரியராலே அதிகாரம்பெற்
றுப் பரிசுத்தவான்களில் அனேகரைக்கா
வல் வீடுகளில் அடைத்தேன். அவர்களை
11 க் கொல்லவுஞ் சம்மதித்தேன்.—அனே
கதரம் நான் சகல ஆலயங்களிலேயும்
அவர்களைத் தண்டித்துத் தூஷிக்கும்
படிக்கு அவர்களைப் பலபந்தஞ்செய்தே
ன். நான் மிகவும் அவர்கள்மேலே மூர்
க்கவெறியாயிருந்து, அன்னிய பட்டின

ங்கள்வரைக்கும் அவர்களைத் துன்பப்படு
12 த்தினேன். இப்படிச் செய்துவருகையில்
நான் பிரதான ஆசாரியரிடத்திற் பெற்ற
அதிகாரத்தோடும் உத்தரவோடுந் தமஸ்
13 குவூருக்குப் போனபொழுது, இராசா
வே! வழியிலே மத்தியானகாலத்தில் நான்
சூரியனுடையபிரகாசத்துக்குஅதிகமான
ஒளி வானத்திலிருந்து என்னையும் என்னு
டனேகூடப் பிரயாணப்பட்டவர்களையு
ஞ் சுற்றிப் பிரகாசிக்கக் கண்டேன்.—
14 உடனே நாங்களெல்லாருந் தரையிலே
விழுந்தபொழுது, சவுலே! சவுலே! ஏன்
நீ என்னைத் துன்பப் படுத்துகிறாய்?
முள்ளில் உதைக்கிறது உனக்குக் கடின
மாமென்று எபிரேயப் பாஷையிலே சொ
15 ன்ன சத்தத்தைக் கேட்டேன்.—அதற்கு
நான் ஆண்டவரே! நீர் யார்? என்றேன்.
அவர் சொன்னது, நான், நீ துன்பப்படு
16 த்துகிற இயேசு.—இப்பொழுது நீ யெ
ழுந்து காலூன்றிநில், நீகண்டவைகளையு
ம் நான் உனக்குக்காண்பிப்பவைகளையுங்
குறித்து, நான் உன்னை ஊழியகாரனென்
றுஞ், சாட்சியென்றும், ஏற்படுத்தும்ப

17 டிக்கு உனக்குத் தரிசனையானேன் —அ
தலால் நான் உன்தேசத்தாரினின்றும்,
புறத்தேசத்தாரினின்றும், உன்னை விடுத
18 லயாக்கி,—அவர்கள் என்னைப் பற்றிக்
கொள்ளும் விசுவாசத்தினாலே பாவமன்
னிப்பையும் பரிசுத்தவான்களிருக்கிற இ
டத்திலே சுதந்திரத்தையும், பெற்றுக்
கொள்ளும்படிக்கு, அவர்களுடைய கண்
களைத் திறக்கவும், அவர்களை இருளினி
ன்று ஒளியினிடத்திற்கும், பசாசினுடை
ய அதிகாரத்தினின்று பராபரனிடத்திற்
குந் திரும்பவும், உனனையவர்களிடத்தில்
19 அனுப்புகிறேனென்றார்.—அகிரிப்பா இ
ராசாவே! அந்தப் பரம தரிசனைக்கு நா
20 ன் கீழ்ப்படியாதவனாயிராமல்,—முதலா
வது, தமஸ்கு ஊரிலேயும், பின்பு எருச
லேமிலேயும், யூதேயாத்தேச மெங்கு
முள்ளவர்களும், மற்றத் தேசத்தாருக்கு
ள்ளும்போய் அவர்கள் குணப்பட்டுப்
பராபரனிடத்திற்கு மனந்திரும்பிக் குண
ப்படுதற்கேற்ற கிரியைகளைச் செய்யவே
21 ண்டுமென்றறிவித்தேன்.— இதினிமித்த
மே யூதர்கள் தேவாலயத்திலே என்னை

ப்பிடித்துப், பின்பு கொலைசெய்யும்படி
22 தேடினார்கள்.—பராபரனே எனக்கு உ
தவிசெய்ததினாலே, நான் இந்நாள்வரைக்
குஞ் சிறியோருக்கும், பெரியோருக்கு
ஞ், சாட்சிசொல்லி நிற்கிறேன். தீர்க்கத
ரிசிகளும், மோசேயும், பின் வருமென்
23 று சொன்னதின்படியே,— கிறிஸ்துபா
டுபட்டும், மரணத்தினின்று உயிரோடெ
ழுந்திருப்பவர்களில் முதன்மையானவ
ராயுமிருந்து, யூதச்சனங்களுக்கும், மற்
றத்தேசத்தாருக்கும், ஒளியைப் பிரசித்
தம்பண்ணுகிறாரென்று நான் சொல்லுகி
றதேயன்றி, வேறொன்றையும் நான்சொ
ல்லுகிறதில்லையென்றான்.

24 இவ்விதமாய்ப் பவுல் தனக்காக உத்தர
வு சொன்னபொழுது, பெஸ்து, மிகுந்த
சத்தத்துடனேசொன்னது, பவுலுவே! நீ
பித்தங்கொண்டிருக்கிறாய், அதிக கல்வி
உன்னைப் பயித்திய காரனாக்குகிறதென்
25 றான்.—அதற்கு அவன் சொன்னது கனம்
பொருந்திய பெஸ்துவே! நான் பித்த
ங்கொண்டிருக்கவில்லை. சத்தியமுஞ் சொ
ஸ்தப்புத்தியுமான வார்த்தைகளை வசனிக்

26 கிறேன்.—இந்தச் சங்கதிகளை இராசா அறிந்திருக்கிறார். இவை ஒரு மூலையிலே நடந்தகாரியங்களல்ல. ஆதலால் இவைகளில் ஒன்றும் அவருக்கு மறைவாயிருக்கமாட்டாதென்று நான் எண்ணித் தயிரியமாயவருடனே பேசுகிறேன்.-அகிரிப்பா இ
27 ராசாவே! நீர் தீர்க்கதரிசிகளை விசுவாசிக்கிறீரா? விசுவாசிக்கிறீரென்றறிந்திருக்கிறே
28 னென்றான்.—அப்பொழுது அகிரிப்பா பவுலுடனே சொன்னது, நான்கிறிஸ்தவனாகிறதற்குக் கொஞ்சங்குறைய, நீ என்னைச் சம்மதிக்கப் பண்ணுகிறாயென்றான்
29 அதற்குப் பவுல் சொன்னது, நீர்மாத்திரமல்ல, இன்று என் வசனங்களைக் கேட்டிருக்கிற யாவருங்கொஞ்சமாயல்ல (முழுவதுமே) இந்தச் சங்கிலிகளைத் தவிர என்னைப்போலாகும்படிக்குப் பராபரனைவேண்டிக் கொள்ளுகிறேனென்றான்.
30 இவைகளையவன் சொன்ன பின்பு, இராசாவுந் துரையும்பெருனீக்கேயாளும், அவர்களுடனே கூட உளுக்கார்ந்திருந்தவர்களும், எழுந்துபோகையில்,—
31 ஒருவரோடொருவர் பேசிக் கொண்டு,

இந்த மனிதன் மரணத்துக்காகிலும், கட்டுகளுக்காகிலும், பாத்திரமானதொன்றையுஞ் செய்ததில்லையென்றார்கள்.—
32 மேலும் அகிரிப்பா பெஸ்துவுடனே சொன்னது அந்த மனிதன் இராயனுக்கு அபயம் இடாதிருந்தானானால் அவனைவிடுதலைபண்ணத் தகுதியாயிருக்குமென்றான்

---

## உஎ. அதிகாரம்.

1 பின்பு நாங்கள்கப்பலேறி, இத்தாலியதேசத்திற்குப் போகும்படி தீர்மானமுண்டானபொழுது பவுலுவுங், காவலில் வைக்கப்பட்டிருந்த வேறுசிலரும், இராயனுடைய சேனையில் இயூலியென்று பேர்கொண்ட தலைவனுக்கு ஒப்புக் கொடுக்கப்பட்டார்கள்.—
2 அந்தப்படி நாங்கள் அதிர்மீத்துப் பட்டினத்திற் கப்பலேறி, ஆசியதேசத்துக் கரையோரத்தின் வழியாய்ப் போக, நினைத்துப் புறப்பட்டோம். மக்கேதோலிய தேசத்துத் தெசலோனிக்கே பட்டினத்தாருகிய அரிஸ்தருகு எங்களுடனே கூடவிருந்

3 தான் —மறுநாளிலே சீதோன் துறையிற் சேர்ந்தோம். இயூலி என்பவன் பவுலுவைப் பட்சமாய் நடப்பித்து, அவன் தன் சிநேகிதரிடத்திலே போய்ப், பராமரிப்பை அடையும்படிக்கு, உத்தரவு
4 கொடுத்தான்.- அவ்விடத்தை நாங்கள் விட்டுப் புறப்பட்டுக்காற்றுகள் எதிரானபடியினாலே, சீப்புருதீவுக்கு அருகாகப்
5 போய்க்,—கிலிக்கியா, பம்பீலியாத், தேசங்களின்கடலின்வழியாய்ப்போய், உலூக்கியாத் தேசத்து மீறாப் பட்டினத்திற்
6 சேர்ந்தோம்—.அங்கே இத்தாலியாத்தேசத்திற்குப்போக, எத்தனமான அலேக்குசந்தரியாப் பட்டினத்துக் கப்பலைச் சேனைத்தலைவன்கண்டு, எங்களையதிலேற
7 ப்பண்ணினான்.— காற்று எங்களுக்குத் தடைபண்ணினதினாலே,நாங்கள் அனேகநாள் மிருதுவாய்ப்போய், வருத்தத்தோடே கினிதுப் பட்டினத்துக்கெதிரேவந்து, கிரேத்தாதீவின் கீழ்ப்புறமான சலுமோன் என்னுமிடத்திற்கு எதிராய்ப்
8 போய், வருத்தத்தோடே அதைக்கடந்துகலூஸலீமனஎன்னப்பட்டவிடத்திற்கு

வந்தோம் இலசேயப் பட்டினம் அதற்
9 குச் சமீபமாயிருந்தது.— அதுவரைக்
கும் மிகுந்தகாலஞ்சென றபடியினாலும்
உபவாசப் பண்டிகைநாளுங் கழிந்து
போனதால், அதிகமாய்ப் போகிறது
மோசம் வருதற்கு ஏதுவானபடியினா
10 லும், பவுல் அவர்களைநோக்கிப்.—புரு
ஷரே, இந்த யாத்திரைக் கப்பலிலுள்ள
சரக்குக்களுக்குங் கப்பல்களுக்கும் மாத்
திரமல்ல, நம்முடைய சீவனுக்குங் கூட
வருத்தமும் மிகுந்த சேதமுமாயிருக்கு
மென்று காண்கிறேனென்று எச்சரித்தா
11 ன்.-சேனைத்தலைவனோ பவுலினாற்சொ
ல்லப்பட்டவைகளைப் பார்க்கிலும் மாலு
மியையுங் கப்பற்காரனையும் அதிகமாய்
12 நம்பினான்.—அல்லாமலும் அந்தத்துறை
மழைகாலத்தில் தங்குதற்குத் தகுதியல்
லாதபடியினாலே தென்மேற்கேயும் வட
மேற்கேயும் நோக்குகிற பினீகஸ் என்னு
ங் கிரேத்தா தீவின் துறைமுகத்திலே ம
ழைகாலத்திற்குத் தங்குதற்கு அங்கேசே
ரக்கூடுமானாற் சேரும்படிக்கு இவ்விட
மிவிட்டுப் புறப்படவேண்டுமென்று அநி

கம்பேர் ஆலோசனை சொன்னார்கள்.—
13 மேலுந் தென்றல் மிருதுவாய் அடித்த
படியால் அவர்கள் தங்கள் யோசனையின்
படி நிச்சயமாய் நடக்குமென்றெண்ணி
அவ்விடம் விட்டுப்பேர்ந்து, கிரேத்தாதீ
14 வுக்கருகாய்ப் போனார்கள்.—சிலகாலத்
துக்குப் பின்போ ஐரோக்கிலிதோனென்
னப்பட்ட கடுங்காற்று அதில் மோதிற்று
15 —கப்பல் அதில் அகப்பட்டுக்கொண்டு
காற்றுக்கு எதிர்த்துப் போகமாட்டாத
படியினாலே நாங்கள் காற்றின்போக்கி
லே கொண்டு போகப் பட்டோம்.—
16 அப்படிக்கலவுதையென்னப் பட்ட ஒரு
சின்னத் தீவைக் கடந்தோடுகையில், ஓ
டத்தை வசப்படுத்திக் கொள்ளுதற்கு
17 மிகுந்த வருத்தமுண்டாயிருந்தது.—அ
தைஅவர்கள் தூக்கியெடுத்தபின்பு, எல்
லாருடைய உதவியினாலுங் கப்பலைச் சுற்றி
க்கட்டிச் சொரி மணலிலே விழுவோ
மென்று பயந்து, பாய்களை இறக்கி, இ
வ்விதமாய்க் கொண்டுபோகப்பட்டோம்
18 —மேலும் நாங்கள் பெருங்காற்று மழை
யினாலே மிகவும் அடிக்கப்பட்டபடியால்

மறுநாளிலே சில பாரத்தைக் கடலிலே
19. றிந்தார்கள்.—மூன்றாம்நாளிலே கப்பலி
ன் தளபாடங்களை யெங்கள் கைகளினா
20 லே யெடுத்தெறிந்தோம்.—அநேகநா
ளாய்ச் சூரியனாகிலும் நட்சத்திரங்களாகி
லுங் காணப்படாமல் மிகுந்த பெருங்
காற்றும் மழையும் எங்களைச் சூழ்ந்திரு
ந்தபடியினாலே, தப்பிப் போவதற்கான
நம்பிக்கையெல்லாம் அற்றுப்போயிற்று
21 —அப்படியிருக்கையில், மிகுந்தகாலம்
அவர்கள் போசனம்பண்ணாமல் இருந்த
பொழுது, பவுல் அவர்களுக்குள்ளே
எழும்பிச் சொன்னது, இந்த வருத்த
முஞ் சேதமும் வாராதபடிக்கு நீங்கள்
என் சொல்லுக்குச் செவிகொடுத்துக்,
கிரேத்து தீவைவிட்டுப் புறப்படாமலிரு
22 க்கவேண்டியதாயிருந்தது,— இப்பொ
ழுது திடசித்தமாயிருங்களென்று உங்
களை வேண்டிக்கொள்ளுகிறேன். கப்ப
ல்சேதமேயன்றி, உங்களிலொருவனுக்கு
23 ம் பிராண சேதம் வருவதில்லை.—எப்ப
டியென்றால், நான் ஆதீனமாயிருந்து
ஆராதனை செய்கிற பராபரனுடைய

தூதன் இந்த இராத்திரியிலே என்னிடத்தில்வந்து நின்று, பவுலுவே, பயப்படாதிரு, நீ இராயனுக்கு முன்பாக நிற்கவேண்டும்.-அல்லாமலும் உன்னுடனே கூட யாத்திரையாய்வருகிறயாவரையும்பராபரன் உனக்குத் தயவு பண்ணினரென்றான்

24 ண்டும்.-அல்லாமலும் உன்னுடனே கூட

25 -ஆனபடியினலே, புருஷரே! திடசித்தமாயிருங்கள். எனக்குச் சொல்லப்பட்ட பிரகாரமாகவே நடக்குமென்று பராபர

26 னை நம்புகிறேன்.—நாம் ஒரு தீவிலே விழுகிறதுமாத்திரம் நடக்கவேண்டுமென்றான்.

27 பதினன்காம் இராத்திரியான பொழுது, நாங்கள் ஆதிரியாக் கடலில் அலைந்து திரிகையில், நடுச்சாமத்திலே கப்பலாட்களுக்கு ஒரு கரை கிட்டியிருக்கி

28 றதாய்த் தோன்றிற்று —உடனே யவர்கள் சலத்தின் அளவைச் சோதித்து, இருபதுபாகமென்று கண்டார்கள். சற்று அப்புறம்போனபொழுது, மறுபடியுஞ் சோதித்துப், பதினைந்து பாகமென்றுக

29 ண்டு,-பாறையிடங்களில் விழுவோமென்றுபயந்து, கப்பலின் பின்பக்கத்திலிருந்

து நாலு நங்கூரங்களைப்போட்டு, உதய
ம் எப்பொழுதுண்டாகுமென்றிருந்தார்
30 கள்.—கப்பல் மனிதர்களோ, கப்பலை
விட்டோடிப்போக வகைதேடித், தாங்
கள்கப்பலின் முன்பக்கத்திலிருந்து நங்
கூரங்களைப் போட மனதுள்ளவர்கள்
போல், ஓடத்தைக்கடலிலிறக்கையிற்,—
31 பவுல் சேனைத்தலைவனையும் போர்ச்சே
வகரையும் நோக்கி, இவர்கள் கப்பலிலி
ராவிட்டால், நீங்கள் தப்பிப்போகமாட்
32 டீர்களென்றான்.—அப்பொழுதுபோர்ச்
சேவகர் ஓடத்தின் கயிறுகளை அறுத்து,
33 அதைத் தாழவிழவிட்டார்கள்.—உதயமா
கத் தொடங்கினபொழுது, எல்லாரும்
போசனம்பண்ணுதற்குப், பவுல் அவர்க
ளைத் தயிராய்ப்படுத்திச் சொன்னது, நீங்
கள் ஒன்றுஞ் சாப்பிடாமற் பட்டினியாய்
க் காத்திருக்கிறது இன்றுபதினாலாம் நா
34 ளாயிற்றே.—ஆகையாற் போசனம்பண்
ணும்படி உங்களுக்குப் புத்திசொல்லுகி
றேன். நீங்கள் தப்புவதற்கு அதுவே உத
வியாயிருக்கும். உங்கள் தலைகளிலிருந்து
ஒருமயிரும் விழாது என்றுசொல்லி,—

அப்பத்தை யெடுத்துக்கொண்டு, எல்லா
ர்முன்பாகவும் பராபரனைத் தோத்திரித்
து, அதைப் பிட்டுப் புசிக்கத்தொடங்
36 கினன்.—அப்பொழுது மற்றெல்லாருந்
திடசித்தமடைந்து, போசனம்பண்ணி
37 னர்கள். கப்பலில் இருநூற்று எழுபத்
38 தாறு பேரிருந்தோம்—திருத்தியாகப் பு
சித்த பின்பு, அவர்கள் கோதும்பையை
க் கடலிலெறிந்து, கப்பலை இலகுவாக்கின
39 ர்கள்.—உதயமானபொழுது இன்னபூமி
யென்றறியாமற், சமமானகரையுள்ள ஒரு
துறைமுகத்தைப் பார்த்து, அங்கேபோ
கக் கூடுமானால் அவ்விடத்திற்குத் தானே
கப்பலைப் போகப்பண்ணவேண்டுமென்
40 று யோசனையா யிருந்து,— நங்கூரங்க
ளையறுத்துக், கடலிலேவிட்டுச், சுக்கானு
டைய கட்டுகளையுந் தளரவிட்டுச்சின்னப்
பாயைக் காற்றுக்கு விரித்துக், கரைக்கு
41 நேராய்ப் போகையில்,— இருபுறமும்
கடலுள்ள ஒரிடத்திலே சென்று கப்பல்
தட்டிற்று. அதின்முன்பக்கம் அசைவா
மலூன்றியிருந்தது, பின்பக்கமோ அலை
களின் பலத்தினாலேயுடைந்துபோயிற்று

42 —அப்பொழுது காவலிலிருந்தவனொரு வனும் நீந்தி ஓடிப்போகாதபடிக்கு, அவர்களைக் கொலைசெய்ய வேண்டுமென்று போர்ச்சேவகர் யோசனையாயிருந்தார்கள்.—43 அவர்களுடைய தலைவனோ பவுலுவைக்காப்பாற்ற மனதாயிருந்து, அவர்களுடைய யோசனையைத்தடுத்து நீந்தத் தக்கவர்கள் முந்திக்கடலில் விழுந்து, 44 கரையேறவும்,—மற்றவர்களிற் சிலர் பலகைகளின்மேலுஞ் சிலர் கப்பல்த் துண்டுகள்மேலும் போய்க் கரையேறவுங் கட்டளையிட்டான். இவ்விதமாய் எல்லாருந் தப்பிக் கரைசேர்ந்தார்கள்.

---

## உஅ. அதிகாரம்.

1 அவர்கள் தப்பிக் கரைசேர்ந்த பின்பு அந்தத் தீவின் பேர் மெலித்தாவென்று 2 அறிந்தார்கள்.—அன்னியராகிய அந்தத் தீவார் எங்களுக்கு மிகுந்த அன்பைக்காண்பித்தார்கள். அவ்வேளையிலிருந்த மழைக்காகவுங் குளிர்ச்சிக்காகவும் அவர்கள் நெருப்பை யுண்டுபண்ணி எங்களனைவரையுஞ் சேர்த்துக்கொண்டார்கள்.—

3 அப்பொழுது, பவுல் சில விறகுகளைவாரி அந்த நெருப்பின்மேற் போடுகையில், ஒரு விரியன் பாம்பு அனலினாலே புறப் பட்டு, அவனுடைய கையைச் சுற்றிக்
4 கொண்டது.—தீவார் அந்தப் பொல்லாத பூச்சியை அவனுடைய கையிலே தொங்கக்கண்டபொழுது, மெய்யாய் இந்த மனிதன் கொலைபாதகன். அவன் சமுத்திரத்திற்குத் தப்பி வந்தும், பழியானது இவனைப்பிழைக்க ஒட்டவில்லையென்று, தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டார்
5 கள்.—அவனோ அந்தப்பூச்சியைத் தீயிலே உதறி. ஒரு தீமையும் அடையாதிருந்
6 தான்.—அவர்கள் இவன் வீக்கங்கொண்டு, சடுதியாய் மரித்து விழுவானென்று காத்திருந்தார்கள். மிகுந்தகாலம் அவர்கள் அப்படிக் காத்திருந்து, சேதம் எவ்வளவும் அவனுக்கு வாராததைக் கண்டபொழுது அவர்கள் வேறு சிந்தையையடைந்து, அவனைத்தேவனென்று சொல்லிக்
7 கொண்டார்கள்.—மேலும் அவ்விடத்திற்குச் சமீபமாய் அந்தத் தீவுக்கு முதலியாகிய புபிலி என்று பேர்கொண்ட

வனுடைய காணிபூமியிருந்தது, அவன்
எங்களை ஏற்றுக்கொண்டு, மூன்றுநாளு
ம் பட்சமாய் விசாரித்துக்கொண்டான்.
8 —புபிலியினுடைய தகப்பன் சுரத்தோடு
ங் கழிச்சலோடுங்கிடந்தான். பவுல் அவ
னிடத்திற் போய் வேண்டுதல்பண்ணி அ
வன்மேலே தன் கைகளைவைத்து, அவனை
9 க் குணமாக்கினான்.-அப்படி நடந்த பொ
ழுது தீவிலேயிருந்த மற்றவியாதிக்காரரு
10 ம்வந்து, குணமாக்கப்பட்டார்கள்.—அவ
ர்கள் எங்களை மிகவுங் கனஞ்செய்து,
நாங்கள்கப்பலேறின பொழுது, எங்களு
க்கு வேண்டியவைகளை ஏற்றினார்கள்.—
11 மூன்றுமாதஞ் சென்ற பின்பு, தீவிலே
மழைகாலத்திற்குத் தங்கியிருந்த மிதுன
ம் என்னும் அடையாளமுள்ள அலெக்கு
ச்சந்திரியப் பட்டினத்துக் கப்பலிலே நா
12 ங்கள் ஏறிப் புறப்பட்டுப் போய்ச்,—சீர
க்கூசை பட்டினத்தைச் சேர்ந்து, அங்கே
14 மூன்றுநாள் தங்கிப்,—பின்பு அவ்விடம்
விட்டு (சிசிலிதீவைச்) சுற்றியோடி, இரே
கியு பட்டினத்திற்கு வந்து, ஒரு நாளுக்
குப் பின், தென்றற் காற்றெடுக்கையில்,

இரண்டாம்நாளிலே புத்தேயோலி பட்
14 டினத்திற்கு வந்து,—அங்கே சகோதர
ரைக் கண்டோம். அவர்கள் ஏழுநாள் தங்
களிடத்திலிருக்கும்படி யெங்களைவேண்
டிக்கொண்டார்கள். அந்தப்படி நாங்கள்
(இருந்து) பின்பு உரோமை புரிக்குப்
15 போனோம்.—அவ்விடத்திலுள்ள சகோத
ரர் எங்கள் சங்கதிகளைக் கேள்விப்பட்டுப்
புறப்பட்டுச் (சிலர்) அப்பியுபுரமென்னு
ம் இடம்வரைக்குஞ் (சிலர்) மூன்று சத்
திரமென்னுமிடம்வரைக்கும், எங்களுக்கு
எதிர் கொண்டு வந்தார்கள். அவர்களைப்
பவுல்கண்டு பராபரனைத் தோத்திரஞ்
16 செய்து திடன்கொண்டான்.— உரோ
மைபுரியிலே நாங்கள் சேர்ந்த பொழுது
சேனைத்தலைவன் தன் காவலிலிருந்தவர்க
ளைச் சேனாதிபதிக்கு ஒப்புக்கொடுத்தா
ன். அப்பொழுது பவுல் தன்னைக்காத்தி
ருக்கும்படியான சேவகனுடனே கூடத்
தனித்திருக்கும்படிக்கு உத்தரவு பெற்று
க்கொண்டான்.
17 மூன்றுநாளைக்குப் பின்பு, பவுல் யூத
ரிற் பிரதானமானவர்களைக் கூடி வரவ

ழைத்.தான். அவர்கள் கூடி வந்திருந்த பொழுது, அவன் அவர்களுடனே சொன்னது, சகோதரர்களே (நமது) சனத்துக்காகிலும் (நமது) முன்னோர்களின் முறைமைகளுக்காகிலும் விரோதமான தொன்றையும் நான்செய்யாமலிருந்தும், காவலில் வைக்கப்பட்டு, எருசலேமிலிருந்து, உரோமர் கைகளில் ஒப்புக் கொடுக்க
18 ப் பட்டேன்.—அவர்கள் என் காரியத்தை விசாரித்தபொழுது, மரணத்துக்கு ஏது வான, குற்றமொன்றையும் என்னிடத்திற் காணுதபடியினுலே, என்னை விடுதலையா
19 க்க மனதாயிருந்தார்கள்,— யூதர்களோ எதிர் பேசின பொழுது, நான் இராயருக்கு அபயமிடும்படிக்குப் பலவந்தப்பட்டேன். என்தேசத்தார்மேலே யாதொரு குற்றஞ்சாற்ற மனசில்லாமல் அப்படிச்
20 செய்தேன்.— இந்தச் சங்கதியைக்குறித்து நான் உங்களைக்காணவும், உங்களுடனேபேசவும், உங்களை யழைப்பித்தேன். இஸ்ரவேலருடைய நம்பிக்கையினிமித்தமே இந்தச்சங்கிலியாற் கட்டப்பட்டிருக்
21 கிறேனென்ருன்.—அவனுடனே யவர்கள்

சொன்னது, உன்னைக்குறித்து யூதேயா விலிருந்து காகிதங்கள் எங்களிடத்தில் வந் ததுமில்லை (அங்கேயிருந்து) வந்த சகோ தரரிலொருவனும் உன்மேற் பொல்லாங் கை அறிவித்துச் சொன்னதுமில்லை.—
22 இந்தமார்க்க வகுப்போ எங்கும் விரோ தமாய்ப் பேசப்படுகின்றதென்று நாங்க ள் அறிந்திருக்கிறபடியால், நீ சிந்திக்கிற வைகளை உன்னிடத்திலேதானே கேட்க
23 விரும்புகிறோமென்றார்கள்.— அதற்காக அவர்கள் அவனுக்குக் குறித்த நாளிலே அனேகம்பேர் அவன் தங்கின இடத்தி லே வந்தார்கள். அப்பொழுது அவன் கா லைதொடங்கிச் சாயங்காலம் வரைக்கும், மோசேயின் வேதநூலிலுந் தீர்க்கதரிசி களின் ஆகமங்களிலுமிருந்து, இயேசுவுக் குரியவைகளை யவர்களுக்குப் போதித் துப் பராபரனுடைய இராச்சியத்தைக்கு றித்துச் சாட்சிகொடுத்து, வியாக்கியான
24 ம் பண்ணினான்,—அவன் சொன்னவைக ளைச் சிலர் ஒத்துக்கொண்டார்கள். சில
25 ரோ விசுவாசியாதிருந்தார்கள்.—இப்படி யவர்கள் ஒருவரோடொருவர் இசைவாயி

ராமல், வெளியேபோகையிற், பவுல் அ
வர்களுக்குச் சொன்ன ஒரேவாக்கியமாவ
26 து.—இந்தச் சனங்கள் கண்களினாலே கா
ணாமலுங் காதுகளினாலே கேளாமலும், இ
ருதயத்தினாற் சிந்தித்துக்கொள்ளாமலும்
மனந்திரும்பாமலும் என்னாலே ஆரோக்
கியம் அடையாமலுமிருக்கும்படிக்கு, இ
வர்கள் கடினமாக்கப்பட்ட இருதயமு
டையவர்களுமாய் வருத்தத்தோடே கே
ட்கிறகாதுள்ளவர்களுமாய் மூடிக்கொண்
டிருக்கிற கண்களையுடையவர்களுமாயிரு
27 க்கிறபடியினாலே,—நீங்கள் உற்றுக்கேட்
டுஞ் சிந்தித்துக் கொள்ளாமலிருப்பீர்கள்.
உற்றுப் பார்த்தும், அறியாமலிருப்பீர்
களென்று இந்தச் சனங்களிடத்திற்குப்
போய்ச் சொல்லு, என்கிறதைப் பரிசுத்த
ஆவி எசாயாத் தீர்க்கதரிசியைக்கொண்டு,
நம்முடைய மூன்னோர்களுடனே நன்று
28 ய்ச் சொன்னார்,—ஆதலாற்பராபரனுடை
ய இரட்சிப்புப், புறத் தேசத்தார்களுக்கு
அனுப்பப் பட்டதென்று நீங்கள் அறிந்
துகொள்வீர்களாக, அவர்களே அதற்கு
29 ச்செவிகொடுப்பார்களென்றான். - இவை

களை அவன் சொன்ன பின்பு யூதர்கள் தங்களுக்குள்ளே மிகவுந் தருக்கம்பண்ணிக் கொண்டு போய்விட்டார்கள்.

௩0 பின்பு பவுல் தனக்காகக் கூலிக்குவாங்கியிருந்த வீட்டிலே இரண்டுவருடம் முழுவதுந் தங்கித், தன்னிடத்தில்வந்தயாவரை

௩1 யுமேற்றுக்கொண்டு,—மிகுந்த தயிரியத்தோடுந் தடையில்லாமலும் பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்துப் பிரசங்கித்துக், கத்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் விசேஷங்களை உபதேசித்துக் கொண்டான்.

முற்றிற்று.

